# ரஜபுத்திர ஆதிக்கத்தின் அஸ்தமனம்

ஆசிரியர் :

ரமேச சந்திர தத்தர் I.C.S.







நவயுகப் பிரசுராலயம்
காரைக்குடி

# ரஜபுத்திர ஆதிக்கத்தின் அஸ்தமனம்


ஆசிரியர்

**ரமேச சந்திர தத்தர்,** ஐ. ஸி. எஸ்.

மொழிபெயர்ப்பாசிரியர்

**அ. கி. ஜயராமன்**






காரைக்குடி

# பதிப்புரை

கதைகள், நவீனங்கள் என வெளிவருவனவற்றுள் நூற்றில் ஒரு சில நீங்கலாகப் பிற அனைத்தும் படிப்போரின் அறிவுக்கும், எண்ணத்துக்கும் கேடு செய்வனவாயமைந்து, நிரந்தரமான நன்மை பயக்கும் அறிவு வளர்ச்சிக்காகச் செலவழிக்க வேண்டிய அருமையான காலத்தை விழுங்கி விடுகின்றன எனக் கூறினல் தவருகாது. அதிர்ஷ்டவசமாக ஸ்ரீ. ரமேச சந்திரரின் நூல்களி னுட்பொருள், இனிப்புள் பொதிந்த மருந்தேபோல் மனித சமுதாயத்தின் பேரிலட்சியத்தை வளர்க்கத் துணைசெய்வது மகிழ்ச்சிக் குரியதாகும்.

இந்நூலில் ஈடும் எடுப்பு மில்லா இந்திய சரித்திர புருஷர்களின் வாழ்க்கையோடு தொடர்பு பெற்றிருந்த வீரம், காதல், தேசபக்தி ஆகியவற்றைப் பரக்கக் காண்கின்ரேம். படிப்போரின் உள்ளத்தில் தூய்மையான எண்ண வளர்ச்சிகளைத் தோற்றுவிப்பனவாயும் அவை அமைந்திருக்கக் காண்கின்ரேம்.

எங்கள் வெளியீடாக வெளிவந்த ஸ்ரீ. ரமேச சந்திரரின் மற்ரெரு நூலான 'மகாராஷ்டிர ஜீவன் உதயம்' தமிழ்நாட்டில் நன்கு வரவேற்கப்பட்டிருக்கிறது.

மிக உன்னதமான இலட்சியத்திற்காக ரஜபுத்திரர்கள் சிந்திய இரத்தம், இந்நூலைப் படிப்பதன் மூலம் நம் நாட்டு மக்களின் வீர சௌந்தரியத்திற்கு வித்தாகுமானல், இதனை வெளியிட்டதன் பயனைப் பெற்றதாக நாங்கள் அக மகிழ்வோம்.

காரைக்குடி.
19–10–45

நவயுகப் பிரசுராலயம்.

# ரஜபுத்திர ஆதிக்கத்தின் அஸ்தமனம்

## I

## வேட்டை

**கி. பி. 1576-ம்** வருஷம் வசந்த கால ஆரம்பம். மேவார் பிரதேசத்தைச் சேர்ந்த சூரியமஹல் என்ற பிரசித்தமான மலைக் கோட்டையில் ஒரே கோலாகலமாக இருந்தது. அந்தக் கோட்டை ஒரு மலைச் சிகரத்தில் இருந்தது. கோட்டையைச் சுற்றி நாற்புறமும் மரங்களடர்ந்த மலையடுக்குகளே காணப்பட்டன. காலைக் கதிரவன் பொற்கிரணங்களை அள்ளி வீசிக்கொண்டிருந்தான். இளங் காற்று மெல்ல வீசிக்கொண்டிருந்தது. அதன் தீண்டுகையால் மலையிலுள்ள தாவர வர்க்கங்கள் மெல்ல அசைந்தாடிச் செவிக்கினிய ஓர் ஒலியைப் பரப்பிக்கொண்டிருந்தன.

இலைகளில் பனித் துளிகள் முத்துக்களைப் போல் ஒட்டிக்கொண்டிருந்தன. வசந்த காலப் பட்சிகள் மரக் கிளைகளில் அமர்ந்து மதுரமான மொழியில் இசை பரப்பிக்கொண்டிருந்தன. அதே சமயம் கடகட

வென்ற சப்தத்துடன் கோட்டைக் கதவு திறந்தது. ஆயுதபாணிகளான நூறு குதிரைவீரர்கள் வெளிப் பட்டார்கள். அவர்கள் மலைகளில் ஏறியும் இறங்கி யும் சென்று, ஓர் அடர்ந்த கானகத்தருகே வந்து உற்சாகத்துடன் அதனுள் புகுந்தார்கள்.

அன்று வேட்டையின் முதல் நாள். அதாவது, வசந்த கால ஆரம்பத்தில் நடக்கும் வருஷாந்திர வேட்டையின் முதல் நாள். அன்றைய வேட்டையின் பலாபலன்களைக் கொண்டுதான் அந்த வருஷம் பூரா வும் நடக்கப் போகும் யுத்தங்களின் சுப அசுபங்களை நிர்ணயிப்பது வழக்கம். ஆகையால், சூரியமஹல் கோட்டையின் தலைவனான துர்ஜயஸிம்மன் நூறு குதிரைவீரர்களுடன் வேட்டையாடப் புறப்பட் டான். மேவார் பிரதேசத்திலேயே சந்தாவத் வம்சத் தார்தான் போரில் முன் நிற்பார்கள் என்பது பிரசித் தம். அந்தச் சமயம் அந்த வம்சத்தில் துர்ஜயஸிம்மன் ஒப்பாரும் மிக்காருமில்லாத வீரனாக விளங்கினான். அப்பொழுது அவனுக்கு வயது முப்பதுக்கு மேல் இருக்காது. நல்ல ஆஜானுபாகு. வஜ்ரம் போன்ற உறுதியான சரீரக் கட்டுடையவன். துர்ஜயஸிம்மனின் கூட்டாளிகளும் வீரத்தில் மிக்க சந்தாவத் வம்சத் தவர்களே.

துர்ஜயஸிம்மனுடன் எல்லோரும் காட்டில் நுழைந்தார்கள். முதலிலேயே மிருகங்களை விரட்டும் பொருட்டு, காட்டு வேடர்களை அனுப்பியிருந்தார் கள். ஆனால் அவர்களில் யாருக்கும் ஒரு மிருகமாவது தட்டுப்படவில்லை. அதனால் அவர்கள் உற்சாகம் குறையவில்லை. அவர்கள் கானில் இங்குமங்கும் சுற்றலானார்கள். அந்தப் பொழுது வெகு அழகாக

இருந்தது. செடி கொடிகள் சூரிய கிரணங்களுடன் விளையாடுவன போன்று இருந்தன. சில இடங்களில் பகல்கூட இரவு போல் தோன்றும்படியாக நிழல் தட்டியிருந்தது. வீரர்கள் கானிலும், மலையிலும், நீர்வீழ்ச்சிகளிலும் சென்று திரிந்து, வேட்டை தேடிக் கொண்டிருந்தனர். எல்லோரிடமும் உற்சாகமும் ஆனந்தமும் குடிகொண்டிருந்தன. அரசர்களுக்கு வேட்டையாடுவதைவிட உற்சாகம் அளிக்கக்கூடிய வேலை வேறொன்றுமில்லை. அதற்குத் தகுந்த காலம், அழகானதும் ஆனந்தகரமுமான வசந்த ருதுவைப் போன்றது வேறில்லை.

வெகு நேரம்வரை அந்த வீரர்கள் வனத்துள் சுற்றியலைந்து ஒரு சமவெளிக்கு வந்து சேர்ந்தார்கள். அந்தச் சமவெளிக்கு எதிரில் மரங்கள் சூழ்ந்த ஒரு மலைக் கோட்டை காணப்பட்டது. துர்ஜயஸிம்மன் மந்திரியை அழைத்து, 'பூமியர்களின்* கோட்டை இந்தக் குன்றின்மீதா இருக்கிறது?' என்று கேட்டான்.

'ஆமாம். இந்த மாதிரியான பலமுள்ள கோட்டை இந்த வன பூமியர்களுக்குப் பதிலாக வேறு வீர புருஷர் யாரிடமாவது இருந்தால், மகாராஜாவுக்கு இந்த யுத்த காலத்தில் எவ்வளவோ உதவியாக இருக்கும்!' என்றார் மந்திரி.

'பூமியர்களுக்குப் போர் புரியத் தெரியாவிட்டாலும், சமயம் வந்தால், எதிரிகளிடமிருந்து தங்கள் கோட்டையைக் காப்பதில் நல்ல தீரம் காட்டுவார்கள்!' என்றான் துர்ஜயஸிம்மன்.

---

* பூமியர்-ஒரு வகைக் குடியானவர்.

'ஆமாம், அது வாஸ்தவம். ஆனால், அவர்களுடைய கைகள் பயிர்த் தொழிலில் காட்டுவது போன்ற வேகத்தை அம்பெறிவதில் காட்டுவதில்லை!'

எல்லோரும் கொல்லென்று சிரித்தார்கள். அவர்களில் ஒரு வீரன், 'பூமியர்கள் கோட்டையைக் காப்பதைவிட, பூமியைக் காப்பதில் அதிகமாக முனைந்தவர்களா யிருக்கிறார்கள். கோட்டையின் சொந்தக்காரனாவது சில சமயம் கோட்டையின்மீதுள்ள தன் அதிகாரத்தை இழந்துவிடுவது உண்டு; ஆனால் பூமியர்களின் பூமியோ, பரம்பரையாக அவர்களுடைய சந்ததியாரின் அதிகாரத்திலேயே இருந்து வருகிறது. அதை எதிரியும் எடுத்துக்கொள்ள முடியாது; அரசனும் எடுத்துக்கொள்ள முடியாது!' என்றான்.

'எலி வளையில் இருக்கும்போது அதை வெளிப்படுத்துவது எவ்வளவு கஷ்டமோ, அவ்வளவு கஷ்டம் பூமியர்களைக் கோட்டையினின்றும் வெளியேற்றுவது!' என்றார் மந்திரி. வீரர்கள் மீண்டும் நகைத்தார்கள்.

சைனிகர்கள் வெகு நேரம் காட்டில் சுற்றியலைந்தும் வேட்டையோ ஒன்றும் அகப்படவில்லை. முந்தின வருஷம் பல காட்டுப் பன்றிகள் காணப்பட்ட இடத்தில்கூட அந்த வருஷம் ஒன்றுமே காணப்படவில்லை. சுற்றிச் சுற்றி, மத்தியானமாயிற்று. காட்டு வேடர்கள் அடர்ந்த புதர்களுக்குள் புகுந்து தேடினார்கள். ஆயினும் வேட்டைக்கு ஒன்றும் அகப்படவில்லை. வெய்யிலோ கடுமையாகிவிட்டது. வீரர்கள் தங்கள் நெற்றிகளில் துளிர்த்த வியர்வையைத் துடைத்துக் கொண்டு, ஒருவரை யொருவர் பார்த்து, 'என்ன,

இந்தக் காட்டில் ஒரு மிருகம்கூடக் காணப்படவில்லையே! இந்த வருஷம் சூரியமஹாலுக்கு அசுபம் ஒன்றும் நேராதே?' என்று பேசிக்கொண்டனர்.

துர்ஜயஸிம்மன் சிறிது யோசித்துவிட்டு, 'சகோதரர்களே, நமது குதிரைகள் களைத்துவிட்டன. நாமும் களைப்படைந்திருக்கிறோம். இந்தச் சமயம் வேட்டை தேடி அநாவசியமாகப் பொழுதை வீணாக்குவது உசிதமன்று. வாருங்கள், நாமும் இளைப்பாறிக் குதிரைகளுக்கும் ஓய்வு கொடுப்போம்' என்றான். பிறகு, 'இந்த அகண்ட வனத்தில் எங்காவது ஒரு மிருகமாவது தென்பட்டால் துர்ஜயஸிம்மன் அதைக் கொல்லாமல் விடான். இல்லாவிட்டால், இன்றையிலிருந்து கையில் ஆயுதம் ஏந்தமாட்டான்!' என்றான். எல்லோரும் அந்தப் பேச்சை ஒப்புக்கொண்டு, ஓர் அடர்ந்த இடத்தை நோக்கி நடந்தார்கள்.

அவர்கள் போய்க்கொண்டிருந்த வனம் ரமணீயமாக இருந்தது. சூரியனின் வெப்பம் உள்ளே வீசாதபடி மரத்தின் இலைகள் கவிந்துகொண்டிருந்தன. சிற்சில இடங்களில் மாத்திரம் அந்த இலைகளின் இடைவெளியால் வெள்ளிக் கோடு போல் சூரிய கிரணம் பூமியில் இறங்கிக்கொண்டிருந்தது. இடம் சுத்தமாக இருந்தது. பசும் புல் தரைகள் ஓரே பசுமையாக இருந்தன. எங்கும் சாந்தி நிலவிக்கொண்டிருந்தது. மரங்களிலிருந்து விழும் ஓரிரண்டு இலைகளைத் தவிர வேறு எந்தச் சலனமும் இல்லை. அருகே ஒரு மலை அருவி வீழ்ந்துகொண்டிருந்தது. அதன் ஓசை காதிற்கு இன்பமளித்துக் கொண்டிருந்தது. சிறிது நேரம் அந்தக் குதிரைவீரர்கள் இயற்கையின் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

இயற்கை பசு மரங்களால் வனதேவிக்குப் பூஜை செய்வதைப் போல் அவர்களுக்குத் தோன்றியது.

குதிரைகளிலிருந்து இறங்கி, வீரர்கள் யாவரும் அந்த நிழலில் பசும் புல் தரையில் அமர்ந்தார்கள். ஆகாரத்திற்காகப் பழங்களும் கிழங்கு வகைகளும் முன்பே ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. பழைய முறைப்படி மகாராஜா துர்ஜயஸிம்மன் தன் தட்டிலிருந்து எல்லா வீரர்களுக்கும் கொஞ்சம் கொஞ்சம் பழத் துண்டுகளை எடுத்துக் கொடுத்தான். அவர்கள் எல்லோரும் அவற்றை வணக்கத்துடன் பெற்றுக் கொண்டார்கள். பிறகு ஏதேதோ கதை பேசிக் கொண்டிருந்தார்கள். முந்திய யுத்தங்களைப்பற்றிய பேச்சுக்களும் ஆரம்பமாயின.எப்படி அவர்கள் கோட்டையைக் கடந்து உள்ளே சென்றார்கள். எப்படிச் சத்துரு சேனையை ஹதம் செய்தார்கள், எப்படி ராணு அவர்களை வாழ்த்தினர், இவற்றைப்பற்றி யெல்லாம் பேசினார்கள்.

'இந்தத் தடவை டில்லி அதிபதியே மேவாரின் சத்துருவாகிவிட்டார். அவருடன் மார்வார், அம்பர், பிகானேர், பூந்தி ஆகிய தேசங்களின் அரசர்களும் மேவாரைத் தாக்க வருகின்றனர். ஆனல், ராணுவுக்குத்தான் வெற்றி! அவருக்குத் தோல்வி ஏற்பட்டால் சந்தாவத் வம்சத்தார் யுத்த பூமியிலேயே உயிரை விட்டுவிடுவார்கள். அவர்கள் போர்க்களத்தினின்றும் புறங்காட்டி போடுவதை அறியாதவர்கள்! அந்த வம்சத்தில் இன்றுவரை யாரும் போரில் புறங்காட்டியதில்லை!' — துர்ஜயஸிம்மனின் இவ்வீர மொழிகளைக் கேட்டு அவர்கள் உற்சாகத்துடன் ஆமோதித்தார்கள்.

'அக்பர் பாதுஷா எட்டு வருஷங்களுக்கு முன் சித்தௌரைக் கைப்பற்றினர். ராஜா உதயஸிம்மர் கோட்டையைக் கைவிட்டார்; ஆனால், அப்போது கூட ஸாலும்பராதிபதி ஸாஹிதாஸ் அதை விட வில்லை. சந்தாவத் வம்சத்தில் முக்கியஸ்தரான அவர் அப்போதும் கோட்டையை விடவில்லை!' என்று சொல்லி, சாரணதேவனை அழைத்து, அந்தச் சமயத்திய சகல கதைகளையும் அங்கிருந்த வீரர்களுக்குச் சொல்லுமாறு கட்டளையிட்டான் துர்ஜயஸிம்மன்.

வேட்டையாடும் நாட்களில் சாரணர்களும் கூட வருவது அக்காலத்திய வழக்கம். துர்க்கபதியின் ஆக்கினையைக் கேட்டு சாரணதேவன் ஸாஹிதாஸரின் வீரத்தை வர்ணிக்கலானன். சித்தௌர் அழிந்த போது துர்ஜயஸிம்மனும் அவனுடைய தோழர்களும் அந்தக் கோட்டையில் இருந்தார்கள். சாரணனின் வாயிலாக யுத்த வர்ணனைகளைக் கேட்டுக் கேட்டு அன்று நிகழ்ந்த எல்லாச் சம்பவங்களும் துர்ஜயஸிம்மனின் நினைவுக்கு வந்தன.

'வீரர்களே, நீங்கள் இன்றைய யுத்தத்தைக் கண்டிருக்கிறீர்கள். மகாராஜா துர்ஜயஸிம்மர் அன்று ஸாலும்பராதீசனுக்கு வலக் கரமாக இருந்தார். நீங்கள் ஸாஹிதாஸரின் வீரத்தைக் கண்டிருக்கிறீர்கள். சித்தௌரின் சூரியத்துவாரம் † தான் சந்தாவத்தின் யுத்த ஸ்தலம். ஸாஹிதாஸர் அன்று சூரியத்துவாரத்தை மறித்துக்கொண்டார். சந்தாவத்தார்கள் சூரியத்துவாரத்திலிருந்து காலைப் பின்னெடுத்து வைக்கவில்லை.

---

† சூரியத்துவாரம் - சித்தௌரின் பிரதானமான கோட்டை வாயில்.

'சமுத்திர அலைகள் காற்றினால் தள்ளப்பட்டு கரையில் வந்து மோதுவது போல், பகைவரின் சேனை மாறி மாறிச் சூரியத்துவாரத்தைத் தாக்கியது. ஆயினும் சந்தாவத்தார்கள் என்னும் பலம் பொருந்திய அணையில் மோதி மோதி அது திரும்பிச் சென்றது.

'காட்டில் தீ பரவினால், நெருப்பின் ஜ்வாலை வேகமாக நாற்புறமும் சூழ்ந்து வானளாவி வளர்வது போல், துருக்கியச் சேனாவீரர்கள் கோட்டையை நாற்புறங்களிலும் சூழ்ந்துகொண்டு தாக்கினார்கள். சாந்தாவத்தார்களின் சைனியம் மிகச் சொற்பமாயிருந்தும், வீரர்கள் போரில் நிகரற்றவர்களாகையால், மாறி மாறிப் பயங்கரமாகத் தாக்கிய எதிரிகளின் முயற்சிகளை அழித்ததோடு மட்டும் நில்லாமல், சூரியத்துவாரத்தினின்றும் முன்னேறிச் சென்று எதிரிகளோடு வீராவேசத்துடன் போர் புரிந்தார்கள்.

'மழை காலத்து மேகத்தைப்போல், மகம்மதிய சேனை கோட்டையை நாற்புறங்களிலும் கவ்வியது. எவ்வளவு மொகாலய சேனை கொல்லப்பட்டது! எத்தனை பேர் காயமடைந்தனர்! எத்தனை பேர் மீண்டும் எழுந்து கோட்டையைத் தாக்கினர்! சந்தாவத்தார்கள் மிக்க உறுதியுடன் போராடிக் கொண்டேயிருந்தனர். ஓர் அடிகூடப் பின் வாங்கவில்லை. ஸாஹிதாஸூம் நூற்றுக்கணக்கான எதிரிகளைத் தனியே வெட்டி வீழ்த்தினர். கடைசியில், சித்தௌருக்காகத் தம் இதயத்தின் உதிரத்தைப் பெருக்கி, ஒரு கிளையற்ற மரம் போலே, அவர் போர்க்களத்தில் சாய்ந்தார். துர்ஜயஸிம்மர் பாதுஷாவின் சேனையை எதிர்த்துப் போராடிக்

கொண்டே மூர்ச்சையடைந்தார். வீரர்களே! இப்பொழுதும் அவர் சிரத்தில் வாளினால் ஏற்பட்ட வடு இருக்கிறது. அந்தப் போரில் சந்தாவத்தார்கள் அநேகமாக மடிந்துபோயினர். ஆனால் துர்ஜயஸிம்மர், அப்போதும் சூரியத்துவாரத்தைக் காத்து நின்றார்!'

சாரணனின் இவ்விதமான போர் வர்ணனைகளை கேட்டு, சந்தாவத் வீரர்களின் உள்ளத்தில் வீரம் பொங்கியது. எல்லோரும் துர்ஜயஸிம்மனுக்கு ஜெய கோஷம் செய்தார்கள். அவர்களுடைய ஜயகோஷத்தால் அந்த அரணியமே குலுங்கி நடுங்கியது.

சிம்மத்தைப் போல் கர்ஜித்துக்கொண்டு துர்ஜயஸிம்மன் எழுந்து நின்றான். 'வீரர்களே! இன்று நம்மை நாற்புறமும் ஆபத்துக்கள் சூழ்ந்துகொண்டிருக்கின்றன. ஆனால் சந்தாவத்தார்கள் ஆபத்தை ஆபத்தென்று என்றுமே மதிப்பதில்லை. சித்தௌர் நம் கையிலிருந்து போய்விட்டது. ஆயினும் இப்போது காக்க வேண்டிய இடங்கள் எத்தனையோ இருக்கின்றன. இந்த மலைகளையும் குகைகளையும் ஸிஸோதியர் கையிலிருந்து யாரால் பிடுங்கிக்கொள்ள முடியும்? மகாராஜா உதயஸிம்மர் இப்பொழுது இல்லை. ஆனால் மாகாராணா பிரதாபஸிம்மரின் பிரதாபம் சற்றும் குறைந்ததன்று. அவரும் வாள் வித்தையில் சமர்த்தரே. மகாராணா பிரதாபஸிம்மர் வாழ்க! ஸிஸோதியர் வம்சம் வாழ்க! சந்தாவத் வம்சம் வாழ்க!' என்றான்.

வீரர்கள் உயர்ந்த குரலில் வெற்றி முழக்கம் செய்தனர். அம்முழக்கம் காடுகளைப் பிளந்து சென்று மேவாரின் மலைகளையும் நடுங்கச் செய்தது. துர்ஜய

ஸிம்மன் சாரணரிடம், 'நாம் மீண்டும் வேட்டைக்குப் புறப்படுவோம். வேட்டையைப் பற்றிய பாட்டுக்களைப் பாடுங்கள். அதனால் நாம் வேட்டையில் வெற்றியடைவோம்!' என்றான்.

சாரணர்கள், 'ஹே வீரர்களே! எட்டு வருஷங்கள் ஆகின்றன. சித்தௌரை டில்லி பாதுஷா கைப்பற்றிக் கொண்டார். டில்லி பாதுஷாவுக்கும் ஸிஸோதியர்களுக்கும் இது முதல் சண்டையன்று. கிட்டத்தட்ட முந்நூறு வருஷங்களுக்கு முன்பே, இந்த மாதிரி ஒரு முறை நடந்திருக்கிறது. டில்லி பாதுஷா அல்லாவுத்தீன் சித்தௌரைக் கைப்பற்றினார். ஆனால், சித்தௌர் ஸிஸோதியர்களின் தலைமீது விளங்கும் மாணிக்கம்! அது எத்தனை நாள் பகைவர் கையில் இருக்க முடியும்? அந்தத் தடவை ஹம்மீர தேவர் அதைப் பகைவர் வசத்திலிருந்து மீட்டார். இந்தத் தடவை பிரதாபஸிம்மர் மீட்பார்! நீங்கள் அந்த ஹம்மீர தேவரின் விருத்தாந்தத்தைக் கேளுங்கள். உடனே வேட்டைப் பாட்டுக்களையும் கேளுங்கள்!' என்று கூறிப் பின்வரும் கருத்துக்கள் கொண்ட பாடல்களைப் பாடினார்கள் :

'லக்ஷ்மணஸிம்மரின் மூத்த புதல்வன் உருஸிம்மன். யுவராஜனான உருஸிம்மன் கோட்டையைக் காக்கத் தன் உயிரை விட்டான். இந்த விஷயத்தை அறியாத ஸிஸோதியன் ஒருவன்கூட இருக்க மாட்டான். சித்தௌர் தாக்கப்பட்டதற்குப் பல வருஷங்களுக்கு முன்பு ஒரு நாள் உருஸிம்மன் வேட்டையாடக் கோட்டையை விட்டுப் புறப்பட்டான். ஆயுதங்கள் தாங்கிய நூறு வீரர்கள் அவனுடன் சென்றார்கள். வேட்டையாடுவதைவிட

ரஜபுத்திரர்களுக்கு உற்சாகமளிக்கக் கூடிய விஷயம் வேறொன்றுமில்லை.

'யுவராஜனின் கூட்டாளிகள் செய்த ஜய கோஷம் வான் முகட்டை எட்டியது. அவர்கள் ஒரு காட்டுப் பன்றியைப் பின் தொடர்ந்தார்கள். அந்தப் பன்றி பல வனங்களைச் சுற்றிச் சுற்றி ஓடியது. வீரர்களும் அதைப் பின் தொடர்ந்தார்கள். வெகு நேரத்திற்குப் பிறகு அந்த வராகம், பயிர் செழித்த ஒரு வயலில் புகுந்து, வீரர்கள் முன்னிலையிலிருந்து மறைந்தது. அங்கே ஏழைப் பெண் ஒருத்தி மேட்டில் நின்று வயலைக் காவல் செய்துகொண்டிருந்தாள். வீரர்கள் நிராசையடைந்து நிற்கும் போது, அவள், "நீங்கள் சற்று நில்லுங்கள். நான் பன்றியை வயலைவிட்டு வெளியேற்றுகிறேன்" என்றாள்.

'அவள் பெண்ணா, அல்லது மகிஷாசுரமர்த்தனியான துர்க்கா தேவியா என்பது தெரியாது. ஸ்திரீகளின் தோள்களில் அவ்வளவு பலம் இருக்குமா? ஸ்திரீகளின் இதயத்தில் அவ்வளவு தைரியமும் வீரமும் உண்டா? அந்தப் பெண் ஒரு மரக் கிளையை ஒடித்து, அதன் முனையைக் கூராக்கி, அதன் மூலம் காட்டுப் பன்றியைக் குத்தி வீரர் முன்னிலையில் கொண்டுவந்தாள். அந்த அற்புதத்தைக் கண்டு வீரர்கள் ஆச்சரிய மடைந்தார்கள்.

'சிறிது நேரம் பொறுத்து வீரர்கள் போஜனம் அருந்த உட்கார்ந்தார்கள். அதற்குள் அருகில் ஒரு குதிரை வரும் சப்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தார்கள். அதன் கால் ஒன்று ஒடிந்திருந்தது. அந்த ஏழைப் பெண் மேட்டில் நின்றுகொண்டு,

மண் கட்டிகளை வீசி எறிந்து பறவைகளை விரட்டிக்கொண்டிருந்தாள். அவளுடைய கல் ஒன்று குதிரையின் காலில் தாக்கி அதன் கால் நடக்க முடியாமல் போயிற்று.

'வீரர்கள் போஜனத்தை முடித்துக்கொண்டு, குதிரைமீதேறி மாலையில் விடுவந்து சேர்ந்தார்கள். வழியில் அதே பெண், தலையில் பால் நிறைந்த ஒரு பாத்திரத்துடன், இரண்டு கைகளிலும் இரண்டு எருமை மாடுகளைப் பிடித்துக் கொண்டு போனாள். உரூஸிம்மன் ஆச்சரியமடைந்து, அந்தப் பெண்ணின் பலத்தைப் பரீட்சிக்க எண்ணினான். ஒரு வீரனை அழைத்துக் குதிரையை அந்தப் பெண்ணின் பக்கம் வேகமாக விடும்படி கூறினான். குதிரை அதிவேகமாக ஓடியது; இன்னும் ஒரு கணத்தில் அவளைக் கீழே தள்ளிவிடப் போகிறது! இதை அந்த ரமணி பார்த்துவிட்டாள். ஆனால் அவள் அதற்குச் சற்றும் பயப்படவில்லை. தலையிலிருந்த பால் பாத்திரத்தையும் எடுக்கவில்லை, எதிரினின்று அகலவும் இல்லை. குதிரை அவளருகில் வந்ததும், எருமைகளில் ஒன்றைக் குதிரை மீது மோதினாள். எருமையின் மோதலால் குதிரையும் சாய்ந்தது, குதிரையில் சவாரி செய்தவனும் கீழே வீழ்ந்தான்.

'அந்த ஸ்திரீயின் அற்புதமான தைரியத்தையும் பலத்தையும் கண்டு உரூஸிம்மன் பிரமையடைந்தான். அந்தப் பெண்ணின் வரலாற்றை விசாரித்த பிறகு, அவள் சௌஹான் ஜாதியில் சந்தாவத் வம்சத்தைச் சேர்ந்த ஓர் ஏழையின் பெண் என்பது தெரிந்தது. உரூஸிம்மன் அந்த வீரக் கன்னிகையை மணந்தான். அவளுடைய

வயிற்றில் வீர சூடாமணியான ஹம்மீரதேவன் உதித்தான். அல்லாவுத்தீன் சித்தௌரின் மேல் படையெடுத்த பொழுது, முதலில் யுவராஜன் உருஸிம்மன் போராடி உயிர் துறந்தான். பிறகு அவனுடைய தந்தை ராணு லக்ஷ்மணஸிம்மன் போர் புரிந்து வீர சுவர்க்கம் புகுந்தான். அந்தச் சமயம் ஹம்மீரதேவனின் வயது பன்னிரண்டு. அப்பொழுது அவன் தன் தாயுடன் பாட்டனார் வீட்டில் இருந்தான். வாலிபமடைந்ததும், அவன் சித்தௌரை உத்தாரணம் செய்தான். சித்தௌரை உத்தாரணம் செய்தது உருஸிம்மனின் வசந்த வேட்டை என்று எண்ணிக்கொள்ள வேண்டும். உருஸிம்மன் வேட்டையாடி ஹம்மீரதேவனைப் போன்ற வீரப் பாலகனைப் பெற்றான். இன்று துர்ஜயஸிம்மர் வேட்டையாடப் புறப்பட்டிருக்கிறார். வீரர்களே, நீங்கள் தீரத்துடன் ஆயுதம் ஏந்துங்கள்! இன்று உங்கள் வேட்டை வெற்றி யடையும். நீங்கள் சித்தௌரைப் புனருத்தாரணம் செய்வதில் வெற்றி பெறுவீர்கள்!'

சாரணனின் உற்சாகம் நிரம்பிய வாக்கியங்களைக் கேட்டு வீரர்கள் துள்ளி எழுந்து குதிரையேறினார்கள். அம்பு போல் பறந்தன அசுவங்கள். வீரர்கள் நிராசை அடையவில்லை. பத்தடி தூரம் தாண்டியதும், ஒரு புதர் மறைவில் ஒரு பெரிய காட்டுப் பன்றியைக் கண்டார்கள். பார்ப்பதற்கு அது பயங்கரமாக இருந்தது. குதிரைவீரர்கள், அதன் தோற்றத்தையும் பலத்தையும் கண்டு களித்தார்கள். அவர்கள் தன்னை நோக்கி வருவதைக் கண்டு, வராகம் புதரிலிருந்து கிளம்பி மறுபுறம் ஓடிற்று. வீரர் உற்சாகத்துடன் அதைத் தொடர்ந்

தனர். அந்தச் சமயம் அந்த வீரர்களின் ஒவ்வோர் அங்கமும் உற்சாகத்தால் துடிப்புடனிருந்தது. வராகம் ஓடின திசையில் அவர்களும் ஓடினார்கள். குதிரைகள் பூமி அதிரும்படி விரைந்தோடின. வழியிலுள்ள கற் பாறைகளிலும் மரக் கிளைகளினூடும் புகுந்து வராகம் சிறிது தூரம் சென்று திரும்பிப் பார்த்தது. வீரர்கள் அருகில் நெருங்கி வந்துவிட்டனர். ஆகையால் அது அவர்களை எதிர்க்கச் சற்றுத் தயங்கி நின்றது. ஆனால் நூறு ஈட்டிகள் ஜொலித்துக் கொண்டு கிளம்பியதைக் கண்டதும் பயந்து காட்டிற்குள் ஓடி ஒரு புதரில் மறைந்தது. வீரரும் கூடவே சென்று அந்தப் புதரைச் சூழ்ந்துகொண்டார்கள். கூச்சலிட்டுப் புதரிலிருந்து அதை வெளிக் கிளப்ப முயற்சித்தார்கள். ஆனால், பன்றி உயிருக்குப் பயந்து வெளியே வரவே இல்லை. சிலர் கற்களை வீசினர், சிலர் புதரில் இலைகள் ஓசைப்பட்ட பக்கமாகத் தாக்கினார்கள். வெகு நேரம் இம்மாதிரிப் பொழுதை வீணாக்கி, வீரரும் களைத்தனர். ஆயினும் பன்றி புதரை விட்டு வெளியே தலைகாட்டவே இல்லை.

அப்பொழுது துர்ஜயஸிம்மன் தோழர்களிடம், 'சகோதரர்களே! இம்மாதிரி அநாவசியமாகச் சிரமப்பட வேண்டியதில்லை. பாருங்கள், சூரியன் மறைந்துகொண் டிருக்கிறான். இனி நேரமில்லை. குதிரைகளை இங்கேயே விட்டுவிட்டு நாம் கால் நடையாக மெல்ல மெல்ல முன்னேறுவோம். பன்றி இந்தப் புதருக்குள் இருக்கிறது. நாம் நாற்புறமாகவும் உள்ளே நுழைவோம். ஏதாவது ஒரு புறத்தால் அது வெளியே ஓட முயற்சிக்கும். இல்லா

விட்டால், நமது கையால் நடுவிலேயே உயிரை இழக்கும்' என்றான்.

இதைத் தவிர வேறு உபாயம் ஒன்றும் காணாமையால், வீரர்கள் குதிரைகளினின்றும் இறங்கி, மெதுவாக நாற்புறமும் பார்த்துக்கொண்டே புதரினுள் நெருங்கலானார்கள். இந்தத் தடவை பன்றி எப்படியும் வெளியே புறப்படும் என்று கையில் ஈட்டியை ஏந்திய வண்ணம் எல்லோரும் தயாராகச் சென்றனர்.

இவர்கள் வரும் சத்தம் கேட்டு, பன்றி குதித்தெழுந்து ஒரு பக்கமாக ஓடிற்று. மின்னலைப் போல் பாய்ந்தோடி, அருகேயிருந்த ஒரு வீரனின் காலைக் கீறிக்கொண்டு, அது ஒரே தாண்டலில் வெகு தூரம் சென்றுவிட்டது.

காயமடைந்தவனுக்கு உதவி செய்ய இரண்டொருவர் அங்கே தங்கினார்கள். மற்றவர்கள் குதிரையேறி வேகமாக அதைப் பின் தொடர்ந்தனர். அவர்கள் கையிலிருந்த ஈட்டிகள் இரத்த தாகத்தால் துடித்துக்கொண்டிருந்தன. பன்றி பல தடவை காட்டில் மறைந்தது, பல தடவை வெளிப்பட்டது. கடைசியில் ஓர் அடர்ந்த கானில் மறைந்தது. மாலையாகிவிட்டது. மெல்ல மெல்ல இருள் குவிந்து வந்தது. வீரர்கள் புதரிலும் வெளியிலுமாக அலைந்து வராகத்தைத் தேடினார்கள்.

துர்ஜயஸிம்மன் தனியாக ஒரு பக்கம் நுழைந்தான். அவனுடைய குதிரை மிகவும் களைத்துவிட்டது. அதன் உடலில் வியர்வை பொங்கி வழிந்துகொண்டிருந்தது. வாயிலிருந்து நுரை தள்ளிக்கொண்டிருந்தது. எனினும், அது வேகமாக முன்

னேறுவதில் சளைக்கவில்லை. நூறு வீரர்களில் துர்ஜயஸிம்மன்தான் ஒரே திரஷ்டியாகப் பன்றியைப் பின் தொடர்ந்துகொண்டிருந்தான். அந்த இருளில் வேட்டையைக் கண்டுபிடிப்பது வீரர்களுக்குக் கஷ்ட மென்றாலும், அவர்கள் அதைக் கஷ்டமாகக் கருதவே யில்லை. முன்பு எங்கே அவர்கள் பன்றி புகுவதைக் கண்டார்களோ, அங்கேயேதான் அது ஒளிந்திருந் தது.

இந்தத் தடவை பன்றிக்குக் கோபம் வந்து விட்டது. ஒரு ஜாமமாக இவர்கள் அதை இந்தப் புதருக்கும் அந்தப் புதருக்குமாக விரட்டினார்கள். அதுவும் புதருக்குப் புதர் மறைந்து தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள முயன்றது. ஆயினும் அவர்கள் விட்டபாடில்லை. அது புதரில் மறைந்திருக்கிறது. எதிரே துர்ஜயஸிம்மன் கையில் ஈட்டியுடன் அதைக் கொல்ல நிற்கிறான். இதைக் கண்டு அது அதிவேகத் துடன் அவன்மேல் பாய்ந்தது. துர்ஜயஸிம்மன் இடது கையினால் நெற்றி வியர்வையைத் துடைத்துக் கொண்டு, சட்டென்று குறியைச் சரிபார்த்து, வலது கையால் ஈட்டியை எறிந்தான். அவனுடைய களைப்பினாலும், மங்கிய இருளினாலும் குறி சரியா யில்லாமல், ஈட்டி ஒரு பாறையில் போய் மோதியது. உடனே அது தூள் தூளாக உதிர்ந்தது. ஈட்டியின் லட்சியத்திலிருந்து தப்பிய பன்றி ஒரே பாய்ச்சலில் குதிரையின் வயிற்றைக் கிழித்துவிட்டது.

துர்ஜயஸிம்மன் சட்டென்று குதிரையினின்றும் குதித்துப் பத்தடி தூரத்தில் போய் விழுந்தான். குதிரை அங்கேயே விழுந்தது. பன்றி இறந்த குதிரையை விட்டுவிட்டு, துர்ஜயஸிம்மன் மேல்

பாய்ந்தது. மரணத்தை யாராலும் தடுக்க முடியாது. அந்த ரஜபுத்திர வீரன் உறுதியான பார்வையுடன் தன் மரணத்தை எதிர்பார்க்கலானுன். ஆனுல் மிருத்தியு அவன் அருகே வர முடியவில்லை.

யாராலோ எறியப்பட்ட ஓர் ஈட்டி பன்றியின் முகத்தில் வந்து குத்தியது. அதன் பற்கள் தூள் தூளாயின. அதன் வாயிலிருந்து உதிரம் பெருகியது. அந்த ஈட்டியின் அடியால் அது படுகாயமடைந்து, துர்ஜயஸிம்மனை விட்டு ஓடிக் காட்டினுள் மறைந்தது. இருளில் பிறகு அது எங்கும் தென்படவில்லை.

அந்த அந்தகாரத்தில், வீரன் ஒருவன் மலையினின்றும் இறங்கி வருவதைத்தான் கண்டான் துர்ஜயஸிம்மன்.

## II

## தேஜ்ஸிம்மன்

வேட்டையன்று பன்றி ஓடிவிட்டது. துர்ஜயஸிம்மன் எறிந்த ஈட்டி குறி தப்பிவிட்டது. முன்பின் அறியாத ஒருவனுடைய சகாயத்தால் அவன் உயிர் தப்ப நேர்ந்தது. இம்மாதிரியான பல சிந்தனைகள் சேர்ந்து துர்ஜயஸிம்மனின் இதயத்தை வாட்டலாயின. கோபத்தாலும் துக்கத்தாலும் அவன் தனக்கு உதவி செய்தவனுக்கு நன்றிசெலுத்த மறந்துவிட்டான். அதற்குப் பதிலாகச் சிறிது உரத்த குரலில், 'நான் தங்களை அறியேன். தாங்கள்தான் என் உயிரைக் காப்பாற்றியவர் என்று தெரிகிறது!' என்றான்.

பரிசயமற்ற அந்த யுவன், 'மனிதர்களின் தர்மம் மனிதரின் உயிரைக் காப்பது! விசேஷமாக துர்ஜய ஸிம்மரின் உயிரைக் காப்பது ரஜபுத்திரரின் கடமை. அவர் வீரர். விரும்பினால் வீழ்ச்சியடைந்த நிலைமையிலிருக்கும் மேவாரை அவர் புனருத்தாரணம் செய்து, தமது ஜாதிக்கு விசேஷ உபகாரம் செய்யலாம்!' என்றான்.

முன்பின் தெரியாத அந்தச் சாமானிய வேஷ தாரியான யுவன் வாயிலிருந்து வந்த வார்த்தைகளைக்

கேட்டு, துர்ஜயஸிம்மன் சிறிது நேரம் ஆச்சரியமடைந்தான். பிறகு அவன், 'நான் தங்கள் பெயரை அறிய விரும்புகிறேன்!' என்ருன்.

'தாங்கள் என் பெயரை அறிவீர்கள்! இப்பொழுது களைத்திருக்கிறீர்கள். என் குடிசைக்கு வந்து சற்று இளைப்பாருங்கள்' என்ருன் யுவன்.

துர்ஜயஸிம்மன் தைரியமற்றவனல்லன்; வலிமையும் மிக்கவனே. ஆனுல் முன்பின் தெரியாத அந்த வாலிபனின் வீரத் தோற்றத்தைக் கண்டு சற்றே யோசித்தான். இம்மாதிரியான வீர யுவனை அவன் பார்த்திருக்கிருனு? எட்டு வருஷங்களுக்கு முன் ஒரு முறை பார்த்திருக்கிருன்.

சிறிது நேரம் பொறுத்து,அந்த யௌவன வீரன் எழுந்து நின்று, 'இந்தச் சமயம் என் வற்புறுத்தல் ஒன்று உண்டு. தாங்கள் அதன் காரணத்தைக் கேட்கக் கூடாது. தங்கள் கண்களைத் துணியால் கட்டிக்கொள்ள வேண்டும். நான் தங்களை இங்கிருந்து கையைப்பற்றி அழைத்துச் செல்வேன். தங்களுக்கு இந்த விஷயம் சம்மதமில்லாவிட்டால் நான் இப்போதே என் வழியே போகிறேன்!' என்ருன்.

வாலிபனின் வார்த்தைகளைக் கேட்டு, துர்ஜயஸிம்மன் மேலும் அதிக ஆச்சரியமடைந்தான். ஆனுல் அவனுடைய உள்ளத்தின் ஆர்வத்தை மறுப்பது வீண் என்று எண்ணினுன். 'இந்த வாலிபன் எனக்கு ஒரு பொழுதும் தீங்கிழைக்க மாட்டான். என் உயிரைக் காப்பாற்றியவனின் கையால் எதிர்காலத்திலும் எனக்கு ஆபத்து ஒன்றும் ஏற்படாது. தவிர, இந்த இருளில் இந்தக் காட்டிலிருந்து இந்த வாலிபனின்

சகாயமின்றி வெளியேறவும் முடியாது' என்று சிறிது நேரம் யோசித்தான். பிறகு தன் பாகையில் ஓர் ஓரத்தை வாலிபன் கையில் கொடுத்தான். அந்தத் துணியால் அவன் கண்களை நன்றாகக் கட்டி விட்டான் வாலிபன்.

பிறகு அவன் துர்ஜயஸிம்மனின் கையைப்பற்றி, சுற்றி வளைத்து இரண்டு மைல் தூரம் அழைத்து வந்தான். வழியில் அவன் ஒரு வார்த்தைகூடப் பேச வில்லை. துர்ஜயஸிம்மனுக்குத் தான் போகிற இடம் எது என்பதைப்பற்றி ஒன்றும் தெரியாது. மரங்களின் இலைகளால் உண்டான சத்தத்தைக் கேட்டு, ஏதோ மலை மேல் ஏறிச் செல்வதாக அவன் அறிந்தான். திடீரென்று அந்த வாலிபன் நின்றான். துர்ஜயஸிம்மனும் நின்றான். அவனுடைய கண்ணின் கட்டை அவிழ்த்தான் வீரன். துர்ஜயஸிம்மன் நாற்புறமும் கவனத்துடன் கூர்ந்து நோக்கலானான்.

இரவு ஒரு ஜாமம் கழிந்த பிறகு, மலையின் இருண்ட குகை ஒன்றில், பரிசயமற்ற ஜனங்கள் சூழத் துர்ஜயஸிம்மன் உட்கார்ந்திருந்தான். குகையில் ஒரு விளக்கு எரிந்துகொண்டிருந்தது. அந்த விளக்கின் மங்கிய ஒளியில் துர்ஜயஸிம்மன் தன்னைச் சுற்றி நாற்புறமும் நாகரிகமற்ற பீல் ஜாதியார் இருப்பதைக் கண்டான். அவர்கள் தமக்குள் என்ன பேசிக்கொண்டிருந்தனரோ, அது அவனுக்குத் தெரியாது. அவர்கள் எதற்காகக் குடிசைக்குள் வருகிறார்கள், வெளியே செல்கிறார்கள் என்பதும் அவனுக்கு விளங்கவில்லை. துர்ஜயஸிம்மன் ரஜபுத்திர பாஷையில் பேசியதை அவனை அழைத்து வந்த யுவனைத் தவிர வேறு யாரும் அறிந்துகொள்ள முடியவில்லை. இது

வரை அந்த யுவன் அவனை மரியாதை நிறைந்த பார்வையுடன்தான் பார்த்துவந்தான். ஆயினும் அந்த வாலிபனின் பக்கம் பார்க்கும்போது துர்ஜய ஸிம்மன் ஏன் திடுக்கிடுகிறான்? இது அவனுக்கே விளங்கவில்லை. என்ன காரணத்தாலோ, அவன் அந்த வீரனைக் கண்டதும் இடிந்துபோகிறான். அவனுடைய மனத்திற்குள் சிந்தனை ரேகைகள் எப்படி ஓடுகின்றன? அந்தகார மயமான இந்தக் குகையையும், இந்தப் பயங்கரமான பீல்வீரர்களையும், அதிகம் பேசாமல் அடக்கமாயுள்ள இந்த யுவனையும் அவன் கவனத்துடன் பார்க்கப் பார்க்க அவனுடைய சந்தேகமும் அதிகரித்துக்கொண்டே வருகிறது.

ஒரு வேலைக்காரன் அருகேயிருந்த நீர்விழ்ச்சியிலிருந்து தண்ணீர் கொண்டுவந்தான். துர்ஜய ஸிம்மன் கைகால் கழுவிக்கொண்டான். அதே வேலைக்காரன் மீண்டும் பழங்கள் கிழங்குகள் முதலிய உணவுப்பொருள்களைக் கொண்டுவந்து எதிரே வைத்தான். துர்ஜயஸிம்மன் மனத்திலிருந்த சந்தேகம் தூர அகன்றது. அவன் வரண்ட பார்வையோடு நாற்புறமும் நோக்கினான். வாலிபன் அங்கே இல்லை. ஆகையால் அவன் சற்று கோபமடைந்து, 'நான் அந்த ரஜபுத்திர யுவனுக்கு விருந்தாளியாக வந்திருக்கிறேன். அவனே அதிதியின் முன் போஜனப் பொருள்களைத் தன் கையால் கொண்டுவந்து வைத்துத் தானும் கூடச் சாப்பிடவேண்டும். ரஜபுத்திரருடைய தர்மம், ஒருவன் தானே நேரில் அதிதி சத்காரம் செய்யவேண்டியது. பீல் ஜாதியாருடன் வசித்து ரஜபுத்திர தர்மத்தை மறந்துவிட்டான் போலிருக்கிறது!' என்று கூறினான்.

துர்ஜயஸிம்மனின் இந்தக் கடுஞ் சொற்களைக் கேட்டு வேலைக்காரன் சற்றும் கலங்காமல், ‘எங்கள் எஜமானர் ரஜபுத்திர தர்மத்தை மறக்கவில்லை. ஆனால் சில காரணங்களை முன்னிட்டு அவர் சந்தாவத் குலத்தாருடன் உட்கார்ந்து போஜனம் செய்வதில்லை. போஜனம் செய்வது நிஷித்தம். இதே காரணத்தால் தான் இப்போது அவர் இங்கிருந்து அகன்றுவிட்டார்’ என்றான்.

துர்ஜயஸிம்மனின் மனத்தில் மீண்டும் சந்தேகம் உண்டாயிற்று. ஆகாரத்தை அவன் கையால் தொடக்கூட இல்லை, எழுந்துவிட்டான். சிறிது நேரத்திற்கெல்லாம் பழைய யுவன் அவன் எதிரில் வந்து, ‘நான் விருந்தோம்பலாகிய தர்மத்தை உசிதப்படி செய்யச் சக்தியற்றவனாக இருக்கிறேன். இதன் காரணத்தை வேலைக்காரன் தங்களிடம் தெரிவித்துவிட்டான். தங்களுக்குப் போஜனம் செய்ய இஷ்டமில்லாவிட்டால் இளைப்பாறுங்கள். தாங்கள் தூங்குவதற்குப் படுக்கை தயாராக இருக்கிறது’ என்று மெதுவாகச் சொன்னான்.

ஒவ்வொருவராக எத்தனையோ பீல் வீரர்கள் குகைக்குள் வந்து போவதையும், ஒவ்வொருவர் கையிலும் வில்லும் அம்பும் இருப்பதையும், எல்லோரும் மௌனம் சாதிப்பதையும், தனக்கு அறிமுகமில்லாத அந்த யுவனின் பக்கம் பார்ப்பதையும் துர்ஜயஸிம்மன் கண்டான். வீரர்களின் பார்வை, அந்த யுவனின் ஆக்ஞை கிடைத்ததும் அவர்கள் துர்ஜயஸிம்மனை அடித்து நொறுக்கிவிடத் தயாராக இருப்பதைப் போல் தோன்றியது. ஆனால் வாலிபன் அம்மாதிரியான சங்கேதம் எதையும் செய்யவில்லை.

துர்ஜயஸிம்மனே தைரியசாலி. யுத்தத்திலும் சரி, வேறு எந்த விபத்திலும் சரி, அவனைப் போல் யாரும் வீரம் காட்டியதில்லை. ஆனால் இந்தப் புதிய இடத்தில், கணக்கற்ற பீல் ஜாதி வீரர்கள் மத்தியில் துணையின்றி இருக்கும் தன் நிலைமையை எண்ண அவன் உள்ளம் சற்று கலங்கியது. அவன் இந்தக் குகையில் நிராயுதபாணியாகத் தனியே இருக்கிறான். கணக்கற்ற வீரர்கள் அவனை நாற்புறமும் சூழ்ந்துள்ளனர். அவன் மீண்டும் அந்த வாலிபன் பக்கம் பார்த்தான். அவனுடைய முகத்தின் கம்பீர பாவத்தைக் கண்டு அவன் மனத்திலிருந்த உத்தேசம் எதையும் அறிய முடியவில்லை.

'படுக்கை விரித்திருக்கிறது' என்றான் வாலிபன். இந்த யுவன் துர்ஜயஸிம்மனுக்கு மித்திரனா, சத்துருவா? சத்துருவாக இருந்தால், இன்று ஆபத்தில் அவன் உயிரை ஏன் காப்பாற்றினான்? அந்த அடர்ந்த கானிலிருந்து தன் இருப்பிடத்திற்கு ஏன் அழைத்து வந்தான்? சாப்பிடுவதற்குப் பழவர்க்கங்களை ஏன் அனுப்பினான்? கணக்கற்ற வில் ஏந்திய இந்த வீரர்கள் ஏன் அவனை இதுவரை காவல்புரிந்து கொண்டிருக்கிறார்கள்? அந்த வாலிபனிடம் ஏன் வீண் சந்தேகம் கொண்டிருக்கிறான் துர்ஜயஸிம்மன்? வாலிபன் என்னவோ மேலான வம்சத்துதித்த ரஜ புத்திரனாகவே இருப்பான்; தீங்கொன்றும் புரியான். அவன் தன் ஸ்தானத்தை இழந்து பீல் ஜாதியரைப் புகலாகக் கொண்டிருக்கிறான். இன்று க்ஷத்திரிய தர்மப்படி துர்ஜயஸிம்மனைக் காப்பாற்றிப் பேருதவி செய்தான். பின் துர்ஜயஸிம்மன் அவனிடம் சந்தேகப்படுவது ஏனோ, தெரியவில்லை.

சந்தேகத்தின் காரணத்தைத் துர்ஜயஸிம்மனு லும் அறிய முடியவில்லை; ஆனால் அந்த வீர வாலிப னைக் காணும்போது அவன் மனத்தில் சந்தேகமே எழுந்தது. போர் முனையில் ஆயிரக்கணக்கான வீரர் கள் முன்னிலையில் சஞ்சல மடையாத அவனுடைய உள்ளம் அன்று அந்த வாலிபனைக் கண்டு ஏன் சலனமடைந்தது? ஸாலும்பராதீசனையும், மகா ராணவையும் கண்டு அவர்கள் முன்னிலையில் தான் சாமர்த்தியசாலி என்பதைக் காட்டிக்கொண்ட வீரன் அந்த யுவனைக் கண்டு ஏன் கலங்குகிறான்?

துர்ஜயஸிம்மன் தன் பேதைமையின் மேல் வெறுப்புக்கொண்டு, மனத்திலுள்ள சந்தேகத்தைத் தூர விலக்கி, அந்த யுவனுடன் மனம்விட்டு மெல்ல வார்த்தையாடலானான்:

'வாலிபனே! நான் இன்று இந்த விசித்திரமான குகையையும் உன்னுடைய நாகரிகமற்ற நண்பர்களை யும் கண்டு ஆச்சரியம் அடைந்தேன். நீ இன்று எனக் குச் செய்த பெரிய உபகாரத்திற்காக உனக்கு ஒரு முறை வாழ்த்துக் கூறக்கூட மறந்துவிட்டேனே!' என்றான்.

'வாழ்த்துக் கூறவேண்டிய அவசியம் ஒன்றும் இல்லை. நான் என் தேசத்திற்குச் செய்யவேண்டிய கடமையைத்தான் செய்தேன்!'

'அப்படியானால் நான் இந்த உதவிக்குப் பிரதி யுபகாரம் எப்படிச் செய்வது?'

'நான் இன்று தங்களைச் சகாயமற்ற நிலைமையி லிருந்து காப்பாற்றினேன். அதே போல, நீங்கள் கணவனை இழந்த எவளாவது ஒரு ஸ்திரீயையும், தந்தையை இழந்த ஒரு சிறுவனையும் சகாயமற்ற

நிலைமையில் காண்பீர்களானல், அல்லது அவர்களுக்கு யாராவது தீங்கிழைப்பார்களானல், அந்தச் சமயம் அவர்கள் கையைக்கொண்டே அவர்களுக்கு உதவி செய்யுங்கள். இதைத் தவிர எனக்காக நான் எந்தப் பிரதியுபகாரத்தையும் விரும்பவில்லை.'

இதைக் கேட்டுத் துர்ஜயஸிம்மன் ஆச்சரியமடைந்தான். 'இந்த வாலிபன் என் பூர்வ விருத்தாந்தத்தை அறிவானு? இந்தக் கணக்கற்ற பீல் வீரர்களைக் கொண்டு முன்பு நான் செய்த கொடுமைக்குப் பழி தீர்த்துக்கொள்வானு?' என்று நினைத்து, அவன் பெருமிதமான பார்வையுடன் பீல் வீரர்களின் பக்கம் திரும்பிப் பார்த்தான். எல்லோரும் ஆயுதபாணிகளா யிருந்தனர். அதே பார்வையால் மீண்டும் யுவனையும் கவனித்தான். அவன் முன் போலவே கம்பீரமாகக் காட்சியளித்தான். துர்ஜயஸிம்மனின் தைரியமுள்ள இதயத்தில் அன்று முதன் முதலாகப் பயம் சஞ்சாரம் செய்யத் தொடங்கியது. 'இந்த யுவன் யார்?' என்ற கேள்வி அவன் மனத்தில் விடாமல் எழுந்துகொண்டிருந்தது. 'சயனிக்கப் படுக்கை தயாராக இருக்கிறது' என்று யுவன் மறுபடியும் கூறினுன்.

துர்ஜயஸிம்மன், உள்ளத்தில் எழுந்த அதிர்ச்சியை அடக்கிகொண்டு, 'நான் இப்பொழுதே சூரிய மஹலுக்குத் திரும்பவேண்டும். வேற்றிடத்தில் தங்கும் வழக்கம் துர்ஜயஸிம்மனுக்கு இல்லை!' என்றுன்.

'தங்கள் இஷ்டப்படியே செய்யுங்கள். ஆனல் என் அபிப்பிராயம் தாங்கள் அயலிடத்தில் தங்குவதும் உண்டு என்பதுதான்!'

'நீங்கள் யார் என்பதை நான் அறியேன். நீங்கள் விரும்பினால் இந்த அநாரிக ஜாதியாரால் எனக்குத் துன்பமிழைக்க முடியும். ஆனால் நான் ஒரு நாளும் பொய் சொல்ல முடியாது. ராட்டௌர் திலகஸிம்மனுடன் எனக்குப் பரம்பரையாக விரோதம்தான். அதே விரோதத்தின் பேரில்தான் நான் எதிர் நின்று யுத்தம் செய்து அவரைத் தோற்கடித்து, சூரியமஹல் கோட்டையைக் கைப்பற்றினேன். ஆனால் அது க்ஷத்திரிய தர்மம்!'

'எதிர் நின்று யுத்தம் புரிவதில் தாங்கள் வெகு சமர்த்தர்! அதில் சந்தேகமில்லை. அதனால்தான் திலகஸிம்மர் இறந்ததும், அவருடைய மனைவியான சகாயமற்ற கைம்பெண்ணுடன் எதிர் நின்று யுத்தம் செய்து, வீரம் காட்டி, ஸ்திரீ ஹத்தி செய்தீர்கள்! தாங்கள் க்ஷத்திரிய தர்மத்தை அறிந்தவர்தான்! அதில் சந்தேகமே இல்லை!'

இந்த வார்த்தைகள் துர்ஜயஸிம்மனின் உள்ளத்தில் நூறு தேள்கள் சேர்ந்து கொட்டியதைப் போன்ற உணர்ச்சியை உண்டாக்கின. கோபத்தால் அவன் முகம் சிவந்தது. அவன் கண்களினின்றும் வெறுப்பு நெருப்புப் பொறி போல் பறந்தது. உடல் முழுதும் நடுங்கியது. இம்மாதிரி அவமரியாதையான சொற்களை அவன் சகிக்க முடியுமா? அவன் தன் நிலைமையை மறந்து, சட்டென்று எழுந்து, அந்த வாலிபனின் குரல்வளையைப் பிடித்தான்.

இதைக் கண்ட பீல் வீரர்கள், விற்களில் பாணத்தைப் பூட்டி, வாலிபனின் உத்தரவை எதிர் நோக்கி நின்றார்கள். யுவன் இடது கையினால் அவர்களைத் தடுக்கச் சமிக்ஞை செய்து, வலது கையினால்

துர்ஜயஸிம்மனைப் பிடித்துப் பந்து போல் மேலே தூக்கி எறிந்தான்.

பத்தடி தூரத்திற்கு அப்பால் போய் விழுந்த துர்ஜயஸிம்மன் சமாளித்துக்கொண்டு எழுந்து, மறுபடியும் யுவனின் பக்கம் நோக்கினான். வாலிபனின் முகத்தில் கோபத்தின் சின்னம் துளிகூட இல்லை. அவன் முன் போலவே கலங்காமல் இருந்தான். அவனுடைய இடையில் வாள் இருந்தது. ஆனால் அவன் அதைக் கையால் தொடக்கூட இல்லை. 'தூங்குவதற்குப் படுக்கை தயாராக இருக்கிறது!' என்று அவன் மறுபடி ஒரு முறை மிருதுவான குரலில் கூறினான்.

துர்ஜயஸிம்மன் தலை குனிந்துகொண்டே, 'நான் இப்பொழுதே சூரியமஹல் செல்லப் போகிறேன்!' என்றான்.

வாலிபன் துர்ஜயஸிம்மனிடம் வந்து, அவன் கண்களில் துணியைக் கட்டி, தானே அவன் கையைப் பற்றி குகைக்கு வெளியே அழைத்து வந்தான். இருவரும் மலையினின்றும் கீழே இறங்கி வந்தார்கள். வழியில் இருவரும் ஒன்றும் பேசவில்லை. நடுவே காட்டு மிருகங்களின் கூச்சலும், காற்றினால் உண்டாகும் சத்தத்தையும் தவிர வேறொன்றும் கேட்கவில்லை. அந்த ஆழ்ந்த இருளில், குளிர்ந்த மெல்லிய காற்றில் துர்ஜயஸிம்மனின் உத்தமமான மூளை குளிர்ச்சியடையவில்லை. அந்த நிசப்தமான இரவில் அவனுடைய இதயத்தின் அதிர்ச்சி சாந்தமடையவில்லை.

இரண்டு மைல் தூரம் நடந்துவந்த பிறகு, வாலிபன் துர்ஜயஸிம்மனின் கண்களிலிருந்து துணியை அவிழ்த்துவிட்டான். துர்ஜயஸிம்மன் பார்த்த போது

எந்த இடத்தில் தன் உயிரை அந்த யுவன் காப்பாற்றினுனே, அதே இடத்தில் இருக்கக் கண்டான். வாலிபன் தன் உயிரைக் காப்பாற்றினுன் என்ற நினைவு வந்ததும், அவன் முகத்தில் நன்றியறிவின் சாயை படர்ந்தது. ஆனுல் அவன் வாய் திறந்து ஒன்றும் சொல்லாமல், அந்தக் காரிருளில் அடர்ந்த கானின் நடுவே புகுந்து, தன்னந் தனியனுகக் கோட்டையை நோக்கி நடக்கலானுன்.

காலைக் கதிரவனின் ஒளி ரேகை வீசும் நேரத்தில் அவன் சூரியமஹலில் பிரவேசித்தான்.

அவன் வராததால் கோட்டையிலுள்ளவர்கள் எல்லோரும் கவலையில் ஆழ்ந்திருந்தனர். அவன் வருவதைக் கண்டு எல்லோரும் அருகே ஓடிவந்தனர். துர்ஜயஸிம்மனின் கோரமான முகத் தோற்றத்தைக் கண்டதும் எல்லோரும் பயந்து விலகினுர்கள். அவர்களுக்கு அவனுடைய சுபாவம் நன்ருகத் தெரியும்.

துர்ஜயஸிம்மன் தனியாக ஓர் இருட்டறைக்குச் சென்று, மந்திரியைக் கூப்பிட்டனுப்பினுன். மந்திரியும் யுத்தத்தில் அவனைப் போன்ற தைரியமும் முன்யோசனையும் உள்ளவர். துர்ஜயஸிம்மன் சைகை செய்து அவரை உட்காரச் சொன்னுன். பிறகு, உடைந்த குரலில் அவருடன் பேசலானுன்.

'நான் இந்தக் கோட்டையை என் அதிகாரத்திற்குக் கொண்டுவந்த சமயத்தில் ஏற்பட்ட விஷயம் ஞாபகம் இருக்கிறதா?'

'நன்ருக ஞாபகம் இருக்கிறது. இந்தக் கோட்டையைப் பிடித்து எட்டு வருஷங்கள் தானே ஆகின்றன!'

'அப்போது திலகஸிம்மனின் மனைவி கொல்லப் பட்டாளே, அவள் மகனுடைய கதி என்னவாயிற்று, ஞாபகம் இருக்கிறதா?'

'இந்தக் கோட்டையின் மேலிருந்து அகழியில் விழுந்து அந்தச் சிறுவன் தன் உயிரை மாய்த்துக் கொண்டான்.'

'திலகஸிம்மனின் மகன் இன்றுவரை உயிரோடு தான் இருக்கிறான்!'

'திலகஸிம்மனின் மகனா?'

'ஆமாம்!'

'அந்தச் சிறுவன் தேஜ்ஸிம்மனா?'

'ஆமாம்! தேஜ்ஸிம்மன்! ஆனால் இப்பொழுது அவன் சிறுவனல்லன்!'

'தாங்கள் தவறாகச் சொல்லுகிறீர்கள். இந்தக் கோட்டையிலிருந்து விழுந்த எந்த வீரனுமே தப்பிய தில்லை. இந்தக் குழந்தையைப் பற்றிச் சொல்லவா வேண்டும்?'

துர்ஜயஸிம்மன் மௌனமானான். அவன் முகத் தில் கோபம் ஜொலிப்பதைக் கண்டு, மந்திரி மிகவும் விநயத்துடன், 'தாங்கள் எப்படி அறிந்தீர்கள்? பத்து வயதிருக்கும்போது பார்த்த பையனை இப் பொழுது பார்த்து அறிந்துகொள்வது அசாத்திய மல்லவா?' என்றார்.

'நான் அவன் முகத்தைப் பார்த்து அறிந்து கொள்ளவில்லை. அவன் பேச்சு வார்த்தைகளாலும், அவனுடைய யுக்தியாலும் அறிந்துகொண்டேன்.'

'என்ன யுக்தி?'

'நான் திலகஸிம்மனுடன் ஒரு முறை யுத்தம் செய்தேன். அவனைப் போன்ற பலசாலி இந்த மேவா

ரில் வேறு எவருமே கிடையாது. விசேஷமாக குஸ்தி போடுவதில் அவனுக்கு இருந்த திறமை வேறு ஒரு வருக்கும் கிடையாது. தேஜ்ஸிம்மன் தன் தந்தையைப் போலவே அதி பராக்கிரமசாலி. போர் முறையிலும் அவன் அப்படியே நிபுணனாக இருக்கிறான்!'

இருவரும் சிறிது நேரம் மௌனமாக இருந்தனர். பிறகு எதுவும் கேட்க மந்திரிக்குத் தைரியம் இல்லை. ஆனால் அரசன் கூறிய விஷயத்தில் அவருக்கு நம்பிக்கை உண்டாகவில்லை. அன்றிரவு யாரோ ஒருவனுடைய மகா வல்லமையைக் கண்டு துர்ஜயஸிம்மன் பிரமையடைந்து விட்டதாக அவர் எண்ணினர்.

சிறிது நேரத்திற்குப் பின் துர்ஜயஸிம்மன், 'இன்னொரு சமாசாரம்!' என்றான்.

'என்ன?'

'தேஜ்ஸிம்மன் இன்று என் உயிரைக் காப்பாற்றினன்!'

மந்திரி விஷயத்தை அறிந்துகொண்டார். துர்ஜயஸிம்மன் எழுந்து வெளியே பக்கத்தில் உலாவிவந்தான். அன்று அவன் முகத்தைப் பார்த்தால் சேனை வீரர்கள் கூட ஆச்சரியமடையாமல் இருந்திருக்க முடியாது.

III

## புத்திர சோகம்

காலையிலேயே சூரியமஹலில் சேனை வீரர்கள் போருக்கு ஆயத்தமானார்கள். இளங் கதிரின் ஒளியில் அவர்களின் ஆயுதங்கள் பிரகாசித்தன. சைனிகர்கள் எல்லோரும் உற்சாகத்துடன் கோட்டை வாயிலில் வந்து கூடினார்கள்.

சேனையின் ஆரவாரத்தைக் கேட்டு, துர்ஜய ஸிம்மன் உப்பரிகையிலிருந்து கீழே இறங்கி, ஆயுத பாணியாகக் குதிரை மீதேறினான். ஆயிரக்கணக் கான வீரர்களின் ஜயகோஷம் சூழ்ந்திருந்த மலை களில் எதிரொலித்தது.

வசந்தத்தின் ரமணீயமான காலை நேரத்தில், சைனிகர்கள் உற்சாகத்துடன் மலைகளையும், காடுகளை யும், நதிகளையும், நிலங்களையும் கடந்து சென்று கொண்டிருந்தார்கள். வசந்த காலப் பறவைகள் அப் பொழுதும் மரங்களில் அமர்ந்து மதுரமாகக் கூவிக் கொண்டிருந்தன. இலைகளில் இங்குமங்கும் ஒட்டி யிருந்த பனித் துளிகள் சூரியகாந்தியில் முத்துக்களைப் போல் விளங்கின. காலை இளங் காற்றில் வீரர்களின் கொடிகள் அசைந்தாடிக் கொண்டிருந்தன.

சற்று நேரத்திற்கு முன் வாத்திய கோஷமும் சைனிகர்களின் கோலாகலமும் நிறைந்து விளங்கிய மலைக் கோட்டை நிசப்தமாயிற்று. வீரர்கள் மலைகளினின்றும் இறங்கி ஒரு காட்டில் நுழைந்தார்கள்.

வனத்தின் எழிலைக் கண்டு அவர்களுடைய உள்ளங்களில் மகிழ்ச்சி பொங்கியது. சூரிய கிரணம் இலேசாகப் புக முடியாதபடி அவ்வனம் அடர்ந்திருந்தது. அந்த நிர்மானுஷ்யமான வனம் அவர்களுடைய வசந்தோற்சவ மாளிகை போல விளங்கியது. அவர்களுடைய கோலாகலத்தில் பக்ஷிகளின் சப்தமும் அடங்கிவிட்டது.

வனத்தை விட்டுச் சேனை விஸ்தீரணமான இடத்திற்கு வந்து சேர்ந்தது. நாற்புறமும் ஒரே மலைக் கூட்டம். நடுவே இருந்த சமதளமான நிலங்களில் பயிர் வகைகள் காற்றில் அலை வீசிக்கொண்டிருந்தன. பயிர்களின் மரகதப் பச்சையின் மேல் நீல வானத்திலிருந்து சூரியன் பொற் கிரணங்களை வீசிப் புதிய ஒளி பாய்ச்சிக் கொண்டிருந்தான்.

இயற்கைக் காட்சிகளைப் பார்த்துக்கொண்டே படை வீரர்கள் சந்திரபுரம் என்ற கிராமத்திற்கு வந்து சேர்ந்தார்கள். சூரியமஹலின் ஆதிக்கத்தின் கீழே சந்திரபுரத்தைப் போன்ற எத்தனையோ கிராமங்கள் இருந்தன. போர்க் காலங்களில் சிற்சில கிராமத்து மக்கள், தமது உயிரையும் பொருள்களையும் காக்க வேறு உபாயமின்றி, எவனாவது ஒரு பராக்கிரமமுள்ள கோட்டைத் தலைவனின் ஆதீனத்தை ஒப்புக்கொள்வார்கள். அது முதல் அவன் அவர்களைக் காப்பான். அவர்கள் அவனுக்குக் கீழ்ப்பட்டு, அவன் குடிகளாக இருப்பார்கள். சந்திர

புரத்து ஜனங்கள் முற்காலத்தில் விவசாயம் செய்து கொண்டிருந்தார்கள். ஆனால் இப்போது அவர்கள் முன்போல் சுதந்திரமானவர்கள் அல்லர்; கோட்டைத் தலைவனுக்கு அவர்கள் அடிமைகள். கோட்டைத் தலைவனின் ஆதீனத்திற்குட்பட்ட பூமியை விட்டு அவர்கள் வேறெங்கும் போகவும் முடியாது; அவன் வார்த்தையை அசட்டை செய்யவும் முடியாது.

சந்திரபுரம் போன்ற பல கிராமங்களின் பிரஜைகள், மேவாரின் கணக்கற்ற யுத்தங்களில் சின்னாபின்னப்பட்டுத் தங்கள் பாதுகாப்புக்காக வெகு நாட்களாகச் சூரியமஹலின் ஆதிக்கத்தின் கீழ் இருந்துவந்தார்கள். சூரியமஹல் கோட்டை ராட்டௌர் வீரர்களிடம் இருந்தவரை சந்திரபுரத்துக் குடிகளுக்கு யாதொரு கஷ்டமும் இல்லை. ஆனால் திலகஸிம்மன் இறந்து, துர்ஜயஸிம்மன் கோட்டையைப் பிடித்துக்கொண்டதும், பிரஜைகள் அவன் ஆட்சியை ஒப்புக்கொண்டார்கள். துர்ஜயஸிம்மன் சுபாவமாகவே மிகுந்த கோபக்காரன். சந்திரபுரப் பிரஜைகள் இறந்துபோன திலகஸிம்மனிடம் அன்பு மாறாதிருந்ததைக் கண்டு அவன் அதிகக் கோபம் கொண்டான். அவர்களுக்குக் கடும் தண்டனை விதித்தான். அவர்களிடமிருந்து அதிக வரியும் வாங்கினான். சிற்சில சமயங்களில் கோப மிகுதியால் அவர்களிடமிருந்த யாவற்றையுமே பறித்துக்கொண்டதும் உண்டு. எப்பொழுதும் அவர்களை அவன் அவமானம் செய்துகொண்டேயிருந்தான்.

கிராமத்தின் நாட்டாண்மைக்காரனான கோகுலதாஸ் ஒரு வயோதிகன். அவன் அடிக்கடி தன் மகன் கேசவதாஸிடம், 'இந்தக் கொடுமை வெகு நாள்

நீடித்திராது! திலகஸிம்மனின் ராஜ்யம் சில நாட்களில் அவர் புத்திரனின் கைக்கு வரும். அந்த நாள் சீக்கிரம் வரும்படி கடவுள் கிருபை செய்யட்டும்!' என்று சொல்லுவான்.

துர்ஜயஸிம்மனின் கொடுமைகள் நாளுக்கு நாள் பொறுக்க முடியாதபடி ஆகிவிட்டன. குடி மக்கள் யாவரும் கோபம் கொண்டனர். அவர்கள் தமக்குள், 'நாம் ஏன் துர்ஜயஸிம்மனிடம் அடிமைகளாக இருக்கவேண்டும்? நமது அரசர் திலகஸிம்மர் கொல்லப்பட்டுவிட்டதால் துர்ஜயஸிம்மன் நமக்கு அதிகாரி யாகிவிடுவானு? நாம் ஏன் அவன் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருக்கவேண்டும்? கொள்ளைக்காரன் எங்காவது கோட்டைத் தலைவனுக முடியுமா? இந்தக் கொள்ளைக்காரனை எதிர்த்து நாம் கிளர்ச்சி செய்தால், அது நமது தர்மத்திற்கு விரோதமா? நாம் நமது பிதுரார்ஜிதச் சொத்தை துர்ஜயஸிம்மனிடம் விலைக்கு விற்றுவிடவில்லை. திலகஸிம்மனுக்கு வாரிசான எவராவது வருவார். நாம் அவருடைய ஆதீனத்தைச் சந்தோஷத்துடன் ஒப்புக்கொள்வோம். பிறருடைய ஆதிக்கத்தை ஒரு நாளும் ஒப்புக்கொள்ளோம்!' என்று பேசிக்கொண்டனர்.

பிரஜைகளின் மனுேபாவம் இம்மாதிரி மாறலாயிற்று. பேச்சு வாக்கில் இது நெடுகப் பரவியது. துர்ஜயஸிம்மன் சுபாவத்திலேயே கோபக்காரன். பிரஜைகளின் இந்தப் புரட்சி மனப்பான்மையைக் கண்டு அவன் கோபம் பன் மடங்கு பெருகியது. பிரஜைகளுக்குத் தகுந்த தண்டனை அளிக்கவேண்டி, கிராமத்தின் சில முக்கியமான மனிதர்களை அவன்

தன் கோட்டைக்குப் பிடித்துக்கொண்டு வந்தான். பிரஜைகளைப் 'புரட்சிக்காரர்கள்' என்று சொல்லி எல்லோரிடமும் அபராதம் வசூலித்தான்.

கோகுலதாஸின் புத்திரன் கேசவதாஸை அவன் புரட்சிக்காரன் என்று குற்றம் சாட்டி மரணதண்டனையும் விதித்தான்.

இந்தச் சம்பவம் நடந்த மூன்று வருஷங்களுக்குப் பிறகு, அன்றுதான் துர்ஜயஸிம்மன் தன் சேனையுடன் சந்திரபுரம் கிராமத்தின் மத்தியில் புகுந்து சாலையோடு சென்றுகொண்டிருந்தான். அவன் சாலைக்குப் பக்கத்திலிருந்த கோதுமை வயலில் உயரமான ஒரு மனிதனைக் கண்டான். அவன் கோகுலதாஸ் என்பதை அறிந்துகொண்டு, கோபத்துடன், 'கிழப் பயலே! நிலவரி கொடுக்க உனக்குச் சம்மதமா? இல்லை, முன் போல் உன் ஜாதி வழக்கப்படி ஜனங்களை ஏமாற்றி, ஏதாவது சூழ்ச்சி செய்ய உத்தேசமா?' என்று கேட்டான்.

சேனை வருவதைக் கண்டு கோகுலதாஸ் விலகி நின்றான். கோட்டைத் தலைவனின் வார்த்தையினால் அவன் கோபமடைந்தான். ஆனால், அடிமை கோபமடைந்தால் என்ன செய்ய முடியும்? அவன் தன் மகனைக் கொன்ற துர்ஜயஸிம்மனுக்குச் சாவதானமாக வந்தனம் செய்தான்.

துர்ஜயஸிம்மன் மீண்டும் கடுமையான குரலில் பழைய கேள்வியைத் திரும்பவும் கேட்டான்.

துர்ஜயஸிம்மனின் வார்த்தைகளைக் கேட்டுக் கிழவனின் முகம் கோபத்தால் சிவந்தது. ஆயினும் அவன் கோபத்தை அடக்கி, 'அரசே, சூழ்ச்சி செய்வதும், பிரஜைகளுக்குக் கெட்ட ஆலோசனைகளைச்

சொல்வதும் எங்கள் வம்சத்தின் தர்மமல்லவே!' என்றான்.

'கபடம் நிறைந்த உங்கள் கோழை வம்சத்தில் நல்லெண்ணம் எப்போதாயினும் ஏற்பட்டதுண்டா? உங்கள் அடிமை வம்சத்தில் யார் நல்ல யோசனை சொல்லக் கற்றார்கள்?' என்றான் துர்ஜயன்.

'துர்ப்பாக்கிய வசமாக நாங்கள் அடிமைகளானோம்! ஆனால் அடிமைகளாகியும்கூட நாங்கள் இன்னும் கோழைத்தனத்தைக் கைப்பிடிக்கவில்லை. நாங்கள் உங்களுக்கு ஆட்பட்டவர்கள். ஆயினும் ரஜபுத்திரர்களே!' என்றான் கோகுலதாஸ்.

துர்ஜயஸிம்மனின் நண்பர்கள் புத்தியற்ற கோகுலதாஸ் தானாகவே மரணத்தைத்தேடிக்கொள்வதாக எண்ணினர். கோகுலதாஸின் வார்த்தைகளால் வெகுண்ட துர்ஜயஸிம்மன், 'அடே, கிழப் பயலே! உன் மகனுக்கு மரணதண்டனை விதித்தும், நீ அரசனிடம் முறையாக நடந்துகொள்ளவில்லையே! நல்லது, இப்பொழுதே இதற்குத் தண்டனை அளிக்கிறேன்!' என்று கூறி, அந்த நிரபராதியான விருத்தனைக் காலால் உதைத்துக் கீழே தள்ளினான். படையினர் அவ்விடத்திலிருந்து முன்னேறினர். அவர்கள் பின்னால் துர்ஜயனும் தொடர்ந்து சென்றான்.

சிறிதுநேரத்திற்குப் பிறகு அந்தக் கிழக் கோகுலதாஸ் தன்னைச் சமாளித்துக்கொண்டு எழுந்தான். ரஜபுத்திரர்களுக்கு இதைவிட அவமானம் வேறொன்றும் இல்லை. எனினும் அவன் வாயிலிருந்து ஒரு வார்த்தைகூட வெளிப்படவில்லை. அவமானத்தை அந்த விருத்தன் அமைதியாகப் பொறுத்துக் கொண்

டான். அவன் மெல்ல மெல்லத் தலைதூக்கி, ஆகாயத்தை ஒரு முறை பார்த்துவிட்டு, அந்தக் கொடிய துர்ஜயஸிம்மனையும் திரும்பிப் பார்த்தான். வெகு நேரம் பொறுத்து அவன், 'துர்ஜயஸிம்மா! நல்லது! நான் புத்திர சோகத்தை ஒருவாறு மறந்திருந்தேன் இன்று நீ அதை ஞாபகப்படுத்தினாய். கோகுலதாஸ் சில நாள் உயிர் தரித்திருந்தால் உனக்கு இதற்குப் பலன் கைமேல் கிடைத்துவிடும்!' என்றான்.

# IV

## ஸாலும்பரா

அன்று ஸாலும்பராவின் மலைக்கோட்டை அதிக சோபை கொண்டு திகழ்ந்தது. மலைச் சிகரத்தில் சந்தாவத்தார்களின் மணிக்கொடி காற்றுடன் கை கலந்து விளையாடிக்கொண்டிருந்தது. கோட்டையின் நாற்புறமும் பல வர்ணக் கொடிகள் பறந்துகொண்டிருந்தன. சந்தாவத் வம்சத்தைச் சேர்ந்த அத்தனை வீரர்களும் கோட்டையில் வந்து கூடினார்கள். சிலர் நூறும், சிலர் இருநூறும், சிலர் ஐந்நூறுமாக அவரவர்கள் சக்திக்குத் தகுந்த சேனையுடன் சந்தாவத்தின் அதிபதி ராவத் கிருஷ்ணஸிம்மரிடம் வந்திருந்தார்கள். எல்லோரும் கோட்டைக்குள் கூடி ராஜா கிருஷ்ணஸிம்மரின் தரிசனத்தை எதிர்நோக்கி நின்றனர்.

அவர்கள் மலையடிவாரத்திலுள்ள சமவெளியில் கூடாரங்கள் அடித்திருந்தார்கள். அவைகளிலெல்லாம் சந்தாவத் கொடி பறந்துகொண்டிருந்தது. சுற்றிலும் வெற்றி முரசுகள் முழங்கிக்கொண்டிருந்தன. அம்முழக்கத்தின் நடுவே யுத்தவீரர்களின் உல்லாசப் பேச்சுக்களும் கேட்டன. ரணபேரிகைகளின் முழக்கம் எங்கும் எதிரொலித்துக் கொண்டி

ருந்தது. சந்தாவத்தாரின் ரணபேரிகை பாரதவர்ஷத்தில் இதற்கு முன் பல தடவைகள் முழங்கியிருக்கிறது; சத்துருக்களின் உள்ளத்தை அது நடுங்கச் செய்ததும் உண்டு.

போர்முரசுடன் இன்னும் விதவிதமான வாத்தியங்களும் ஒலித்தன. அது வசந்த காலம். நாற்புறமும் ஹோலி பண்டிகையின் தடபுடல். வீடு, வாசல், தெரு, எங்கு பார்த்தாலும் ஜனங்கள் ஆனந்தமாகப் பாடிக்கொண்டிருந்தனர். தமது ஆனந்தத்தில் அவர்கள் மேவாருக்கு வந்திருந்த ஆபத்தையும் மறந்திருந்தனர். வர்ணத் தண்ணீரை ஒருவர் மேல் ஒருவர் வீசுவது போன்ற விதவிதமான விளையாட்டுக்களில் அவர்கள் அனைவரும், குழந்தைகள், முதியோர், ஆடவர், பெண்டிர் என்ற பேதமில்லாமல், ஈடுபட்டிருந்தனர். எங்கும் ஒரே ஆனந்தம்! இந்தக் கோலாகலத்தில் எல்லோரும் சரிசமானமாக விளங்கினர்கள். ஸாலும்பரா கோட்டையின் சேனாதிபதியும், பிரதான மந்திரியும், தாம் வரும் வழியில் வர்ணத் தண்ணீருக்குப் பயந்தனர். ஜனங்கள் அவர்களையும் விடாமல் வர்ணமயமாக்கினர். அவர்களும் அந்தத் தினத்தை எண்ணிக் கோபமடையவில்லை. விருத்தர்களின் வெள்ளைத் தாடிகளில் பாலர்கள் வர்ணத் தண்ணீரை விசி அவைகளைச் சிவப்பாக்கினார்கள். விருத்தர்களும் சந்தோஷத்துடன் அதை ஏற்றனர். இம்மாதிரி விதவிதமான விளையாடல்கள் நடந்து கொண்டிருந்தன. கிருஷ்ணஸிம்மரின் அரண்மனையிலிருந்து ஏழையின் குடிசைவரை எல்லாம் ஒரே வர்ணமயமாகத் திகழ்ந்தன.

வெகுநேரம் பொறுத்துக் கிருஷ்ணஸிம்மர்

சபைக்கு வந்தார். சபையில் துர்ஜயஸிம்மனின் தலைமையின் கீழிருந்த ஸாமந்தர்கள் எல்லோரும் பக்தியுடன் எழுந்து நின்று, 'மகாராஜாவுக்கு ஜே!' என்று சொல்லி வணங்கினர்கள். கிருஷ்ணஸிம்மரும் தலை குனிந்து வாழ்த்தி வணங்கிய வீரர்களுக்குப் பதில் மரியாதை செய்தார்.

ராவத் கிருஷ்ணஸிம்மர் சிம்மாதனத்தில் அமர்ந்தார். அவருக்கு இருபுறமும் ஸாமந்தர்கள் நின்றார்கள். எல்லோர் கையிலும் வாளும் கேடயமும் இருந்தன. கிருஷ்ணஸிம்மர் அனுக்கிரகம் நிரம்பிய பார்வையுடன் ஒரு முறை அவ்வீரர்கள் பக்கம் பார்த்து விட்டு, எல்லோரையும் அமரும்படி கையால் சங்கேதம் செய்தார். எல்லோரும் அவரவர் ஆசனத்தில் அமர்ந்தனர். கண கண என்று கேடயமும் கத்தியும் உராய்ந்த சத்தம் சபையில் கேட்டது.

எல்லோரும் அமர்ந்த பிறகு, கிழவரான கிருஷ்ணஸிம்மர் கம்பீரமான குரலில் பேசலானர் :

> 'வீரர்களே! நீங்கள் இன்று இங்கு எதற்காகக் கூடியிருக்கிறீர்கள்? இதன் காரணத்தை நீங்களே அறிவீர்கள். சித்தௌர் மொகலாயரின் கையில் இருக்கிறது. மேவாரின் செழிப்புள்ள நிலங்களும், சமதளங்களும் அவர்கள் வசமாகி விட்டன. இப்பொழுது கேவலம் மலைகளும் காடுகளுமே மிஞ்சியிருக்கின்றன. அவைகளில் தான் மேவாரின் சுதந்திர லட்சுமி ஒளிந்திருக்கிருள். மிலேச்சர்கள் அங்கிருந்துகூட அவளை அபகரிக்க எண்ணுகிறார்கள்.
>
> 'வடக்கே கமலமீரிலிருந்து தெற்கே ருக்மநாதம் வரையில் உள்ள மலைப் பிரதேசங்கள்

யாவும் மகாராணுவின் ஆதிக்கத்தில் இருக்கின்றன. மீதமுள்ள நல்ல பூமிகள் மொகலாயர் வசம் இருக்கின்றன. ஆனல் அவர்களுக்கு அதில் ஒரு லாபமும் இல்லே. மொகலாயர் ஆதிக்கத்தில் இருக்கும் பிரதேசங்கள் யாவும் மகாராணுவின் கட்டளேப்படி ஜன சூனியமாகி வருகின்றன. ஜன சங்கியை நிறைந்த நகரங்கள் அரணியங்களாகி வருகின்றன. அங்கே குடியானவர்கள் பயிர் செய்வதில்லே. ஆயர்கள் பசு மேய்ப்பதில்லே. மகாராணுவின் உத்தரவின்பேரில் அவைகளிலிருந்த பெரும்பாலான மக்கள் மலேகளில் வந்து குடியேறியிருக்கிருர்கள். பனஸ், ரவி முதலிய நதிக்கரைகளிலிருந்த செழிப்புற்ற பூமி இப்போது மிருகங்கள் நிறைந்த காடாக இருக்கிறது.

'ஆரவல்லி மலேயின் மேற்கு ஓரமாயுள்ள மேவார் பிரதேசத்தில் மனிதரே இல்லே. எல்லோரும் காட்டில் வந்து வசிக்கிருர்கள். ராணுவின் வார்த்தையைக் கேட்காத ஜனங்கள்கூட இருக்கிருர்களா? மகாராணுவே சிற்சில சமயங்களில் இந்தப் பிரதேசங்களேச் சென்று பார்வையிடுகிருர். ஸாலும்பரா ஒருபொழுதும் அவரைக் கைவிட்டதில்லே. அவருடன் சென்று, ஆரவல்லியின் மேற்குப் பிரதேசம் ஜன சூன்யமாய் இருப்பதைக் கண்டேன். நெல் விளேந்த பூமியில் பூண்டு முளேத்திருக்கிறது. ஜனங்கள் நடந்த பாதைகள் புதரடர்ந்து கிடக்கின்றன. குடிகள் வசித்த வீடுகளில் கொடிய மிருகங்கள் வாசம் செய்கின்றன. சுற்றிச் சுற்றி நான் சொல்வதின் கருத்து ஒன்றுதான்; அது மகாராணுவின் ஆக்கினேக்குக் கட்டுப்படாதவர்களே இல்லே என்பது

தான். மகாராணாவோடு யுத்தம் செய்வதாயின் காடுகளையும் மலைகளையும் கடந்து செல்லவேண்டும். அங்கே மனிதர்கள் வசிக்கக்கூடிய இடமில்லை. சேனைகளுக்கு உணவுப் பொருள் கிட்டாது என்று மொகலாயர்கள் எண்ணுவார்கள். தவிரவும் இப்போது சூரத் முதலிய மேற்குக் கடற்கரைத் துறைமுகங்களுக்கும் டில்லிக்கும் நடக்கும் வியாபாரம் தடுக்கப்பட்டிருக்கிறது. அதன் காரணமாகக் காட்டினுள்ளேயே ஆக்கிரமிக்கவும் கூடும். அவர்கள் எதுவேண்டுமானாலும் நினைக்கட்டும். அவர்கள் வருவதைக் கேட்டு நாம் தூங்கிக் கொண்டிருக்க மாட்டோம்.

'மேவாரின் சமவெளிப் பிரதேசத்தைக் காக்க இம்மாதிரி யோசனைகளைச் செய்திருக்கிறேன்: மலைப் பிரதேசத்திலுள்ள ஒவ்வொரு கோட்டையிலும், ஒவ்வொரு சமவெளிப் பிரதேசத்திலும் சைனியம் இருக்கும். எவ்வளவு சந்தாவத் வீரர்கள் இருக்கிறார்களோ அவ்வளவு பேரும் மகாராணாவிடம் செல்லவேண்டும். இதர சைனியங்களும் நாற்புறத்தினின்றும் வந்துகொண்டிருக்கின்றன. நேர் யுத்தம் செய்ய மகாராணாவிடம் சைனியத்திற்குக் குறைவிருக்காது. குடியானவர்களுக்கு யுத்தம் செய்யத் தெரியாது. அவர்கள் தங்கள் இருப்பிடத்தைக் காப்பாற்றிக் கொள்ளுவார்கள். வனஜாதியார்களும் வில்லும் அம்பும் ஏந்தி நம்முடன் சேர்ந்து போர்புரிய வருவார்கள். தெற்கிலிருந்து பீல் ஜாதியாரும், கிழக்கிலிருந்து மீர் ஜாதியாரும், மேற்கிலிருந்து மீனானியர்களும் மொகாலயருடன் போர்புரிய அழைக்கப்பட்டிருக்கிறார்கள். டில்லி அரசனின் மகனுடன் மானஸிம்மன் வெகு தடபுட

லாக வருவதாகக் கேள்வி! நாமும் அவர்களை எதிர்க்கத் தயாராக இருப்போம்.

'வீரர்களே! இன்று ஹோலிப் பண்டிகை! நகர ஜனங்களிடமிருந்து நானும் தப்பவில்லை, நீங்களும் தப்பவில்லை. இன்று இந்தச் சிவப்பு வர்ணம் எல்லோருக்கும் சோபையை அளிக்கிறது. உங்களுடைய அகன்ற தோள்களில் மகரந்தப் பொடியின் காந்தி விளங்குகிறது. உடைகள் சிவப்பாயின. மக்கள் இன்று வெள்ளைத் தாடி மீசைகளைக் கூடச் சிவப்பாக்கிவிட்டனர். வீடு, வாசல், தெரு எங்கும் ஒரே குங்கும வர்ணம். மற்றொரு பண்டிகை நாள் வருகிறது. அதுதான் உண்மையில் வீரர்களுக்கு ஆனந்தமளிக்கும் ஹோலி! அன்று வீரர்களின் சிரமும் உள்ளமும் இம்மாதிரியே சிவப்பாகும். அன்று இம்மலைப் பிரதேசம் மனித ரத்தத்தால் சிவப்பாகும். அன்று நீங்கள் கேட்கும் வாத்திய கோஷம், இன்று நீங்கள் கேட்கும் கீதத்தை வென்றுவிடும். அன்றைய வாத்திய கோஷம் மகா கோஷமாகும்! வீரர்களே! அந்தப் போர் விழாவுக்குத் தயாராகுங்கள்!'

ஸாலும்பரா அதிபதியின் உற்சாகம் நிறைந்த இந்த வார்த்தைகளைக் கேட்டு வீரர்கள் புளகாங்கிதமடைந்தனர். எல்லோரும் ஒரே குரலில் அவைகளை ஆமோதித்தனர். எல்லோரும் உறையிலிருந்து வாளை உருவி எழுந்து நின்று, மகாராஜாவுக்கு ஜயகோஷமிட்டனர். அவர்களுடைய தொனி வெகு தூரத்திலுள்ள மலைகளிலும் சென்று எதிரொலித்தது. ஸாலும்பராவின் சாரணர் பழைய காலத்து வீர சரித்தைக் கீதத்தில் இசைத்து வர்ணிக்கலானர்:

'வீரமண்டலமே! நீங்கள் வாலிபர்கள்! உங்கள் பார்வை எதிர்காலத்திற்குத்தான் ஓடும். உங்களுடைய நம்பிக்கை, பிரதிக்ஞை, எண்ணங்கள் — யாவும் எதிர்காலத்தை நோக்கியே ஓடும்! ஆனால் விருத்தர்களின் பார்வை கழிந்த காலத்தின் பக்கமே திரும்பும். அந்தப் பழைய காலத்து சம்பவம் கரு மேகம் போல் என் ஹிருதய ஆகாயத்தில் படிந்திருக்கிறது. அந்த மேகம் என் மனக்கண்களை மறைத்துவிட்டது. நான் வெளிக் காட்சியைப் பார்ப்பதில் சமர்த்தன் அல்லன். நான் அந்த மேகத்தின் உட்புறத்தில் வேறு காட்சியைக் காண்கிறேன். வீரத்தையும் தைரியத்தையும் காண்கிறேன். கேளுங்கள்:

'நம்முடைய அரசர் இப்பொழுது சித்தௌரில் இல்லை. அவர் மலைக் குகையில் வசிக்கிறார். மரத்தின் கீழே தம் குழந்தைகளை வளர்க்கிறார். ஜனமற்ற வனமே அவருக்கு இப்போது அந்தப்புரம்! நான் சிறுவயதில் இம்மாதிரி மற்றொருவரைக் கண்டிருக்கிறேன். அவரும் மலைக் குகையில்தான் வசித்தார். வானளாவிய மாளிகையுள்ளவர், மலைச் சிகரத்தின் மேல் சூரிய மண்டலத்தைத் தொடும்படியான அரண்மனையில் வசித்தவர், மலைக் குகையில் ஒளிந்து காலம் கழித்தார். இந்தப் பழைய சம்பவம், வெகு நாட்களுக்கு முன் கேட்ட சங்கீதம் போல், என் மனக் கண் முன் எழுந்து வருகிறது. கேளுங்கள்!

'அந்தப் பாலகன் ஒரு நாள் தன் அண்ணனுடன் தபஸ்வினி தேவியின் மலைக்குச் சென்றான். பயமற்ற அந்தச் சிறுவன் மற்ற ஆசனங்களை விடுத்துச் சிம்மத்தின் தோலின்மீது அமர்ந்தான்.

தபஸ்வினி நடுங்கினாள். "இன்று சிம்மத்தின் தோலின்மீது அமர்ந்தவன் ஒருநாள் சிம்மாசனத்தில் அமர்வான்" என்றாள். அதைக் கேட்டு அண்ணன் கோபமடைந்தான். அவன் தம்பியை அடித்து அந்த ஆசனத்தினின்றும் எழுப்பினான். அவன் ரஜபுத்திரன்தானே? அவன் ஏன் அப்படிச் செய்யவில்லை? சிறுவன் தன் கண்களில் ஒன்றை இழந்து அங்கிருந்து ஓடினான். எங்கே ஓடினான்?

'நாம் அவனை ஆடு மேய்ப்பவர்களிடம் ஒரு முறை சென்று தேடுவோம்! ஊக்கமுள்ள சிறுவன் மலினமான வேஷதாரியானான். அவன் யாரென்று அவர்களுக்குத் தெரியவில்லை. தெரிந்திருந்தால் அவன் ஆடு மேய்க்க லாயக்கற்றவனென்று அவனை விரட்டியிருப்பார்களா? ஆயர்களால் விரட்டப்பட்ட அந்தச் சிறுவன் எங்கு சென்றான்?

'எந்தக் காட்டிற்கும் அல்ல! அவனைப் பாருங்கள்! ஸ்ரீநகரின் வீரன் களைத்து எப்படித் தூங்குகிறான்! ஆலமரத்தின் நிழல்தான் அவனுக்குக் குளிர்ந்த நிலா! புல்லே படுக்கை, வாள்தான் தலையணை! பிற்பகலில் சூரியனின் கிரணங்கள் இலைகளின் மூலம் அந்தப் பாலகனின் முகத்தில் விழுகின்றன. அதைக் கண்ட ஒரு பெரிய சர்ப்பம் தன் படத்தை விரித்து அவனுக்கு நிழலளிக்கிறது. சர்ப்பம் ஒரு சாதாரணப் போர் வீரனுக்கா குடை பிடித்தது? இல்லை, அவன் சாமானியப் புருஷனல்லன். அவன் மகா புருஷன்! அவன்தான் அந்த வேஷதாரியான ரஜபுத்திரச் சிறுவன். அந்தப் பாலகனுக்குச் சர்ப்பம் வெண் கொற்றக் குடை விரித்தது.

'கொஞ்ச காலத்திற்குப் பிறகு அந்தப் பாலகன் சிம்மாசனம் ஏறுகிறான். குடை பிடிப்போன் குடை பிடிக்கிறான். சாமரம் ஏந்துவோர் இருபுறமும் சாமரம் ஏந்தி நிற்கின்றனர். இதைக் கேளுங்கள்! இவ்வளவு கோலாகலங்களும் எங்கே நடக்கின்றன? ஸங்கிராமஸிம்மரின் எண்பதினாயிரம் குதிரை வீரர்கள் அன்று பூமியை நடுங்கச் செய்துகொண்டிருக்கின்றனர்! அவருடைய கணக்கற்ற வெற்றிக் கொடிகள் வானத்தை நிறைத்துக்கொண்டிருக்கின்றன. எல்லாம் ஒரே சிவப்பு வர்ணமயமாகத் திகழ்கிறது. ஸட்லெஜ் நதியிலிருந்து யமுனை நதி வரை ஸிந்து நதியிலிருந்து விந்திய மலைவரை, அவருடைய ராஜ்யம் பரவிக்கிடக்கிறது. பதினெட்டாம் முறை யுத்தத்தில் அவர் ஜயித்து இவ்வளவு பெரிய ராஜ்யத்தை அடைந்தார். இந்த வீரர் பிருதிவிராஜனைப் போல், மீண்டும் ஆரியாவர்த்தத்தை ஒரு குடையின் கீழ்க் கொண்டுவர மாட்டாரா? ஆனால் பாரதவர்ஷத்தின் மேற்றிசையில் பயங்கரமான கருமேகம் எழுந்து வந்து மழை பொழியலாயிற்று. புதிய ஆக்கிரமிப்புக்காரனான பாபரின் மொகாலய சைனியங்கள் செல்லுப் பூச்சிகள் போல் வந்து இறங்கின. ஸங்கிராமஸிம்மர் போரில் பெரும் வீரம் விளைவித்தும், பாபரிடம் வெற்றி காண முடியவில்லை. ஆனால் அந்த வீர புருஷர் செய்த திடப் பிரதிக்கினையைக் கேளுங்கள்!

'"யுத்தத்தில் பாபரை ஜயிக்காத வரையில் சித்தௌருக்குள் நுழைய மாட்டேன். பாலைவனம் தான் எனக்குப் படுக்கை. வான விரிப்பின் கீழே தான் வாசம்!" ஸங்கிராமஸிம்மர் தம் உயிருள்ள வரை தமது பிரதிக்கினையைக் காப்பாற்றினர்.

பிருதிவிராஜனின் சிம்மாதனத்தில் மீண்டும் ஹிந்து அரசன் அமர்வானா? அந்த மிலேச்சர்கள் களங்கப்படுத்திய சிம்மாசனம் மீண்டும் ஹிந்து சந்தானர்களின் பாதங்களால் ஸ்பரிசம் செய்யப் படும் என்று யாரால் சொல்ல முடியும்?

'நான் கிழவனாகிவிட்டேன். கண்கள் சரியாகத் தெரியவில்லை. ஸங்கிராமஸிம்மர் எங்கு சென்றார்? அவர் ஆதிக்கத்தின் கீழிருந்த பதினாறு அரசர்களும், எண்ணிலடங்காத ராவத்துகளும், ராவல்களும் எங்கு சென்றனர்? ஐயாயிரம் யானை வீரர்களும், எண்பதினாயிரம் குதிரை வீரர்களும் எங்கே சென்றனர்? இப்பொழுது அந்தப் பிரகாசம் இல்லை! அந்த மகா ஜ்வாலை ஒளிந்து கொண்டுவிட்டது.

'ஒளிந்துகொண்டுவிட்டது! ஆனால் அது நாசமடையவில்லை! வீரர்களே! நீங்கள் ஒரு முறை தைரியம் கொள்ளுங்கள்! மனம் வைத்துக் கையில் வாளேந்துங்கள்! கேடயத்தை மேலே தூக்குங்கள்! சவால் விடுத்துப் போர்க்களத்தில் குதித்து நில்லுங்கள்! காற்று எப்படித் தன் பிரசண்ட வேகத்தால் துரும்பைத் தூக்கி எங்கோ கொண்டு எறிந்துவிடுகிறதோ, அதே போல், நீங்கள் உங்கள் பிரசண்ட வேகத்தால் மொகலாயச் சேனையைச் சமர்க்களத்தினின்றும் பறந்தோடச் செய்யுங்கள்! சித்தௌரை ஜயகோஷத்தால் நிரப்புங்கள்! இந்த விருத்தன் சொன்ன பூர்வ சம்பவங்களை வெறும் கனவென்று எண்ணாதீர்கள். நீங்கள் விரும்பினால் மேவாரின் அந்தப் பழைய தினங்கள் மீண்டும் வரும்.ஸங்கிராமஸிம்மரைப் போல் பிரதாபஸிம்மரும் காட்டையும் மலைக்

குகையையும் விடுத்து அரியணையில் அமர்வார். ஸங்கிராமஸிம்மரைப் போல் பிரதாபஸிம்மரின் பெயரும் டில்லியின் கதவுவரை, ஹிமாலயத்தின் வானளாவிய சிகரம்வரை, எதிரொலிக்கும்!'

இவ்வாறு சொல்லிவிட்டு விருத்த சாரணர் மௌனமானார். சிறிது நேரம் சபையில் நிசப்தம் நிலவியது. திடீரென்று நூற்றுக் கணக்கான வீரர்கள் 'மகாராணாவுக்கு ஜே!' என்று கோஷமிட்டனர். வீரருடைய பேரிரைச்சல் ஸாலும்பரா மலையை அதிரச் செய்தது. மலையடிவாரத்திலிருந்த சேனைகளும் அந்தச் சத்தத்தைக் கேட்டு, 'மகாராணாவுக்கு ஜே!' என்று கோஷித்தன.

சாரணதேவர் தம் ஆசனத்தில் அமர்ந்ததும், ஸாலும்பராதீசன் வந்திருந்த வீரர்களை நோக்கிக் கம்பீரமான குரலில் பேசினார்:

'வீர சிரேஷ்டர்களே! யுத்தத்திற்கு அதிகத் தாமதம் ஆகாது. யுத்தத்தின் போது எப்பொழுதுமே ஸாலும்பரா ராணாவின் பக்கம்தான் கை கொடுத்து நிற்கும். நாம் சைனியம் சேர்க்கத்தான் இங்கு வந்திருக்கிறோம். சந்தாவத் வம்சத்தின் பிரதான வீரர்கள் தங்கள் தங்கள் சைனியத்துடன் வந்திருக்கின்றனர். நாம் நாளையே மகாராணாவின் தற்போதைய ராஜதானியான கமலமீரை நோக்கிப் புறப்படுவோம். இன்று நம்முடைய சபை இதோடு கலைகிறது. இன்று ஹோலி தினம். சென்று வாருங்கள்! ஒரு முறை ஹோலி வேடிக்கைகளைப் பார்ப்போம்! மீண்டும் அடுத்த வருஷம் பார்ப்போமோ, இல்லையோ, யார் கண்டார்கள்?'

மஹலின் எதிரிலுள்ள அகண்ட மைதானத்தில் வீரர்கள் குதிரை மீதேறி ஹோலி விளையாடலானார்கள். குதிரையி லிருந்து எட்டிக் குங்குமப் பொடி வீசுவதில் தங்கள் சாமர்த்தியத்தைக் காட்டினார்கள். குங்கும வீச்சால் எல்லோரும் ஒரே செந்நிறத்தில் மூழ்கி யிருந்தனர். பல வர்ணமுள்ள குதிரைகளும் ஒரே சிவப்பாகவே காணப்பட்டன. குதிரைகளின் குளம்பு ஓசையும், வீரர்களின் கோலாகலச் சத்தமுந்தான் நாற்புறமும் சூழ்ந்திருந்தன. குதிரைகள் பிடிபடாமல் ஓடுவதும், குதிப்பதும், சில சமயங்களில் நிற்பதுமாக இருந்தன. அவைகளும் ஹோலி தினத்தில் ஆனந்தமாக விளையாடின போலும்!

வீரர்கள் பரஸ்பரம் வர்ணப் பொடியை வீசிக் கொண்டனர். இங்கே மலையடிவாரத்தில் சைனியமும், அங்கே நகரத்தில் ஜனங்களும் ஹோலி விளையாடினார்கள். அடுத்த வருஷம் எத்தனைபேர் இம்மாதிரி ஹோலிப் பண்டிகை கொண்டாடப் போகிறார்கள் என்பதை யார் சொல்ல முடியும்? அடுத்த வசந்த காலத்திற்குள் எத்தனை ஆயிரம் வீரர்கள் 'ஹல்திகாடி' யுத்தகளத்தில் வீரச் சமர் செய்து மீளாத நித்திரையில் ஆழ்ந்து போகப்போகிறார்களோ, யார் கண்டது?

V

## மலையில் ஓர் இரவு

சந்தாவத் வம்சத்தின் தலைவரான ராவத்கிருஷ்ண ஸிம்மர் தம்முடைய சகல படைகளையும் திரட்டிக்கொண்டு கமலமீர் கோட்டையை அடைந்து மகாராணாவுடன் சேர்ந்து கொண்டார். இதர சிற்றரசர்களும் தங்கள் சைனியங்களுடன் வரலானார்கள். பற்பல வம்சத்தைச் சேர்ந்த சிற்றரசர்களும் தங்கள் சைனியங்களோடு வந்து சேர்ந்தனர். சங்காவத் குலாதிபன் இரண்டாயிரம் வீரருடன் வந்தான். சங்காவத், சந்தாவத்தின் ஒரு கிளை வம்சமே. வேதனோரின் பிரசித்தமான ராடௌர் வம்சத்தார் பல ஆயிரம் வீரர்களுடன் வந்துற்றார்கள். மேவாரில் இவர்களைவிடத் தைரியசாலிகள் யாருமே இல்லை. அக்பர், சித்தௌரை ஆக்கிரமித்தபொழுது, இந்த ராடௌர் வம்சத்தின் வீர சூடாமணியான ஜயமல்லன்தான் நிகரற்ற வீரத்தோடு, ஆயிரக் கணக்கான எதிரிகளை வெட்டி வீழ்த்தி, முடிவில் அக்பர்ஷாவின் கையால் உயிர் துறந்தான். அவன் மகன் இன்னும் அதை மறந்துவிடவில்லை. தன் தந்தையின் வீரத்தைப் பின்பற்றியே அவன் மகாராணாவுடன் சேர்ந்திருக்கிறான். சந்தாவத்தின் மற்றொரு கிளையான ஜகாவத் வம்சத்தைச் சேர்ந்த வீரன், கைலவாரி

லிருந்து பெருத்த சேனையுடன் கமலமீர் வந்திருந்தான். இந்த ஜகாவத் வம்சத்தைச் சேர்ந்த புத்தன் என்பவன் சித்தௌர் நாசப்படுத்தப்பட்ட போது பிரமிக்கத்தக்க பராக்கிரமம் காட்டினான்.

ஸாலும்பராதிபன் காலஞ்சென்றதும், பதினாறு வயதே நிரம்பிய புத்தன், தனியனாக சித்தௌரின் வாசலைக் காத்தான். தன் தாயும் மனைவியும் வதை செய்யப்பட்டு மடிவதைப் பார்த்துக் கொண்டே, கலங்கா நெஞ்சோடு நின்று, சமர்புரிந்து வீரசுவர்க்கத்தை அலங்கரித்தான் அவன். தன் உயிர் போமளவும் வாயிலைவிட்டு அவன் சிறிதுகூட நகர்ந்தானில்லை. அவனுடைய பந்துக்கள் அந்தச் சமயம் ஜகாவத் குலத்தின் முக்கியஸ்தர்களாயிருந்தார்கள். ஜகாவத் குலத்தின் மானத்தைக் காக்க வேண்டி அவர்களும் அச்சமயம் ராணாவுடன் சேர்ந்துகொண்டனர்.

தைலவாராவிலிருந்து ஜாலா வம்சத்தைச் சேர்ந்தவர்களும், கோடாரியிலிருந்து சௌஹான் வம்சத்தினரும், பிஜிலியிலிருந்து பிரமர்களும், இன்னும் பல வம்சத்தைச் சேர்ந்த வீரர்களும் மேகக் கூட்டத்தைப்போல ராணாவின் பக்கம் வந்து குவிந்தனர். பார்த்துக்கொண்டிருக்கும்போதே இருபத்தீராயிரம் வீரர் கொண்ட சைனியம் கமலமீரில் கூடிவிட்டது. இதற்கு முன் பாரத நாட்டில் எந்த யுத்தகளத்திலும் இங்ஙனம் தேசபக்தியும், வீரமும், துணிவுமுள்ள இருபத்தீராயிரம் வீரர்கள் கொண்ட படை அணிவகுத்து நின்றதில்லை.

அன்று வசந்தோற்சவத்தின் கடைசி நாள். எங்கும் கீதங்களின் முழக்கம். சாரணர்கள் வசந்த

கீதத்தையும், இடையிடையே போர்ப் பாடலையும பாடி வீரர்களின் உள்ளங்களுக்கு உத்ஸாக மூட்டிக் கொண்டிருந்தார்கள். மேவாரின் பழம் பெருமை, மேவாரின் தற்போதைய சிறுமை, மேவாரின் வெற்றி இவைகளைப்பற்றிய பாடல்களை இசைத்தனர். அந்த இரவில் சேனை வசந்தோற்சவத்தின் ஆனந்தத்தில் லயித்திருந்தது.

இந்த உற்சவம் நடந்த இடத்திற்கு வெகு தூரத்தில் இருளடர்ந்த ஒரு மலை உச்சியில் ஒரு போர் வீரன் தனியனாக உலாவிக்கொண் டிருக்கிறான். என்ன எண்ணுகிறானோ தெரியவில்லை, இடையிடையே நின்றுவிடுகிறான். ஆனால், அவன் வசந்தோற்சவப் பாடலைக் கேட்பதற்காக நிற்கவில்லை என்பது மட்டும் நிச்சயம். அவ்வப்போது குன்றுகளையும், பள்ளத்தாக்குகளையும் கடந்து கண்ணுக்கு எட்டிய தூரம் வரை அவன் கூர்ந்து நோக்குகிறான். சில சமயம் அற்புதமான கமலமீர்க் கோட்டையை நோக்குகிறான் ; கீழே சமவெளியில் திரண்டிருக்கும் சேனா சமுத்திரத்தைப் பெருமிதத்தோடு பார்க்கிறான். அடிக்கடி விசாலமான தன் மார்பில் கை வைத்து, மீன் பூத்து மிளிரும் ஆகாயத்தை அண்ணாந்து பார்க்கிறான். வேறு யாருமில்லை, அவன் தான் மகாராணா பிரதாபஸிம்மன்.

பிரதாபஸிம்மனின் இடுப்பில் வாள் தொங்கிக் கொண்டிருக்கிறது. அருகே ஒரு மரத்தடியில் புல் படுக்கை விரிக்கப்பட்டிருக்கிறது. சித்தெளரைத் திரும்பப் பிடிக்கும் வரை வேறு சுகமான படுக்கையில் படுப்பதில்லை என்றும், சிகையை முடிவதில்லை என்றும், இலையைத் தவிர வேறெதிலும் உணவு

கொள்வதிலலை என்றும், பொன், வெள்ளி முதலிய வைகளைக் கையாலும் தொடுவதில்லை என்றும் சபதம் ஏற்றுக்கொண்டிருக்கிறான். இவ்வளவு கடுமையான விரதத்தைப் பழங்காலத்து முனிவர்கள் கூட மேற்கொண்டிருக்க மாட்டார்கள். உலகில் வேறெந்த வீரனும், தனது லட்சியம் நிறைவேற, பிரதாபஸிம்மனைப் போல் வாழ்நாள் முழுவதும் கடும் சோதனைக்கு இலக்காகும் இத்தகைய ஒரு விரதத்தை மேற்கொண்டிருந்த தில்லை.

பாரத நாட்டின் செல்வம், வீரம், புத்தி பலம், ஆயுத பலம், ஆள்பலம் யாவும் பிரதாபஸிம்மனுக்கு எதிராகத் திரண்டு நின்றன. இதோ தன்னந் தனியனாக இருளில் மலைமீது நிற்கும் இந்த வீரன், தனியாக இவைகளை எதிர்த்து நின்று, தன் நாட்டின் மானத்தையும், சுதந்திரத்தையும், தர்மத்தையும் காக்கப் போரிடுவான். மேவாரின் ஒரு குன்று மிகுதியிருந்தாலும் போதும்—அதில் இவன் சுதந்திரமாக வாழ்வான்.

நடு நிசிக்குப் பிறகு மகாராணாவின் முக்கிய சேனாதிபதிகள் ராணாவிடம் வந்து சேர்ந்தனர். ராணாவும் அவர்களைத்தான் எதிர்பார்த்துக்கொண் டிருந்தான். அவர்களைக் கண்டதும் ராணாவின் கவலை அகன்றது. அவர்களை அன்புடன் வரவேற்றான் அந்த மலையில் ஒரு மேட்டில் எல்லோரும் அமர்ந்தனர். பிரதாபஸிம்மன் பேசினான் :

'வீர சிரேஷ்டர்களே! உங்கள் தைரியத்தையும் உத்ஸாகத்தையும் மிகவும் பாராட்டுகிறேன். உங்கள் சேனைகளின் படை வகுப்பை இந்த மலைச் சிகரத்திலிருந்து காண உள்ளம் பூரிக்கிறது. என்

உளம் நிறைந்த பாராட்டைக் கூறவே இந்த ஏகாந்த மான இடத்திற்கு உங்களை அழைத்தேன்.'

ராணாவின் வலப் புறத்திலே அமர்ந்திருந்த ஸாலும்பராவின் தலைவனான ராவத் கிருஷ்ணஸிம் மன் பதில் உரைத்தான் :

'மகாராணா! யுத்தத்தின் போதும் அல்லது வேறு துன்பம் வந்துற்றபோதும் மேவாரின் வீரர் கள் மகாராணாவின் பக்கத்திலேயே நின்றிருக்கி றார்கள். கீழே திரண்டு நிற்கும் எண்ணற்ற படை வீரர்களை நோக்குங்கள். அவர்களின் ரத்த நாளங் களில் ஓடும் ஒவ்வொரு துளி ரத்தமும், எங்களிட முள்ள ஒவ்வொரு துளி ரத்தமும் மகாராணாவுக்குச் சொந்தமானவை. உத்தரவு செய்யுங்கள்; ரத்தம் பெருக்கெடுத் தோடுவதைக் காண்பீர்கள்!'

'கிருஷ்ணஸிம்மரே! நீர் செய்துள்ள உதவி கட்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகி றேன்? என் பிதா இறந்த காலத்தில், என் சகோ தரன் யாகமல்லன் சிம்மாசனத்தைக் கைப்பற்றி அரசவையில் இருந்தபொழுது, அவரிடம், "மக ராஜ்! நீங்கள் தவறு செய்துவிட்டீர்கள்; இந்தச் சிம்மாசனம் தங்கள் சகோதரருடையது" என்று கூறினீர்கள். அன்றே இவ் உடைவாளை என்னிட மும் சேர்த்தீர்கள். இந்த வாள் என் கையில் இருக் கும் வரை ஸாலும்பராவின் தலைவர் என் வலக் கரமாக இருப்பார்' என்றான் பிரதாபஸிம்மன்.

'ஸாலும்பரா, இதைத் தவிர வேறு வெகு மதியை விரும்ப வில்லை. ராஜ விசுவாசம் ஒன்றே எங்களின் குல தர்மம். ஸாலும்பராவின் மக்கள்

என்றென்றும் ராஜபக்தி ஒன்றையே பெறற்கரிய பெருமதியாகப் பெற்றிருக்கிறார்கள்' என்றான் கிருஷ்ணஸிம்மன்.

பிறகு ராடௌர் வம்சத்து ஜயமல்லன், ஜகாவத் வம்சத்துப் புத்தன் ஆகியவர்களின் மக்களையும், இன்னும் முக்கியமானவர்களையும் பார்த்து, 'சித்தௌர் வீழ்ச்சியடைந்தபொழுது, ஜயமல்லனும் புத்தனும் தமது உயிர்களைத் தியாகம் செய்து, பெருமையையும் புகழையும் பெற்றார்கள். தற்பொழுது அக்கோட்டையைத் திரும்பப் பிடிப்பதன் மூலம், அப்பெருமையையும் புகழையும் மீண்டும் நிலைநிறுத்திக்கொள்ள நீங்கள் ஆசைப்பட வில்லையா?' எனக் கேட்டான் பிரதாபஸிம்மன்.

'முயற்சி செய்வதில் நாங்கள் பின்னடையோம். முடிவு கடவுள் கையில் இருக்கிறது' என்றனர் அவர்கள்.

பிறகு, மகாராணா கோடாரியைச் சேர்ந்த சௌஹான் வம்சத்தவர்களை அழைத்து, 'கொலைகாரனான ரணவீரனிடமிருந்து காப்பாற்றி அழைத்து வரப்பட்ட என் தந்தை, இந்தக் கமலமீரில்தான் மறைந்திருந்தார். அப்பொழுது, அவர்மேல் எல்லோரும் சந்தேகம் கொண்டனர். அச்சமயம், சௌஹான் வம்சத்தின் தலைவர், அவருடன் போஜனமுண்டு சந்தேகத்தை விலக்கினார். சௌஹான் வம்சத்தவர்களிடம், அந்த ராஜபக்தி இன்னும் அப்படியேதான் இருந்து வருகிறது. அவர்கள் இப்பொழுதும் தங்கள் கடமையை மறந்துவிடவில்லை' என்றான்.

'அரசே! சௌஹான் வம்சத்தவர்கள், தங்கள் தர்மத்தை ஒரு நாளும் மறவார்.'

பிரதாபஸிம்மன், பிஜிலியின் அரசனை நோக்கி, 'பிஜிலி அரசே! உங்கள் தந்தைதான், துன்ப நிலையிலிருந்த என் தந்தைக்குத் தன் மகளைக் கலியாணம் செய்து கொடுத்துப் பரிவு காட்டினார். தாங்கள் என் தாய்மாமன். ஆபத்துக் காலத்தில் தாங்கள் தங்கள் மருமகனைக் கைவிட்டுவிட மாட்டீர்கள். தாங்கள், பிரதாபனுக்காகத் தக்க உதவி செய்வீர்கள். இந்தக் கடும் போரில், பிரதாபனின் கௌரவத்தைக் காத்து, அவன் பெயரை நிலைபெறச் செய்வீர்கள்' என்றான்.

பிஜிலி அரசன் உத்ஸாகத்துடன், 'தங்கள் கௌரவத்தைக் காக்கப் பாவர் வம்சத்தவர்கள், சந்தோஷத்துடன் உயிரைக் கொடுக்கத் தயாராக இருக்கிறார்கள்' என்றான்.

பிறகு, மகாராணா, தைலவாரா அதிபனை நோக்கி, 'ஜாலா வம்சத்தவர்கள்தான் மேவாரின் ஆதாரத் தூண்களாய் இருந்திருக்கிறார்கள். ஆபத்துக் காலத்தில், அவர்களே எங்கள் உயிரைக் காப்பவர்கள்' என்றான்.

'ஜாலாவின் தலைவன் தர்மத்தைக் காக்கப் பின் வாங்கமாட்டான். போர்க்களத்தில் அவன் ராணாவைத் தனியாக விட்டுவிட மாட்டான்.'

இவ்விதமாக வீரர்களுடன் பேசி முடிந்த பிறகு பிரதாபஸிம்மன் பொதுவாகச் சொன்னான்:

'வீர சிரேஷ்டர்களே! நீங்கள் இங்கே எதற்காக அழைக்கப்பட்டிருக்கிறீர்கள் என்பதை அறியாதவர்கள் அல்ல. பாரதவர்ஷத்தின் சைனிய பலம்

முழுவதும் மேகக்கூட்டம்போல் ஒருபுறம் திரண்டு நிற்கின்றன. மழைக் கால ஆரம்பத்திலேயே அவை மேவாரில் இறங்கி வரும். நாமும் அஜாக்கிரதையாக இருக்கமாட்டோம்! அவர்கள் மேவாரின் வளம் பொருந்திய நிலங்களைக் காடுகளாகக் காண்பார்கள். மேவாரின் மலைப் பிரதேசத்தில் அவர்கள் பிரவேசிப்பது மிகக் கடினம்.

'பப்பாராவல் வம்சம் அன்னியர்களிடம் தலை குனிவதா? ஸமர்ஸிம்மர், ஸங்கிராமஸிம்மரின் மக்கள், மொகலாயர்களின் கீழ் அடிமைத்தனத்தை ஏற்றுக்கொள்வார்களா? அப்படியானால், அதற்கு முன்பே இந்த ஸிஸோதியா வம்சம் பூண்டற்றுப் போகட்டும்! ரமணீயமான இந்த மேவாரின் மலைப் பிரதேசங்களைக் கடல் கொள்ளட்டும்!

'பிரதாபஸிம்மன் தாய் நாட்டின் முகத்தை ஜ்வலிக்கச் செய்வான். அவன் மொகலாய சேனையுடன் போரிடுவான். தன் மூதாதையரின் புஜங்களில் இருந்த பலம், தன் புஜங்களிலும் இருக்கிறது என்பதை அவன் காட்டுவான்! வீரர்களே! நாம் கானிலும், மலையிலும் இருந்து காலம் கழிப்போம். ஆனால், நமது வம்சத்தைக் களங்கப்படுத்த மாட்டோம். பப்பாராவல் வம்சத்தாரை சுதந்திரர்களாகவே என்றும் வைப்போம்! ஸமர்ஸிம்மர், ஸங்கிராமஸிம்மர் இவர்களின் வம்சத்தார் அடிமைத்தனம் எப்படி இருக்கும் என்பதையே அறியார்கள்! ஒருபொழுதும் அறியவும் மாட்டார்கள்!

'உற்சவதினம் இன்றோடு முடிவடைகிறது. நாம் செயலாற்றும் தினம் ஆரம்ப மாகிவிட்டது. வீரர்களே! நீங்கள் அந்தக் காரியத்தில் திடசித்தம்

கொள்ளுங்கள்! பலம் பெற்ற கைகளில் வாளேந்துங்கள்! மேவார் ரஜபுத்திரர்களின் கௌரவம் சற்றும் குறையவில்லை என்பதை மானஸிம்மனும் அக்பரும் கண்டுகொள்ளட்டும்!'

## VI

## மானஸிம்மன்

முன் கூறிய சம்பவம் நடந்து இரண்டு மூன்று மாதங்கள் கழிந்தன. பிரதாபஸிம்மன் சும்மா உட்கார்ந்திருக்கவில்லை. எந்த மலைப் பிரதேசத்தைக் காக்கவேண்டுமென்று கங்கணம் கட்டிக் கொண்டானோ, அந்தப் பிரதேசத்திற்குச் சென்று, சமவெளிகளையும், குன்றுகளையும், குகைகளையும் நேரில் பார்த்தான். குகைகளில் உணவுப் பொருள்களைச் சேகரித்து, சைனியங்களையும் மேவார்வாசிகளையும் உத்ஸாகப்படுத்திக்கொண்டிருந்தான். சிற்றரசர் யாவரும் தங்கள் தங்கள் சேனைகளோடு மகாராணாவிடம் வந்து சேர்ந்தார்கள். குடியானவர்கள் போர்முனைக்குச் சென்று யுத்தம் செய்ய அறியாவிட்டாலும், தங்கள் தங்கள் பூமிகளைக் காக்க, உயிரைக் கொடுக்கவும் தயாராக இருந்தனர். மகாராணாவின் உத்ஸாகத்தைக் கண்டு மேவாரைச் சேர்ந்த காட்டு ஜாதியாருங்கூட உத்ஸாக மடைந்தனர். தெற்கேயிருந்து பீல் ஜாதியாரும், மேற்கேயிருந்து மீனுனிய ஜாதியாரும் வில் அம்புகளுடன் விறுகொண் டெழுந்தனர். மேவாரின் மலைப் பிரதேச மெங்கும் போர் வெறி தலைதூக்கி நின்றது.

ராணு, பிரதிதினமும் சில வீரர்களுடன் கிளம்பி, ஆங்காங்கு செய்துள்ள யுத்த ஏற்பாடுகளைக் கவனித்துவிட்டு, மாலை தனது குகைக்குத் திரும்புவது வழக்கம்.

ராணுவின் கட்டளைப்படி, மேவாரிலுள்ள முக்கியமான நகரங்களும், கிராமங்களும் காலிசெய்யப்பட்டிருந்தன. அவைகள் ஜனசந்தடி யற்ற வனாந்திரம் போல் இருந்தன. வயல்களில் குடியானவர் சாகுபடி செய்யாததனால், புல் பூண்டுகள் மண்டிக் கிடந்தன. பனுஸ், ரவி ஆகிய இரு நதிக்கரைகளிலும் ஜனசஞ்சாரமே அற்றுவிட்டது. மனிதரின் குரலைக் கேட்பதே அரிதாகிவிட்டது.

எங்கு பார்த்தாலும் ஏதோ தெய்வ சாபத்தால் சகல ஜீவராசிகளும் மறைந்துவிட்டன போல் ஒரே சூனியமாக இருந்தது. ஜனநடமாட்ட மில்லாததால் வீடுகளின்மேலும் தெருக்களிலும் புல் பூண்டுகள் முளைக்கலாயின.

பிரதாபஸிம்மன் இவைகளையும் காடுகளாகவே மதித்துவந்தான். அடிக்கடி ஜனங்களிடம், ‘இந்த மேவார்ப் பிரதேசம் இவ்வாறு இப்படியே காடாக நேரிடினும் சரி, அன்னியன் இதை ஆக்ரமித்துக் களங்கப்படுத்துவதைச் சகியேன்’ என்று சொல்வான்.

ஒருநாள் மாலை இவ்வாறு சுற்றிப் பார்த்துவிட்டுத் தன் குகைக்குத் திரும்பிவந்தான் ராணு.

மகாராணி தன் கையினாலேயே அடுப்பு மூட்டி சமையல் செய்துகொண் டிருந்தாள். குழந்தைகள் சாதாரண உடை யணிந்து விளையாடிக்கொண்டிருந்தன. ராணு, ராணுவ உடையைக்களைந்து, சாதாரண உடை யணிந்துகொண்டே, ‘ஈசுவரா! அமர

ஸிம்மனும் அவனுடைய தாயும் எவ்வளவு நாட்கள் வேண்டுமானாலும் இந்த மலைக் குகையிலேயே இருக்கட்டும்! ஆனால், மொகலாயரிடம் அடிமைப்பட்டு ராஜ மாளிகையில் வசிக்க வேண்டாம்!' என்றான்.

இவ்வாறு பல மாதங்கள் கழிந்தன. அக்பர் பாதுஷாவின் மகன் யுவராஜன் ஸலீம்கான், மான ஸிம்மனைத் தலைமையாகக் கொண்ட எண்ணற்ற சேனையுடன் மேவாரின் மேல் படை யெடுத்து வந்தான். கடல் அலைபோல் மொகலாய சைனியம் மேவாரின் வளம் பொருந்திய இடங்களின்மேல் பெருகி ஓடி, எவ்விதத் தடையுமின்றி அவற்றைத் தங்கள் வசப்படுத்திக்கொண்டன. பிரதாபஸிம்மன், அவர்களைத் தடுக்கவே யில்லை.

பிறகு, மொகலாய சைனியம் காவல் மிகுந்த மலைப் பிரதேசங்களை நோக்கி முன்னேறலாயிற்று. அந்தப் பிரதேசங்களுக்குள் நுழைய ஒரே வழிதான் இருந்தது. அதுவும் அடைக்கப்பட்டிருந்தது. அந்த வழிக்குப் பெயர்தான் 'ஹல்தி காடி' என்பது. இருபத்திரண்டாயிரம் ரஜபுத்திரர்கள் அதைக் காவல் புரிந்தனர். மானஸிம்மன் கவலையும் திகைப்புங்கொண்டு, 'காடி'யின் சமீபத்தில் தனது கூடாரத்தை அமைத்தான். மொகலாய சைனியம் யுத்தத்திற்குத் தயாராக நின்றது.

யுத்தத்திற்கு முன், மொகலாயர்களின் பாசறையில் சற்றுப் புகுந்து, டில்லி ஆதிக்கத்தை ஒப்புக்கொண்டு, அக்பரின் கொடியை வங்கத்திலிருந்து காபூல் வரை பறக்கவிட்ட பிரக்கியாதி பெற்ற அம்பராதிசன் மகாராஜா மானஸிம்மனைச் சந்திப்போம்.

ஆஹா! சாதிச் சண்டையைவிட விரோதம் நிறைந்த சண்டை உலகில் வேறொன்றும் இல்லை! சாதிச் சண்டையின் காரணமாகத்தான் இன்று ரஜபுத்திர குல திலகமான மானஸிம்மன், ரஜபுத்திர குல மகுடபதியான ராணு பிரதாபஸிம்மனுக்குச் சத்துருவானுன்.

இரவு நேரம். மொகலாய படைத்தளம் அகண்டு கிடந்தது. கூடாரத்தின் வெளிச்சத்தால் மலைப் பிரதேசம் ஒளிகொண்டு பிரகாசித்தது. ஆங்காங்கு வீரர்கள் ஒன்று சேர்ந்து உல்லாசமாகப் பேசிக்கொண்டிருந்தனர். மேவார் வீரர்களின் திடப் பிரதிக்ஞையை நோக்குங்கால் மகத்தான கோர யுத்தம் ஒன்று நிகழப்போவதென்னவோ நிச்சயம்! அதில் ஈடுபடப்போகும் மொகலாய வீரர்களில் எத்தனை பேர் டில்லிக்குத் திரும்பிச் செல்வார்களோ யார் கண்டார்கள்?

இந்தக் கூடாரங்களுக்கு மத்தியில் கணக்கற்ற விளக்குகளாலும் கொடிகளாலும் அலங்கரிக்கப்பட்ட ஒரு கூடாரத்தில்தான் யுவராஜன் இறங்கியிருந்தான். அந்தக் கூடாரத்தில் அமர்ந்து ஸலீம் சந்தோஷமாகப் பாட்டுக் கேட்டுக்கொண்டிருந்தான். எதிரே சாராயப் புட்டிகளும் கோப்பைகளும் வைக்கப்பட்டிருந்தன. அருகே சில அழகிய யுவதிகள் அமர்ந்து இன்னிசை பாடிக்கொண்டிருந்தனர். யுவராஜன் திடகாத்திரமுள்ள வாலிபன். அழகிய தோற்றமுடையவன். அவனுடைய அகன்ற நெற்றியில் அன்று கவலைக் குறிகள் தென்பட்டன. முகம் உத்ஸாகமின்றிப் பொலிவிழந்து விளங்கியது.

பாடகிகள் பாடிக்கொண்டிருந்தனர். அதே

சமயம் காவற்காரன் ஒருவன் உள்ளே வந்து, 'ஜஹாம்பனாஹ்! மஹாராஜா மானஸிம்மர் முக்கியமான விஷயமாக வந்திருக்கிறார்' என்று தெரிவித்தான்.

மானஸிம்மன் யுத்த விஷயமாகத்தான் ஏதோ யோசனை செய்ய வந்திருக்கிறான் என்பதை அறிந்து கொண்டான் யுவராஜன். எல்லோரையும் போகும்படி உத்தரவிட்டான். பாட்டு நின்றது. கேளிக்கை முடிவடைந்து அந்தச் சபை கலைந்தது. சிறிது நேரத்திற்கெல்லாம் அம்பர் (ஜயபூர்) அரசனான வீர சிரேஷ்டன் மானஸிம்மன் கூடாரத்திற்குள் வந்து, யுவராஜனுக்கு சலாம் செய்தான். ஸலீம் மிக்க சந்தோஷத்துடன் அவனை வரவேற்றுத் தம் பக்கத்தில் அமர்த்தினான். பிறகு, கதவை மூடிக்கொண்டு இருவரும் பேச ஆரம்பித்தார்கள்.

மானஸிம்மன், யுவராஜன் இருவரும் வாலிபர்கள்; இருவரும் தைரியசாலிகள்; வீரர்கள்; போர் புரிவதில் நிபுணர்கள். இருவர் உள்ளங்களிலும் வாலிபத்தின் 'உத்ஸாகம் நிறைந்திருந்தது. ஸலீம், சக்கரவர்த்தியின் மகன். ஆகையால், அவன் சற்று உல்லாசப் பிரியனாக இருந்தான். டில்லி சிம்மாசனத்தில் அமர்ந்த பாதுஷாக்களில் அவனைப் போன்ற உல்லாசப் பிரியமுடைய பாதுஷா யாரும் இல்லை. அவன் ஸரளமான சுபாவமும் உதார குணமும் உள்ளவன். வாலிபத்தின் சேஷ்டைகளால் அவன் எப்பொழுதும் கேளிக்கைகளில் மூழ்கிக் கிடந்தான். அரசியல் காரியங்களைவிட அவன் மனம் இவைகளில்தான் அதிகமாக ஈடுபட்டிருந்தது. சதா ஆடல் பாடல்களிலேயே மூழ்கிப் பிற்காலத்தில் ராஜ்ய காரியங்களைக் கவனிப்

பதைக்கூட விட்டுவிட்டான். நூர்ஜஹான்தான் ராஜ்ய காரியங்களை நிர்வகித்து வந்தாள்.

மானஸிம்மன் ஒப்பற்ற வீரனாகவும், திட சித்தம், செயலாற்றும் சக்தி, கூர்மையான புத்தி இவைகளுடனும் திகழ்ந்தான். டில்லியைவிட்டுப் புறப்பட்ட பிறகு சகல காரியங்களையும் அவனே பார்த்து வரலானான். சகல பொறுப்புகளையும் அவனிடமே விட்டிருந்தான் ஸலீம்.

'ராஜா ஸாஹப்! எதிரிகள் போர் புரியச் செய்து வைத்திருக்கும் ஏற்பாடுகளை நீங்கள் பார்த்திருப்பீர்களே? எப்பொழுது போரைத் துவக்கலாம் என்று கருதுகிறீர்கள்?' என்று கேட்டான் இளவரசன் ஸலீம்.

'நாளைய தினமே போரை ஆரம்பிப்பது உசிதம் என்று நான் கருதுகிறேன். மழைக் காலம் வர அதிக நாட்களில்லை. டில்லி அதிபரின் காரியம் எவ்வளவு சீக்கிரம் பூர்த்தியாகிறதோ அவ்வளவுக் கவ்வளவு நல்லது' என்றான் மானஸிம்மன்.

'என் அபிப்பிராயமும் அதுதான்! ஷாஹி சேனையின் முன் மேவார் சேனை நிற்கக்கூட முடியாது! போரிடுவதெங்கே?'

'அதில் சந்தேகமில்லை. ஆயினும், நான் தங்களிடம் ஒன்று விண்ணப்பித்துக் கொள்கிறேன். தங்களுக்கு இஷ்டமானால் நாளையே போர் முடிந்துவிடும். நாம் இவ்வளவு நாட்களாகச் செய்த முயற்சிகள், போர் ஆயத்தங்கள் இவைகளை நாளை யுத்தத்தோடு ஒப்பிடுங்கால், வெறும் சிறுவர் விளையாட்டைப்போல்தான் தோன்றும். அதாவது, சிறிது சிரமத்தினால் ஆகக்கூடிய காரியத்திற்கு இவ்வளவு

ஆடம்பரம் செயய வேண்டிய அவசியம் என்ன இருக்கிறது?'

'தைமூர்லங்கின் வம்சத்தவருக்கு ஒளிந்து நின்று போர் செய்யத் தெரியாது. இந்த யுத்தம் எவ்வளவு நாட்கள் நீடிக்கும்? புலியின் முன் மான் எத்தனை நாட்களுக்குத் தாக்குப்பிடிக்க முடியும்? பாதுஷாவின் சேனையின் முன், கோழை பிரதாபன் எவ்வளவு நாட்கள் நிற்க முடியும்? வெகு சீக்கிரம் அவன் புறங்காட்டி ஓட்டம் பிடிக்க நேரும்!'

'தங்கள் தந்தையின் பலம் பொருந்திய சேனையை எதிர்த்து நின்று போர் புரியத் தக்கவர் இப்பொழுது இந்தப் பாரத நாட்டிலேயே யாரும் கிடையாது. ஆயினும், பிரதாபஸிம்மன் சாமானியன் அல்ல. போரில் புறங்காட்டி ஓடும் ஆள் அவன் அல்ல. இந்த ஊழியன் அதை நன்ருய் அறிவான். மேலும்.........'

'மான்ஸிங்! நீங்கள் இன்னும் என்னவோ சொல்ல ஆரம்பித்தீர்கள், ஏன் அதற்குள் நிறுத்தி விட்டீர்கள்? பிரதாபஸிம்மனின் தைரியத்தைப் பற்றி நானும் கேள்விப்பட் டிருக்கிறேன். ஆனுல், அவனுடைய பராக்கிரமத்தைப்பற்றித் தாங்கள் இன்னும் விவரமாக அறிந்திருப்பீர்கள்!'

'பிரதாபஸிம்மனை அடியேன் ஒருதரம் சந்தித் திருக்கிறேன். ஆகையால், அவனை நான் நன்ருக அறிவேன்.'

'தாங்கள் எதைப்பற்றிப் பேசுகிறீர்கள்?'

'பிரதாபஸிம்மன், பயங்கரப் புரட்சிக்காரன். அவன் பாதுஷாவைத் தன் ஜன்ம விரோதியாகக் கருதுகிருன். அவன் உயிருடன் இருக்கும் வரை

பாதுஷாவின் ஆதிக்கத்தை ஒப்புக்கொள்ளமாட்டானே, பயங்கரப் போர் நிகழப்போகிறது. அதைச் டான். சொல்லத்தான் இந்த ஊழியன் இங்கு வந்தான்.'

'அதுதான் எனக்கும் தெரியுமே! நீங்கள் இன்னும் ஏதாவது சொல்லவேண்டி யிருக்கிறதா? டில்லியிலிருந்து புறப்பட்டது முதல் தாங்கள் என் வலக் கரம்போல் இருந்துவருகிறீர்கள். நான் சகல பொறுப்புகளையும் தங்களிடமே விட்டிருக்கிறேன். என் மனத்திலுள்ள சகல விஷயங்களையும் தாங்கள் அறிவீர்கள். நான், தங்கள் மனத்திலுள்ள யாவற்றையும் அறிவேன். தாங்கள் என்னிடம் எதையும் ஒளிக்க வேண்டாம்!'

'ஹுஸூர்! தங்கள் முன்னிலையில் இந்த ஊழியன் எதையும் ஒளிக்க விரும்பவில்லை; இதுவரை எதையும் ஒளிக்கவும் இல்லை. பிரதாபஸிம்மனிடம் எனக்கு ஒரு கடன் இருக்கிறது. அது, நினைவுக்கு வரவே, என் வார்த்தை தடைப்பட்டுவிட்டது.'

'பிரதாபஸிம்மன், நீங்கள் இருவரும் ஹிந்துக்கள். இருவருக்கு மிடையே கடனே, நட்போ இருக்கக்கூடியதுதான். நண்பனுக்கு எதிராக ஆயுதமெடுக்கத் தங்களால் முடியாவிட்டால், தாங்கள் போரினின்றும் விலகி நில்லுங்கள். நாங்கள் தனியாகவே போரிடுகிறோம். பார்க்கிறோம் பிரதாபனின் புஜங்களில் எவ்வளவு பலமிருக்கிறதென்பதை!'

மானஸிம்மனின் கண்கள் கோபத்தால் சிவந்தன. அவன் மெள்ள, 'பிரதாபஸிம்மனிடம் எனக்கிருக்கும் கடன், அவனுடைய இதய ரத்தத்தினுல்தான் தீரும். தங்களிடம் ஒளிக்க வேண்டியதொன்று

மில்லை. நான், அடைந்த அவமானம் எதையும் ஒளிக்க மாட்டேன். இதைத் தங்கள் தந்தையிடம் சொல்லி யிருக்கிறேன். இன்று தங்களிடமும் சொல்லு கிறேன்.

'ஸோலாப்பூரி லிருந்து நான் திரும்பி வரும் பொழுது பிரதாபஸிம்மனைச் சந்திக்க ஆசைப்பட்டு மேவாருக்கு வந்தேன். மேவார் அரசர்கள், சூரிய வம்சத்தைச் சேர்ந்தவர்கள்; ரஜபுத்திரர்களில் சர்வ சிரேஷ்டர்கள்; இவற்றைத் தவிர ராஜ்வாடில் உள்ள சகலராலும் பூஜிக்கப்படும் கௌரவம் பெற்ற வர்கள். பிரதாபஸிம்மன் ராணாவாக இருக்கிறான் என்பதைத் தெரிந்துதான் அப்பொழுது நான் அவனைச் சந்திக்கச் சென்றேன்.

'சித்தௌர் நாசமானதும் உதயஸிம்மர் உதய புரத்தை நிர்மாணித்தார். அங்கேயே தமது ராஜ தானியையும் ஸ்தாபித்தார். ஆனால், பிரதாபஸிம் மன் தனது தந்தையின் ராஜதானியை விடுத்து கமல மீரின் மலைக் கோட்டையில் இருந்தான். நான் வந் திருக்கும் விஷயம் அறிந்து, என்னை அழைத்துப் போக அவன் கமலமீரிலிருந்து உதயசாகரம் வரை வந்தான்.

'உதயசாகரத்தின் கரையில் மிக்க ஆடம்பரத்து டன் விருந்துக்கு ஏற்பாடுகள் செய்தார்கள். நான் போஜனம் செய்ய உட்கார்ந்தேன். ஆனால், ராணா அங்கே இல்லை. பிரதாபனின் மகன் அமரஸிம்மன், "தலைவலியின் காரணமாகத் தந்தை வர முடிய வில்லை. உங்களுக்கு உபசாரம் செய்ய என்னை அனுப்பினார். நான் தங்களுடன் அமர்ந்து போஜ னம் செய்கிறேன்" என்றான்.

'மானஸிம்மன், எவ்வளவோ தேசங்களைப்பார்த்திருக்கிறான்; எவ்வளவோ பெயருடன் பழகியிருக்கிறான். தலைவலியின் காரணம் அவனுக்கு விளங்கி விட்டது. மானஸிம்மன், டில்லி அதிபருடன் புதிய சம்பந்தம் வைத்துக்கொண்டதால், கர்வம் பிடித்த ராஜத் துரோகியான பிரதாபஸிம்மன், அவனுக்குத் தகுந்த மரியாதை செய்யவில்லை—என்பதை அவன் உணர்ந்துகொண்டான்...' மானஸிம்மனின் குரல் கோபத்தால் தடைப்பட்டது.

'பிறகு என்ன நடந்தது?' என்று கேட்டான் இளவரசன் ஸலீம்.

மானஸிம்மன் கோபம் நிறைந்த குரலில் சொல்லலானான்: '"தலைவலியின் காரணம் எனக்குத் தெரியும்—என்பதை ராணாவிடம் சொல். ஏதோ நடந்தது நடந்துவிட்டது. இனி அதைத் தவிர்க்க முடியாது. இதன் காரணமாக மகாராணா என்னுடன் அமர்ந்து போஜனம் செய்யாவிட்டால், வேறு யார் என்னுடன் அமர்ந்து என்னைக் கௌரவிப்பார்கள்?" என்று அமரனிடம் நான் கூறினேன்.

'வணக்கம் நிரம்பிய என்னுடைய இந்த வேண்டுகோளுக்கு ராணா அளித்த பதிலை என் உயிருள்ள வரை மறக்கமாட்டேன். மறந்தால் நாளைப் போரில்தான் மறப்பேன்!

'பிரதாபஸிம்மன் என்ன சொல்லி அனுப்பினான் தெரியுமா? "முஸல்மானுக்கு ரஜபுத்திரப் பெண்ணைக் கொடுத்தவன்—அதாவது, தன் சகோதரியை முஸல்மானுக்குக் கலியாணம் செய்துகொடுத்தவனும், முஸல்மான்களுடன் அமர்ந்து போஜனம் செய்பவனுமான—அவனுடன், நான் கூட இருந்து

போஜனம் செய்யேன்!" என்று பதில் சொல்லி அனுப்பினான்.

'ராணாவிடமிருந்து இந்தப் பதில் வந்ததும், நான் பந்தியிலிருந்து எழுந்துவிட்டேன். அன்ன தேவனுக்கு நமஸ்காரம் செய்து, இரண்டு மூன்று பருக்கைகளை என் பாகையில் வைத்து, அன்று தினமே, "இந்தக் கர்வம் பிடித்தவனின் கர்வத்தைச் சிதற அடிக்காவிட்டால் என் பெயர் மானஸிம்மன் அல்ல" என்று பிரதிக்ஞை செய்துகொண்டேன். அந்த அவமானக் கடனை நாளை யுத்தத்தில் பிரதாபஸிம்மனின் ரத்தத்தால் தீர்த்துக் கொள்வேன்' என்றான் மானஸிம்மன்.

மானஸிம்மனின் சரீரம் கோபத்தால் நடுங்கியது. அவன் கண்களினின்றும் தீப்பொறிகள் பறந்தன. ஸலீமினாலும் பொறுக்க முடியவில்லை. அவனும் கோபத்துடன் 'வீரரே! தங்களை அவமானம் செய்தவன் என்னையும் அவமானம் செய்தவனாவான். ஸலீம் அவனிடம் பழி தீர்த்துக்கொள்ளப் பின்வாங்கான். தாங்கள் அவமான மடைந்தபோது, நாங்கள் மாத்திரம் தப்பினோமா என்ன? நாளை நீங்களும் நானும் சேர்ந்து அந்த அவமானத்திற்குப் பழி வாங்குவோம். இன்று தாங்கள் பொறுமை யடையுங்கள்' என்றான்.

ஸலீமின் பிரதிக்ஞையால் மானஸிம்மனின் உள்ளத்தில் எழுந்த ஜ்வாலை சாந்தமடையலாயிற்று. அவன் கண்களினின்றும் இரண்டு துளி கண்ணீர் துளிர்த்தது. அவன் ஸலீமுக்கு ஸலாம் செய்துவிட்டுத் தன் கூடாரத்திற்குத் திரும்பினான்.

மானஸிம்மன் சென்ற பிறகு, யுவராஜனின்

கூடாரத்தில் மீண்டும் ஆடல் பாடல் ஒன்றும் நடை பெறவில்லை. பொழுது புலர்ந்ததும் போர் முரசின் ஒலி நாற்றிசையும் பரவியது. வானமும் வையமும் நடுங்கின.

# VII

## ஹல்திகாடி யுத்தம்

பயங்கரமான யுத்தம் ஆரம்ப மாயிற்று. ஒரு புறம் சகிக்க முடியாத அவமானத்திற்காகப் பழிவாங்க வேண்டும் என்ற கொதிப்பு; மற்ருெரு புறம் ஸிஸோதிய வம்சத்தின் வெகு நாளைய சுதந்திரத்தைக் காக்கவேண்டிய பிரதிக்ஞை. ஒரு புறம் மொகலாய சேனையும் அம்பர் சேனையும்; மற்ருெரு புறம் மேவாரின் பராக்கிரமம் மிகுந்த வீர மண்டலம்.

ஹல்திகாடியில் மேலும் கீழுமாக மலையின் இரு புறங்களிலும் இருபத்திரண்டாயிரம் வீரர் யுத்தம் செய்யத் தயாராக நிற்கின்றனர். வீரர்கள் வியூகம் வகுத்துத் தங்கள் தலைவனை நாற்புறமும் சூழ்ந்து காவல் புரிகின்றனர். சில சமயம் அம்புகளையும் ஈட்டிகளையும் எறிந்து சத்துருவைக் கொல்கிருர்கள். சில சமயம் தலைவனின் சைகையைக் கண்டு சத்துரு சேனையின் மேல் பாய்ந்து, தங்கள் பராக்கிரமத்திஞல் அவர்களைச் சின்ஞபின்னப் படுத்துகிருர்கள். மலைச் சிகரத்தில் நின்று, பீல் ஜாதி வீரர்கள் வில்லும் அம்பும் ஏந்தி, எதிரிப் படைகளின் மேல் அம்பு மழை பொழிகின்றனர். சமயம் கிடைத்தபோது சத்துரு சேனையின்மேல் பெரும் பெரும் பாறைகளைப் புரட்டிவிடுகின்றனர்.

இன்று இருதரப்பா ரிடையேயும் பயங்கர மான போர் நடக்கிறது. யாரும் பின்னடைய வில்லை. துணைவர்களான செளஹான், ராடௌர், ஜாலா, சந்தாவத், ஜகாவத் முதலிய ரஜபுத்திர வீரர்கள் சிங்கநாதம் செய்துகொண்டு எதிரிப் படை யின் மேல் பாய்கின்றனர். ஒரு படை நாசமானதும் மற்றொரு படை முன்னுக்கு வருகிறது. குவியல் குவியலாக விழும் மனித உடல்களின் மேல் நடந்து வீரர்கள் முன்னேறுகின்றனர். ஆயினும், சமுத்திரம் போன்று கணக்கற்ற டில்லி சேனையின் முன், வீரம் பொருந்திய இந்தச் சிறு ரஜபுத்திர சைனியம் என்ன செய்யமுடியும்? டில்லி சேனையின் பயங்கர மான பீரங்கியினால் ரஜபுத்திர சைனியம் குவியல் குவியலாகச் சாய்ந்தது. பிரசண்டமாகத் தீயைக் கக்கும் இந்த அக்னி பாணத்தைக் கண்டு ரஜபுத்தி ரர்கள் சலிப்படையவில்லை. அவர்கள் தளம் தள மாக முன்னேறி, எதிரிகளை வெட்டி வீழ்த்திக் கொண்டே தாங்களும் மடியலானார்கள்.

அந்தப் பயங்கரமான போரில் பிரதாபஸிம்மன் முன்னணியில் நின்றான். யுத்தம் ஆரம்பமானதுமே அவன் அம்பராதிபதியான மானஸிம்மன் பக்கம் செல்லலானான். ஆனால், கணக்கற்ற டில்லிச் சைனி யத்தின் குண்டுகளை விலக்கிக்கொண்டு அருகே நெருங்க முடியவில்லை.

பிரதாபஸிம்மன், அந்தப் பக்கம் போக முடி யாததை யறிந்ததும், தன் குதிரையை மறு பக்கம் திருப்பி, யானை மீதிருந்து போர் புரிந்து கொண் டிருக்கும் ஸலீமின் பக்கம் பாய்ந்தான். இந்தத் தடவை ரஜபுத்திர சைனியம் வாள் வலிமையால்

மொகல் சேனையை விலக்கி யடித்து முன்னேறி யது. ஆயுதபாணிகளான மொகல் வீரர்கள், தளம் தளமாகத் தத்தம் இடத்தில் நின்றார்கள். அணையை உடைத்துக்கொண்டு பெருகும் வெள்ளம் போல், பிரதாபஸிம்மனின் சைனியம் மொகலாய சைனியத்தைப் பிளந்துகொண்டு உட்புகுந்து எதிர்ப் பட்டவரை வெட்டிச் சாய்த்தபடி முன்னேறியது. வாள், ஈட்டி வீச்சின் முன் மொகல் சேனையால் நிற்க முடியவில்லை; அவர்களைத் தடுக்கவும் முடியவில்லை. பிரதாபஸிம்மன், ஸலீமின் முன்னிலையில் வந்துசேர்ந் தான். இருதரப்பிலும் மாபெரும் வீரர்கள் தங்கள் தங்கள் தலைவனைக் காக்கத் துடித்துக்கொண் டிருந் தனர். தலைகால் தெரியாத யுத்தம் நடக்கலாயிற்று. சிறிது நேரம் வீரர்களுக்குத் தங்கள் சுய நினைவே இல்லை. யார் எவர் என்று பாராமல் எதிர்ப்படுகிற வர்களை யெல்லாம் வெட்டிச் சாய்த்தனர். அந்தச் சமயம் நடந்த பயங்கரமான படுகொலைகளையும், வானளாவிய ஜய கோஷத்தையும், காயமடைந்தவர் களின் கூக்குரல்களையும் வர்ணித்துச் சொல்வ தென்பது முடியாத காரியம்.

பிரதாபஸிம்மனின் அமோகமான வாள் வலிமை யால் ஸலீமின் மெய்க்காப்பாளர் தரையில் சாய்ந் தனர். பிரதாபஸிம்மன் குறி வைத்து ஸலீமின் மீது ஓர் ஈட்டியை எறிந்தான். ஆனால், அது அம்பாரியின் இருப்பில் தாக்கி வியர்த்த மாயிற்று. ஸலீமின் உயிர் தப்பிவிட்டது. பிரதாபஸிம்மன் கோபத்தினால் பொங்கி எழுந்து குதிரையை முன்னே செலுத்தினான். பழக்கப்பட்ட அந்தக் குதிரை, பிரதாபஸிம்மனின் கருத்தை யறிந்துகொண்டு வேகமாய்க் குதித்துக்

கிளம்பி, ஸலீம் ஏறி இருந்த யானையின் வயிற்றின் மேல் தன் முன்னங்கால்களை வைத்து நின்றது. பிரதாபஸிம்மனின் வஜ்ரவாள் வீச்சினால் ஸலீமின் மாவுத்தன் உயிரிழந்து கீழே சாய்ந்தான். மாவுத்தனில்லாத யானை ஆபத்தை உணர்ந்து ஸலீமுடன் ஓட ஆரம்பித்தது. பிரதாபஸிம்மனும் அவனுடைய சகாக்களும் பயமின்றி ஸலீமைப் பின்தொடர்ந்து, மொகலாய சேனையைச் சின்னாபின்ன மாக்கினார்கள். பிரதாபஸிம்மனுடைய இந்த அசாதாரணமான வீரத்தைக் கண்டு, ஹிந்துக்களுக்கு, அர்ஜுனனுடைய ஞாபகம் வந்தது. மொகலாய சைனியம் சிறிது நேரம் பீதியினால் கதிகலங்கி நின்றது.

அவர்கள் தங்களுக்கு வந்திருக்கும் ஆபத்தை உணர்ந்து உன்மத்த மடைந்து போரிடலாயினர். துருக்கியர்களும் கோழைக ளல்ல! நூறு வருஷ காலமாகப் பாரதநாட்டை ஆள்பவர்கள், இன்று ஹிந்துக்களிடம் தோல்வியை ஒப்புக்கொள்வார்களா? அந்த மொகலாய சேனை, ஒரு முறை உரத்த குரலில், 'அல்லாஹோ அக்பர்!' என்று கோஷமிட்டுப் பிரதாபஸிம்மனை நாற்புறமும் சூழ்ந்து கொண்டது. ரஜபுத்திரர்களுக்குப் போர்க்களத்தினின்றும் ஓடவே தெரியாது. அவர்கள் தங்கள் பிரபுவை மொகலாய சைனியம் கவ்வுவதைக் கண்டு சீறி எழுந்தனர். எண்ணற்ற சத்துருக்களை வெட்டி வீழ்த்தித் தாங்களும் வீழ்ந்தனர். பிரதாபஸிம்மனின் உடலில் ஏழு இடங்களில் காயங்கள் உண்டாயின. அவன் அவற்றைக் கவனிக்கவே இல்லை. முன்னேறிக்கொண்டே இருந்தான்.

எதிரிப் படைகள் மீண்டும் ராணுவைச் சூழ்ந்து கவிவதை, பின்னு லிருந்த ரஜபுத்திரர்கள் கண்டனர். உடனே அவர்கள் ஸிஸோதியாவின் கொடியைத் தூக்கி, 'ஜய துர்க்கே!' என்று சொல்லி முன்னே தாவினுர்கள். மற்ற ரஜபுத்திர சைனியங்களும் கொடியைக் கண்டதும் குதூகல மடைந்து, பிரதாபஸிம்மன் போர் புரிந்துகொண்டிருந்த இடத்திற்கு வந்து சேர்ந்தன. அவர்கள், பெரும் வீரம் காட்டி யமன் வாயினின்றும் தங்கள் தலைவனை விடுவித்துக்கொண்டு வந்தனர். இந்தத் துணிகரமான செயலில் பல ரஜபுத்திரர்கள் உயிரிழந்தனர்.

சிறிது நேரத்திற்குப் பிறகு பிரதாபஸிம்மன் மீண்டும் யுத்த ஆவேசங் கொண்டு, பலாபலத்தைச் சட்டை செய்யாமல் மொகல் சேனைக்குள் புகுந்தான். தமது தலைவனைச் சத்துரு சேனை வளைத்துக்கொள்வதைக் கண்ட ரஜபுத்திர சைனியம், மீண்டும் அவன் பின் சென்று, சுதந்தரப் போர்வெறி கொண்ட பிரதாபஸிம்மனை எதிரிகள் வலையினின்றும் காத்தது.

ஆனுல், பிரதாபஸிம்மன் அன்று தன் வசத்தில் இல்லை. அவன் மீண்டும் தன் உயிரைத் திரணமாக எண்ணி மொகலாய சைனியத்தினுள் புகுந்தான். இந்தத் தடவை மொகலாய சைனியமும் கோபங் கொண் டெழுந்து பிரதாபனைச் சூழ்ந்துகொண்டது. பிரதாபஸிம்மன் வெளி வர மார்க்க மில்லை. இந்தத் தடவை அவன் தப்புவான் என்ற நம்பிக்கையும் இல்லை. மொகல் சேனை அந்தக் காபிரை வெட்டி வீழ்த்தி, டில்லி அதிபரின் பெரிய எதிரி ஒருவனை அகற்ற எண்ணியது. மானஸிம்மன் அடைந்த அவமானத்திற்குப் பதிலிழைக்கப்பட்டுவிடும்.

ரஜபுத்திரர்கள் ராணாவின் ஆபத்தான நிலைமையைக் கண்டு, அவனைக் காப்பாற்றத் துடித்தனர். ஆனால், மொகலாய சைனியம் அளவற்று நின்றது. ரஜபுத்திர சைனியத்தில் பிரதானமாக இருந்த வீரர்கள் போர்க்களத்தில் மடிந்துவிட்டார்கள். மீதியிருந்தது சிறு சைனியம். இந்தத் தடவை ராஜாவைக் காப்பது துர்லபம் என்று தோன்றியது. ஆயினும், ரஜபுத்திரர்கள் கூட்டம் கூட்டமாய் மாறி மாறித் தங்கள் தலைவனைக் காப்பாற்ற முயற்சித்தனர். ஆனால், அவர்களால் சமாளிக்க முடியவில்லை. சத்துரு சேனையில் உள்ள அளவற்ற வீரரை வெட்டிச் சாய்த்து அவர்களும் சாய்ந்தனர். மொகலாய சேனைத் தளத்திற்குள் அவர்களால் பிரவேசிக்கவே முடியவில்லை. இந்தத் தடவை தங்கள் பிரபுவை விடுவித்துக்கொண்டு வரவும் முடியவில்லை.

தைலவாராவின் அரசன் தூரத்தில் நின்று இதைப் பார்த்தான். சட்டென்று அவன் இஷ்ட தேவதையை நினைந்து, ஜாலா வம்சத்து வீரர்களுடன் முன்னேறினான். மேவாரின் சுவர்ண சூரியக் கொடியை வீரன் ஒருவன் ஏந்தி நடந்தான். அவனிடமிருந்து அதை வாங்கிக்கொண்டு ஜாலாதிபதி முன்னேறினான்.

அவனுடைய வேகத்தை மொகலாயரால் தடுக்க முடியவில்லை. வீரனான தைலவாரா அதிபன், சத்துரு சைனியத்தைப் பிளந்து உட்புகுந்து, உன்மத்தம் கொண்ட யானையைப்போல் போர் புரியும் பிரதாபஸிம்மனிடம் வந்து சேர்ந்தான். அங்கு வந்து பிரதாபஸிம்மனுக்குப் பூரண உதவியையும் புரிந்தான். அவன் உயிரைக் காத்தான். அவனை எதிரி

களிட மிருந்து காப்பாற்றிக் கொண்டு வந்தான். ஆனால், அந்தப் பிரசண்ட சாகசத்தில் ஜாலாதிபதி தன்னுடைய உயிரைத் தியாகம் செய்தான்.

மகாராணா, ஜாலாதிபதியை நோக்கி, 'ஜாலாதிபதி! இன்று உன் உயிரைக் கொடுத்து என் உயிரைக் காத்தாய்!' என்றான்.

தைலவாராவின் அதிபன் தளர்ந்த குரலில் பதிலளித்தான்: 'ஜாலாதீசன் தர்மத்தை அறிவான். ஆபத்துக் காலத்தில் அவன் மகாராணாவைக் கைவிட முடியுமா?'

வஸந்தோத்ஸவ தினத்தன்று அவன் சொன்னது ராணாவுக்கு ஞாபகம் வந்தது. தைலவாரா அதிபனின் உடல் பூமியில் சாய்ந்தது.

இருபத்திரண்டாயிரம் ரஜபுத்திரர்களில் அந்த முதல் நாள் யுத்தத்தில், பதினான்காயிரம் வீரர்கள் மடிந்தனர். எண்ணாயிரம் பேரே மிஞ்சினார்கள். செயலற்று, பிரதாபஸிம்மன் ஹல்திகாடி யுத்தத்தை நிறுத்திவிடும்படி நேர்ந்தது. மொகலாயர்களுக்கு வெற்றி கிடைத்தது. ஆனால், அந்த யுத்தத்தை மறக்க முடியுமா? பல வருஷங்கள் வரை டில்லியிலும், மஹாராஷ்டிர தேசத்திலும், வங்காளத்திலும் வயதான மொகலாய வீரர்கள், வாலிப வீரர்களுக்கு ஹல்திகாடி யுத்தத்தையும், ராணா பிரதாபஸிம்மனின் பயங்கரமான போர்த் திறமையையும் கதையாகச் சொல்லிக்கொண் டிருந்தார்கள்.

# VIII

## இரு சகோதரர்கள்

**பி**ரதாபஸிம்மன் போர்க்களத்தை விட்டுச் சென்ருன். ஆயினும், ஆபத்து அவனைத் தொடர்ந்தது. இரு மொகலாய வீரர்கள் அவனைப் பின்தொடர்ந்தனர். பிரதாபஸிம்மனின் குதிரை, பாய்ச்சலில் கிளம்பி ஒரு சிறு நதியைக் கடந்தது. மொகலாய வீரர்கள் அந்த நதியைக் கடக்கச் சிறிது தாமதமாயிற்று. பிரதாபஸிம்மனும் காயமடைந்திருந்தான். அவனுடைய குதிரையும் காயமடைந்திருந்தது. ஆகையால்தான் மொகலாய வீரர்கள் பின்தொடர்ந்தனர். இந்தத் தடவை, தான் தப்புவது கஷ்டம் என்று எண்ணினுன் ராணு. ஆயினும், ஒளிந்துகொண்டு தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள அவன் விரும்பவில்லை. சற்றுத் தயங்கினுன். பின்னுலிருந்து யாரோ, 'யார் போகிறது?' என்று கேட்கும் குரல் கேட்டது.

பிரதாபஸிம்மன் பின்புறம் திரும்பிப் பார்த்தான். ஒரு வீரன் குதிரை மேல் வருகிருன். அவன் வேறு யாருமில்லை; அவனுடைய நேர் சத்ருவும், ஒன்றுவிட்ட சகோதரனுமான சக்திஸிம்மன்தான்.

பிரதாபஸிம்மன் கோபத்துடன், 'பெங்கிராமஸிம்மரின் பேரனுக இருந்தும், நீ முஸல்மான்களுக்கு அடிமையாகியிருக்கிருய்! இதைவிட நமது வம்சத்திற்கு வேறு என்ன களங்கம் வேண்டும்? அது போதாதென்று, இதோ, முஸல்மான்களுக்காக என்னைக் கொல்வதற்குப் பின்தொடர்ந்து வருகிருய். குலத் துரோகி! அதமப் பதரே!! ஸங்கிராம

ஸிம்மரின் வம்சத்தில் படிந்த களங்கத்தின் கறையை இதோ போக்குகிறேன்' என்று ஆக்ரோஷத்துடன் வாளை உறுவினான்.

இதைக் கேட்டு சக்திஸிம்மன் பயப்படவில்லை; கோபிக்கவும் இல்லை. மெதுவாக, பிரதாபஸிம்மனின் அருகே வந்து, 'அண்ணா! ஒரு நாள் நான் தங்கள் உயிருக்குக் காதகனாக இருந்தேன். ஆனால், இன்று அந்தக் கெட்ட எண்ணம் என் உள்ளத்தினின்றும் அகன்றுவிட்டது. இன்று, தங்கள் வீரத்தைக் கண்டு அன்பு கொண்டேன். தாங்கள் என் குற்றங்களை மன்னித்து என்னைத் தங்கள் ஊழியனாக ஏற்றுக்கொள்ளுங்கள்' என்றான்.

சக்திஸிம்மன் கண்களினின்றும் கண்ணீர் பெருகி வழிந்தது. இருவருடைய மனத்திலும் வெகு நாட்களாக இருந்த வைரபாவம் அன்று அகன்றது. இருவர் இதயத்திலும் அன்பு பொங்கியது. குதிரையினின்றும் இறங்கி இருவரும் ஆலிங்கனம் செய்துகொண்டு புளகாங்கித மெய்தினர்.

பிரதாபஸிம்மனின் திறமையையும், வீரத்தையும் கண்டு, சக்திஸிம்மனின் மனத்திலிருந்த பகைமை அகன்றது. பல வருஷங்களாக இருந்த சகோதரப் பகை அன்று ஒழிந்தது. சகோதரன், சகோதரனிடம் மன்னிப்புக் கேட்கிறான். அன்புடன் கேட்கும் மன்னிப்பைப் பிரதாபஸிம்மன் கோழைத்தன மென்றா எண்ணுவான்! ஒருபொழுதுமில்லை. அவனுடைய குற்றங்களனைத்தையும் மறந்து, கண்ணீர் பொங்கும் கண்களுடன் சக்திஸிம்மனின் பக்கம் நோக்கினான். அவனை அப்படியே தன் மார்போடு அணைத்துக் கொண்டான்.

பிரதாபஸிம்மனைப் பின்தொடர்ந்த மொகலாயர்கள் எங்கே? தூரத்தில் அவர்கள் வருவதை, சக்திஸிம்மன் கண்டான். தன் சகோதரனின் உயிரைக் கவர வருகிறார்கள் என்பதை யறிந்து, கைவாளால் அவர்களை இவ்வுலகினின்றும் விடை கொடுத்து அனுப்பினான்.

மாலை நேரத்திய இருள் சமவெளியில் படிந்து, மலைகளிலும் படியலாயிற்று. சிறிது நேரத்திற்குள் அந்த இருள் உலகைக் கவிந்துகொண்டது. அந்த நிர்ஜனமான மலை வெளியில், இரு சகோதரர்களும், வெகு நாட்களாக இழந்திருந்த சகோதர வாஞ்சையைப் பெற்றனர். உடன்பிறந்த அன்பு அவர்கள் உள்ளங்களில் மறைந்து கிடந்தது; இன்று, பொங்கி வழிந்து, அவர்கள் மனத்தை ஆனந்தத்தால் நிரப்பியது.

வெகு நேரத்திற்குப் பிறகு, பிரதாபஸிம்மன் சொன்னான்: 'தம்பி சக்திஸிங்! இன்று, பிரதாபனுக்குத் தோல்வி நாளல்ல; இன்றுதான் வெற்றி தினம். நான் பெற்றிருக்கும் இந்தச் செல்வம் யுத்தத்தின் வெற்றியைவிட எவ்வளவோ மேலானது.

'இன்றைய தினத்திலிருந்து நானும் நீயும் பழைய பகையை மறந்து சேர்ந்திருப்போம். நம்மிடையே எப்பொழுதும் அன்பு நிலவட்டும்! இதைத்தான் நான் கடவுளிடம் பிரார்த்திக்கிறேன். நீயும் நானும் சேர்ந்து தாய்நாட்டைக் காப்போம்; அன்னியனை எதிரியைத் தொலைப்போம்; டில்லி அதிபதிக்கோ, அம்பர் அரசன் மானஸிம்மனுக்கோ பயப்படோம்!' என்றான்.

# IX

## புலிக் காடு

மூன்பு ஒருநாள் இரவு, தேஜ்ஸிம்மன் காட்டுப் பன்றியிடமிருந்து துர்ஜயஸிம்மனைக் காப்பாற்றி, தன் குகைக்கு அழைத்துச் சென்றது ஞாபகமிருக்கும். நடு நிசியில் துர்ஜயஸிம்மனைத் திரும்பவும் காட்டில் கொண்டுவந்து விட்டு அவனிடம் விடைபெற்ற தேஜ்ஸிம்மன், குகைக்குச் செல்லவில்லை. வானத்தில் தாரகைகள் சுடர்விட்டுக்கொண் டிருந்தன. தேஜ்ஸிம்மன் அந்த மலைவழியில் தனியாக இங்கு மங்கும் அலைந்து, இரவைக் கழிக்கலானான். சில சமயங்களில் மலை மேலும், சில சமயங்களில் கீழேயும், சில சமயங்களில் அடர்ந்த காட்டிலுமாக அந்தக் காரிருளில் அலைந்துகொண் டிருந்தான். ஆனால், அந்த மலைப் பிரதேசத்தில் அவன் அறியாத இடம் ஒன்றுகூடக் கிடையாது.

எட்டு வருஷ காலமாக, வீட்டைவிட்டு, பீல் ஜாதியாருடன் வனத்தில் ஒளிந்து வசித்துவந்தான். அவர்களுடன் மலைகளில் சுற்றுவான்; குகைகளில் தூங்குவான். இத்தகைய பழக்க முடைய அவன் அன்று சுற்றிச் சுற்றி ஓர் அடர்ந்த கானிற்குள் வெகு தூரம்வரை வந்துவிட்டான். அந்த வனத்தை விட்டுப் புறப்பட்டதும் எதிரே ஓர் உயர்ந்த மலை தென்பட்டது.

அந்த மலைமீது ஏறுவதற்கு வழி கஷ்டமான தாக இருந்தது. ஆனால், தேஜ்ஸிம்மனுக்கு இது

பெரிதல்ல. புலி சிங்கங்கள்கூட வனத்தில் அவனை விட வேகமாக ஓட முடியாது. தேஜ்ஸிம்மன் கையில் நீண்ட ஈட்டி இருந்தது. ஆஜானுபாகுவான அவனுடைய சரீரத்தையும், அவன் கையி லிருந்த ஈட்டியையும் கண்டு, வனவிலங்குகள் பயந்து அவன் வழியி லின்றும் ஓடி ஒளிந்தன.

மூன்று நான்குமணி நேரம் இம்மாதிரி அலைந்த பிறகு, தேஜ்ஸிம்மன் ஒரு மலைமீது ஏறினுன். சிறிது நேரம் வரை அங்கே நின்றுகொண் டிருந்தான். சிறிது நேரம் வானத்தை நோக்கினுன். பிறகு, மலையடிவாரத்தி லிருந்த நிசப்தமான அடவியை நோக்கினுன். அவன் மனத்தில் எத்தகைய சிந்தனை அலைகள் எழுந்தன என்பதை யாரால் சொல்ல முடியும்? வெகு நேரம் கழித்து அங்கிருந்த ஒரு குகையை நோக்கி நடந்தான்.

குகையின் வாசல் சாத்தப்பட்டிருந்தது. தேஜ்ஸிம்மன் வாசலிலிருந்து கதவைத் தட்டினுன். ஆனுல், உள்ளே யிருந்து யாதொரு பதிலும் வரவில்லை. நிசப்தமான இரவில் அந்தப் பயங்கரக் குகை வாசலில் நின்று, தேஜ்ஸிம்மன் பயமற்று மூன்ரும் முறையாகக் கதவைத் தட்டினுன். அந்தச் சப்தத்தால் அந்த மலையே எதிரொலி கொண்டது.

அந்தத்தடவை உள்ளே யிருந்து ஒரு கம்பீரமான குரல், ‘இரவு இந்த நேரத்தில் இந்தக் குகை வாசலில் யார்?’ என்று கேட்டது.

‘திலகஸிம்மரின் மகன் தேஜ்ஸிம்மன்’ என்ருன் யுவன். கதவு திறந்தது.

அந்த இருண்ட குகையில் நுழைந்து சற்று நின்ருன் தேஜ்ஸிம்மன். குகைக்குள் வெளிச்சமும்

இல்லை; மனிதக் குரலும் கேட்க வில்லை. அருகே இருந்த நீர்வீழ்ச்சிகளின் ஒலிமட்டும் கேட்டுக்கொண் டிருந்தது.

வெகு நேரம் கழித்து குகையில் யாரோ விளக்குக் கொளுத்தினார்கள்; பிறகு, வாசலருகே விளக்கைக் கொண்டுவந்தார்கள். ஒரு வயதான கிழவி. உயரமாக இருந்தாள். தலை நரைத்துப் பழுத்து விட்டவள். தேஜ்ஸிம்மனின் அருகே வந்து, அவனைக் கை ஜாடையால் ஓரிடத்தி லமரும்படி சொன்னாள். அவனும் அமர்ந்து, அந்தக் கிழவியின் பக்கம் ஆச்சரியத்துடன் பார்க்கலானான்.

தபஸ்வினியின் வயது எண்பதிற்கு மேலிராது. சரீரம் சுருங்கிவிட்டது. அவள்மெதுவாக, 'ராடௌர் வம்ச திலகமான மகாராஜா திலகஸிம்மரை, மேவாரில் அறியாதவர்கள் யார்? அவருடைய மகனான நீ, இந்த நள்ளிரவில் இங்கு வரக் காரண மென்ன? என்று கேட்டாள்.

'திலகஸிம்மரின் பெயர் ஏன் ஞாபகம் இருக்காது? அவர் சித்தௌரைக் காக்கத் தன் உயிரைக் கொடுத்தார். இப்பொழுது அவருடைய புகழ்தான் இருக்கிறது. அவருடைய சூரியமஹல் கோட்டையில் சந்தாவத் குலத்தைச் சேர்ந்த துர்ஜயஸிம்மன் ஆட்சி புரிகிறான். திலகஸிம்மரின் மனைவியும் இப்பொழுது இப்புவியில் இல்லை. அவருடைய மகனை பீல் ஜாதியார் வளர்த்தார்கள். அந்த பீல்களுடன் குகைகளில் ஒளிந்து வசித்து வருகிறான் அவன்' என்றான் தேஜ்ஸிம்மன்.

'சந்தாவத் குலத்திற்கும் ராடௌர் வம்சத்திற்கும் வெகு நாட்களாக இருந்து வரும் விரோதம்

எனக்குத் தெரியாததன்று. சூரியமஹல், முதலில் சந்தாவத் குலத்தாருடையதுதான். உன்னுடைய மூதாதையர்கள் மார்வாரிலிருந்து வந்து, தங்கள் வாள் வன்மையால் அந்தக் கோட்டையைக் கைக் கொண்டார்கள். அப்பொழுது ஏற்பட்ட விரோதம் இன்னும் தீரவே யில்லை. அந்த வம்சத்தவர்கள் ஜீவித்திருக்கிற வரையில் அதுவும் இருக்கும். சந்தா வத்தார்கள் போரிடுவதில் பின்வாங்கியவர்க ளல்ல. அவர்கள் சாதாரணமாகக் கோட்டையை விட்டு விடமாட்டார்கள்' என்றுள் தபஸ்வினி.

'அம்மா! ராடௌர் வீரரும் பலவீனர்கள் அல்லவே! தாங்கள் உத்தர வளித்தால், நான் ஒரு முறை சந்தாவத் துர்ஜயஸிம்மனுடன் போர் புரி கிறேன். நான் தோல்வி யடைந்தால், பிறகு, சூரிய மஹலின் பெயரைக்கூட உச்சரிக்கமாட்டேன்; மார் வாருக்கும் திரும்பிச் செல்லேன்; இந்த பீல் வேடர் களுட னிருந்தே என் வாணுளைக் கழிப்பேன்!' என்றுன் தேஜ்ஸிம்மன்.

'மேவார், ஸிஸோதியர்களின் முதல் ஸ்தானம். சந்தாவத், ஸிஸோதியாவின் ஒரு கிளை. இந்த வம்சத் திற்கும் பூர்வ ஸ்தானம் மேவார்தான். நீங்கள் ராடௌர்கள்! சந்தாவத்தார்களின் கோட்டையை விரும்ப உங்களுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது?'

'எந்த அதிகாரத்திஞல் பீல்களை வெளியேற்றி ராடௌர் வம்சத்தார், மார்வாரில் இருக்கிறுர்களோ, ஸிஸோதியர்கள் மேவாரில் இருக்கலானுர்களோ, அதே அதிகாரத்தால் ராடௌர்களும் சூரியமஹலைத் தங்கள் ஆதிக்கத்திற்குக் கொண்டுவந்தார்கள். திலக ஸிம்மரின் முன்னேர்கள் வாள் வன்மையால் மேவாரில்

தங்கள் அதிகாரத்தை நாட்டினார்கள். பிறகு, பரம்பரையாக மேவாரைக் காக்கத் தங்கள் உயிரையும் துச்சமாக மதித்துத் தங்களுடைய அதிகாரத்தைத் திடப்படுத்திக் கொண்டார்கள். இந்தச்சமயம் மேவாரில் ராடௌரைவிடச் சந்தாவத்தார்களின் பலம் அதிக மிருக்கிறதா? மேவாரைக் காக்க ராடௌரைவிடச் சந்தாவத்தார்கள் அதிக வீரம் காட்டி இருக்கிறார்களா? ராடௌர்கள், யுத்தத்தில் உயிரைக் கொடுத்து, தங்கள் இதயத்தின் ரத்தத்தால் மேவாரில் அதிகாரத்தை நிலைநாட்டினார்கள். ராடௌர்கள், தங்கள் அதிகாரத்திற்குக் கொண்டு வந்தவைகளைத் தங்கள் வாள் வன்மையால்தான் கொண்டுவந்தார்கள். போர்க்களத்தில் நின்று யுத்தம் செய்து வீரம் காட்டி, கொண்டுவந்தார்கள். அதைத் தவிர, அதிகாரத்திற்கு வர வேறு உபாயத்தை அவர்கள் அறியார்கள்!' என்றான் தேஜ்.

தேஜ்ஸிம்மனின் குரலால் அந்தக் குகை எதிரொலி கொண்டது. இதைக் கேட்ட அந்தத் தபஸ்வினி தைரியமும் கம்பீரமுமான குரலில், 'மகனே! நீ பீல் ஜாதியாரால் வளர்க்கப்பட்டாலும் க்ஷத்திரிய தர்மத்தை நன்றாய் அறிந்திருக்கிறாய்; வீரர்களுடையவும் நதிகளுடையவும் உற்பத்தி ஸ்தானங்களை யாரும் பார்ப்பதில்லை. இரண்டும் தம் வேகத்தாலேயே உலகில் நிலைக்கின்றன. அவை, தம் கம்பீரத்தாலும், பெரும் பலத்தாலும் உலகில் பிரசித்த மடைகின்றன. பலத்தினால்தான் அதிகாரத்தைக் கைக்கொள்ளுகின்றன; அதேமாதிரிப் பலத்தினால்தான் சந்தாவத் வம்சம் மீண்டும் சூரியமஹலைத் தம் ஆதிக்கத்திற் குட்படுத்திக்

கொண்டது. அதற்காகத் திலகஸிம்மரின் மகன் கோபிக்க வேண்டியதே யில்லை' என்ருள்.

'துர்ஜயஸிம்மன், புஜ பலத்திஞல், சூரியமஹ லைக் கைப்பற்றிக் கொண்டிருந்தால், அவன், சத்துரு வாக இருந்தால்கூட, திலகஸிம்மரின் மகன், அவனை மன்னித்துவிடுவான். ஆனுல், அந்த நராதமன், ராஜ நீதியை அறியவில்லை. என் தந்தை இறந்ததும், என் அநாதைத் தாயாரிடமிருந்து கோட்டையைக் கைப் பற்றிக்கொண்டான். என் தாயின் எதிர் நின்று போர் புரியச் சக்தியற்று, அவன் திருடனைப்போல் கோட்டையுட் புகுந்து, என் தாயைக் கொன்ருன். இந்தப் பயங்கரமான ஸ்திரீ ஹத்திக்கு, அவனுக்குத் தண்டனை கிடைக்க வேண்டியது நியாயமல்லவா? அம்மா! உத்தரவு கொடுங்கள். அந்த நீசனுக்குத் தண்டனை யளிக்க தேஜ்ஸிம்மன் தயாராக இருக் கிருன்!' என்ருன்.

'குழந்தாய், தேஜ்ஸிங்! உன் கோபத்தின் கார ணத்தை நான் அறிவேன். ராடௌளர்களின் வீரத் தையும் நான் அறியாதவ ளல்ல. ஆனுல், நீ சிறுவன். ஆகையால் நான் உன்னைச் சோதனை செய்தேன். திலக ஸிம்மரின் மகன் எப்படி இருக்க வேண்டுமோ, அப் படித்தான் நீ இருக்கிருய் என்பதை இப்பொழுது அறிந்துகொண்டேன். ராடௌளர் வம்சத்தைச் சேர்ந்த யாரும், உன்னை இதற்குத் தகுதி யற்றவன் என்று கூற முடியாது. உன் வார்த்தைகளால், நான் சற்றும் கோப மடையவில்லை. நான் உன் தந்தையை அறிவேன். அவருடைய மகனை அவரைப் போன்ற வீரனுகவும், தர்மம் தெரிந்தவனுகவும் காண நான் மிக்க சந்தோஷம் அடைகிறேன். இப்பொழுது

உனக்கு எது இஷ்டமோ என்னிடம் கேள். திலக ஸிம்மரின் மகனுக்கு அளிக்கக் கூடாத வஸ்து ஒன்றும் இந்தத் தபஸ்வினியிடம் இல்லை!' என்றாள்.

'அன்னையே! தாங்கள் முக்காலங்களையும் அறிவீர்கள்! பிரமனின் இந்தச் சிருஷ்டி நிலையற்றது. பிரமன் யார் தலையில் என்ன எழுதியிருக்கிறான் என்பதை யாரும் அறியார்கள். ஆனால், தாங்கள் தபஸ்வினி! தங்களுடைய தூர திருஷ்டியினால் தங்களுக்கு விதியின் எழுத்துக்கள் மறைந்திருக்க முடியா. ஒரு நாள் ஸங்கிராமஸிம்மர் இதே புலிக் காட்டு மலையில், தமது பாக்கியத்தை அறிய வந்தார். இன்று, திலக ஸிம்மரின் மகன், பதவி இழந்து, பீல் ஜாதியாரால் காப்பாற்றப்பட்டு, தனது பாக்கியத்தை அறிய வந்திருக்கிறான். நான், என் தாய் அடைந்த ஹிம்சைக்கும், வம்சத்தின் அவமானத்திற்கும் எப்பொழுது பழி தீர்த்துக்கொள்வது? அதை அறிந்துகொள்ளத்தான் தங்கள் பாதங்களைத் தேடி வந்தேன். இந்த அநாதையின் மேல் தயைகூர்ந்து இந்த விஷயங்களை விளக்குங்கள்! என்னுடைய கொதிக்கும் இதயத்திற்குச் சற்று ஆறுதல் அளியுங்கள்!' என்றான்.

'மகனே! எதிர்காலத்தை அறிய விரும்பாதே. அந்தத் துராசையை மனத்தினின்றும் அகற்று. மனித வாழ்க்கை நிலையற்றது; துன்பம் நிறைந்தது; கவலை உள்ளது. ஆனாலும், அசட்டை செய்யக்கூடியதல்ல. வாழ்க்கையை ஏன் அசட்டை செய்ய வேண்டும்? மதுரமான இன்பக் கனவுகளை எழுப்பும் ஆசை யென்னும் வர்ணக் கண்ணாடி விளக்கு, மனத்தைக் கொள்ளை கொள்ளும் விதவிதமான

வர்ண ஜாலங்களைக் காட்டுகிறது. எதைச் செய்தால் துன்பம் விலகும்? எதைச் செய்தால் சுகம் கிடைக்கும்? எதிர்காலம் என்ற கானல் நீரைக் காட்டி, அது உள்ளத்தைச் சாந்த மடையச் செய்கிறது. தேஜ்ஸிங்! எதிர்காலத் திரையை விலக்காதே! விலக்கினால், மாயை என்னும் ஆசை விளக்கு அணைந்து விடும். அழகான அந்தக் கானல் நீர் மறைந்துவிடும். வாழ்க்கை, நம்பிக்கையற்று, பற்றுதல் அற்று, இன்ப மற்றுப் போய்விடும். எதிர்காலத்தை யறிந்த பின், யார் இந்த நிலையற்ற உலகில் வசிக்க விரும்புவார்கள்? மகனே! சந்தோஷமாக இரு! எதிர்காலத்தை அறிய விரும்பாதே! வேறு ஏதாவது கேட்கவேண்டுமானால் கேள்! என்றாள்.

'தாயே! இந்த மலையில் ஒரு தபஸ்வினிதான், ஸங்கிராமஸிம்மரின் எதிர்காலத்தைக் கூறினார். தபஸ்வினியின் வாக்கு அப்படியே பலித்தது. கடைசியில், ஸங்கிராமஸிம்மர், ஸிந்து நதியிலிருந்து யமுனா நதி வரை தன் ராஜ்யத்தை ஸ்தாபித்தார். எதிர்காலத்தைப்பற்றிக் கூறும் தங்களுடைய வார்த்தையால் என் பிரயத்தினம் பூர்த்தி யாகாதா?' என்றான் தேஜ்ஸிம்மன்.

'ஸங்கிராமஸிம்மருக்கு அவ்வளவு பெரிய ராஜ்யம் கிடைத்த தென்றால், அது அவர் பாக்கியத்தில் எழுதி யிருந்தது. தபஸ்வினி சொன்னதால் அது நடந்துவிடவில்லை. தபஸ்வினியின் வாயினின்றும் அவருடைய எதிர்காலத்தை அறிந்ததால்தான், சகோதரனால் அடியுண்டு, ஒரு கண்ணையும் இழக்க நேர்ந்தது; வீட்டைவிட்டு வெகு நாள் கானில் அலைய நேர்ந்தது; வெகு நாள் ஆட்டிடையருடன்

கஷ்ட மனுபவித்தார். ஸங்கிராமஸிம்மரை நினைவில் வைத்து உன் எதிர்காலத்தை அறிய ஆசைப் படாதே! வேறு ஏதாவது இருந்தால் சொல்!' என்ருள் கிழவி.

'அநியாயமான யுத்தத்தில் தாய் மடிந்தாள்; கள்ளத்தனமாகக் கோட்டையைப் பிடித்துக்கொண் டார்கள்; பீல் ஜாதியார் என்னைக் காப்பாற்றினுர் கள். இந்த வாழ்க்கையில் நான் அநுபவிக்கவேண் டிய துக்கம் இன்னும் என்ன பாக்கி யிருக்கிறது? நீங்கள் தடை செய்யாதீர்கள்! பழிக்குப் பழி வாங் கியே தீருவேன். உலகில் நான் வேறு எதையும் விரும்ப வில்லை. என் சத்துருவுக்கு, அவன் செய்த கெட்ட செய்கைக்குத் தகுந்த தண்டனை அளிப்பது தான், என் வாழ்க்கையின் லட்சியம். எதிர்காலத்தை அறிவதால் என் அதிகாரத்தில் என்ன கெடுதல் வருமோ? என் சுகத்தில் எது பறிக்கப்படுமோ? நான் அறியேன்! எனினும், அம்மா! தங்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. உத்தரவானல் தங்களி டம் இந்தத் துக்க மயமான என் வாழ்க்கையைச் சொல்லுகிறேன். முதலில் தாங்கள் என் வாழ்க் கைச் சம்பவங்களை எல்லாம் கேளுங்கள். பிறகு, எது உசிதமோ அப்படிக் கட்டளை யிடுங்கள்! நான் இதுவரை அநுபவித்த கஷ்டங்களைவிட, எதிர்காலத் தில் நேரப்போகும் கஷ்டங்கள் பெரிதாக இருக்க முடியா' என்ருன் தேஜ்.

'உன் வாழ்க்கையைப் பற்றிய பயங்கரச் சம்பவங் களைக் கேட்டுத்தான், நான் என்ன செய்யப்போகி றேன்? அந்த வார்த்தைகள் எனக்குக் கனவுபோல் இருக்கப்போகின்றன. இருந்தாலும், நீ சொல்ல

வேண்டியவைகளைச் சொல், கேட்கிறேன்' என்ருள் தபஸ்வினி.

முதல் விஷயத்தை ஞாபகப்படுத்திக் கொண்டதும், அவன் இதயம் துடிக்கலாயிற்று. கோபத்தாலும், துக்கத்தாலும் அவன் மூச்சுத் திணறியது. தேஜ்ஸிம்மன் நடுங்கும் குரலில் தன் சரித்திரத்தைக் கூறலானுன்.

## X

## தபஸ்வினியின் ஆக்கினை

'அம்மா! முதலில் நான் இம்மாதிரி இல்லை. தேஜ்ஸிம்மனின் நிலைமை எப்பொழுதும் இப்படி இருந்ததில்லை. தேஜ்ஸிம்மனின் இதயத்தில் எப்பொழுதும், இம்மாதிரிப் பழிவாங்கவேண்டுமென்கிற எண்ணம் இருந்ததில்லை. அதில், எப்பொழுதும் கீர்த்தி, வெற்றி என்ற எண்ணங்கள்தான் நிறைந்திருந்தன. அவன் பீல்களின் ஆதரவில் இருக்கவில்லை. ரஜபுத்திரர்களுடன் சுகமாகக் காலம் கழித்தான்.

'ராடௌர்—திலகஸிம்மரின் பெயரை அறியாதவர்கள் யார்? சூரியமஹல் யுத்தத்தைப் பற்றி அறியாதவர் யார்? ராடௌர் வம்சத் தலைவரான ஜயமல்லர், திலகஸிம்மருக்கு வலது கையாக இருந்தார். அவரே சூரியமஹலுக்கு வந்து என் தந்தை திலகஸிம்மரின் வீரத்தைப் புகழ்ந்தார்.

'தாயே! அன்று நான் இம்மாதிரி அநாதையாய்—மலைவாசியாய் இருக்கவில்லை. அப்பொழுது நான்

திலகஸிம்மரின் பட்டத்து இளவரசனுக இருந்தேன்.

'சந்தாவத் துர்ஜயஸிம்மனின் மூதாதையர்களுக்கும், திலகஸிம்மரின் மூதாதையர்களுக்கும் வெகு காலமாக விரோதம் இருந்தது. பகைமை, வம்ச பரம்பரையாக வளர்ந்துகொண்டே வந்தது. இடைவிடாமல் போரும் நடந்துகொண்டே வந்தது. சந்திர சூரியர் இருக்கும் வரை அவர்களுடைய விரோதமும் இருந்து வரும். பீல் ஜாதியாரால் காக்கப்பட்ட இந்த அநாதைச் சிறுவனின் உள்ளத்தில் வம்ச பரம்பரையாக வந்துகொண் டிருக்கும் அந்தத் துவேஷக் கனல் எரிந்துகொண்டே யிருக்கிறது. இந்த நெருப்பு துர்ஜயஸிம்மனின் ரத்தத்தால்தான் தணியும்.

'ராடௌர்களின் பிறப்பிடம் மார்வார். திலகஸிம்மரின் முன்னோர்கள் அங்கிருந்து வந்து, தங்கள் வாள் வன்மையால் சந்தாவத்தார்களை ஜயித்து சூர்யமஹலைக் கைப்பற்றிக் கொண்டனர். அது முதல் அவர்களுடைய சந்ததிகள் பரம்பரையாக அங்கே இருந்துவர லானுர்கள். இது தங்களுக்குத் தெரியாத தல்ல. ராடௌர்கள், மீண்டும் வாள் வன்மையால் சந்தாவத்தார்களை அவ்விடத்தி னின்றும் விரட்டி அதைக் கைக்கொள்வார்கள்.

'தந்தை உயிருடன் இருந்த வரை துர்ஜயஸிம்மன் போர் புரிந்துகொண்டே யிருந்தான். சிங்கம் இருக்கு மிடத்தில் நரி பிரவேசிக்க முடியுமா? அந்தப் பேதைப் பயல் சூரியமஹலைப் பல தடவைகள் ஆக்கிரமித்தான். ஆனல், என் தந்தையின் முன் அவனுல் ஒன்றும் செய்ய முடியவில்லை. யுத்தத்தில் ஒவ்வொரு

தடவையும் தோற்ருேடி உயிரைக் காப்பாற்றிக கொண்டான்.

'இன்று எட்டு வருஷங்களாகின்றன. ராடௌர் அதிபதி ஜயமல்லருடன் என் தந்தை சித்தௌரைக் காக்கச் சென்ருர். சித்தௌரை என்னவோ காக்க முடிய வில்லை. ஆனுல், அம்மா! ஜயமல்லர், திலக ஸிம்மர் இவர்களுடைய வீரத்தைக் கண்டு, அக்பர் பாதுஷாவே ஆச்சரிய மடைந்துபோய்விட்டார். ஸாலும்பராதிபதி இறந்ததும், என் தந்தை எப்படிச் சித்தௌர் வாசலைக் காத்தார், எப்படி வீரத்துடன் போரிட்டு அக்பர் பாதுஷாவின்முன் மடிந்தார் என்பவற்றைச் சாரணர்கள் இன்றும் பாடிக்கொண்டிருக் கிருர்கள். சாரணர்கள் வாயிலாக, அந்தக் கீர்த்திக் கதையைக் கேட்டு என் தாயின் உள்ளம் நடுங்கியது. இந்தச் சிறுவனின் இதயமும் திடங்கொண்டு நிற்க முடியவில்லை. என் தாய் துக்கங்கொண்டு, "என் பிராணபதி சுவர்க்க லோகம் சென்றுவிட்டார். இனி இந்த உலகில் நான் தனியாக இருந்து என்ன சுகத்தைக் காணப்போகிறேன்? இந்த அடிமையின் வரவை அவர் எதிர்பார்த்துக்கொண் டிருப்பார்" என்று சொல்லி, வேலைக்காரிகளிடம் சிதை தயாரிக்கச் சொன்னுள்.

'அவள் ஏன் அம்மாதிரிக் கட்டளை யிட்டாள்? தந்தையின் ஜீவிய காலத்தில் அவளுக்கு அபரிமிதமான கௌரவமும் மரியாதையும் இருந்தன.'

தேஜ்ஸிம்மனின் குரல் தழதழத்தது. கண்களில் கண்ணீர் பொங்கியது. மீண்டும் தன்னைத் தைரியப்படுத்திக்கொண்டு சொல்லலானுன்:

'அன்னையே! என்னை மன்னியுங்கள். தேஜ்ஸிம்மன்

வெகு நாட்களாக அழுவதை மறந்துவிட்டான். இன்று அன்பு மிக்க அன்னையின் நினைவு வந்ததும் கண்ணீரைத் தடுக்க முடியவில்லை. தாய் சதியாவ தென்று பிரதிக்ஞை செய்துகொண்டாள். அரண் மனையி லிருந்தவர்கள் எல்லோரும் அவளைத் தடுத் தார்கள். எவ்வளவோ ஆறுதல்களைக் கூறினார்கள். என் தாய் ஒருவர் சொன்னதையும் கேட்கவில்லை. அவள் தன் கணவனின் பாதங்களுக்குச் சேவை செய்ய, சுவர்க்கம் செல்லத் திடசித்தத்துடன் தயா ரானாள். அவள், தன் பிரதிக்ஞையி னின்றும் தளரவே யில்லை.

'பிறகு நான் அவளிடம் சென்று, "அம்மா! நான் இப்பொழுது சிறுவன். என் புஜங்களில் சத்துருவை எதிர்க்கக்கூடிய பலம் இப்பொழுது இல்லை. நீ சதி யாகிவிட்டால் சூரியமஹலை யார் காப்பார்கள்? துர் ஜயஸிம்மனுடன் யார் போரிடுவார்கள்?" என்றேன். என்னுடைய துக்கம் நிறைந்த சொற்களைக் கேட்டு அவள் தன் சங்கற்பத்தை விட்டு, "சரி, உனக்காக இன்னும் சிறிது காலம் உயிர் தரிக்கிறேன்" என்று கூறி, தாதியை அழைத்து, "நான் சதியாக இன்னும் கொஞ்ச காலம் ஆகும். சித்தௌரைக் காக்கப் புத்தனின் தாயும், அவன் மனைவியும் போர் புரிந் தார்கள். சூரியமஹலைக் காக்க ஒரு ரஜபுத்திர ஸ்திரீ எதிர் நின்று போர் புரிவாள்" என்று கூறிவிட்டுத் தந்தையின் ஆயுதசாலைக்குச் சென்றாள். அங்கே அவருடைய கட்டாரி ஒன்று கிடைத்தது. அந்தக் கட்டாரி என் தாயின் கழுத்தை அலங்கரித்தது.

'என் தாயின் உறுதியைக் கேட்டு, கோழை துர் ஜயஸிம்மன் நடுங்கினான். கோட்டையை ஆக்கிர

மிக்க அவனுக்குத் தைரியம் இல்லை. கடைசியில் அவன் காவலர்களுக்குப் பொருள் கொடுத்துத் திருடனைப்போல் இரவில் தெரியாமல் கதவைத் திறந்து உள்ளே நுழைந்தான். ஆயினுங்கூட ராடௌர் வீரர்களுடன் பயங்கரமான யுத்தம் செய்யவேண்டியிருந்தது. ராடௌர் வீரர் மரணத்திற்கு அஞ்சவில்லை என்பதை, அந்தப் பேதைமகன் கண்டுகொண்டான். அவர்கள் சத்துரு சேனையை வெட்டி வீழ்த்தித் தாங்களும் மடிவதையே மேலாகக் கருதினார்கள்.

'என் தாய் அந்தச் சமயம் அகழியின் ஓரமாக உள்ள சாளரத்தில் நின்றுகொண்டிருந்தாள். இடது கையில் என்னை அணைத்துக்கொண்டு, வலது கையில் அந்தக் கட்டாரியை ஏந்தி நின்றாள்.

'திடீரென்று ஆக்கிரமிக்கப்பட்டதால் முன் ஜாக்கிரதை யின்றிப் பல வீரர்கள் கொல்லப்பட்டனர். துர்ஜயஸிம்மனின் சேனை, மெள்ள மெள்ள என் தாய் இருந்த பக்கம் முன்னேறியது. கடைசியில் ஜன்னலை உடைத்துக் கூச்சலிட்டுக் கொண்டே அந்தத் துஷ்டர்கள் உள்ளே நுழைந்தனர். எல்லோருக்கும் முன்னால் ரத்தத்தால் நனைந்த துர்ஜயஸிம்மன் இருந்தான்.

'அந்த நரப் பிசாசைக் கண்டு, தாய் சற்றும் அஞ்சவில்லை. வீரர்களின் பிரசண்ட கோலாகலத்தைக் கேட்டு அவள் இதயம் சற்றுக்கூடப் பயமடையவில்லை. அவள் சுவர்க்கவாசியான தன் கணவனை நினைந்து, அந்தக் கட்டாரியை மேலே தூக்கிக் கோபம் ஜ்வலிக்கும் கண்களுடன் அந்த நராதமனை நோக்கினாள்; கட்டாரியை ஓங்கிக்கொண்டு துர்ஜயஸிம்

மன் பக்கம் பாய்ந்தாள். ரஜபுத்திர குல களங்க மான அந்தப் பேதை அந்த நிமிஷமே இவ்வுலகத்தி னின்றும் மறைந்திருப்பான். ஆனால், அவனுடைய படைவீரன் ஒருவன் தனது அரசனின் உயிரைக் காத்தான். அதே சமயம் பத்து வீரர்கள் சேர்ந்து சகாய மற்ற என் தாயைக் கொன்றார்கள்.'

தேஜ்ஸிம்மன் சிறிது நேரம் சும்மா இருந்தான். கோபத்தினால் அவன் கண்கள் நெருப்புத் தணல் போல் ஜ்வலித்தன. சிறிது நேரத்திற்குள் சற்று சாந்த மடைந்து மீண்டும் கூறலானான் :

'நான் அந்தச் சமயம் பத்து வயதுச் சிறுவன். ஆயினுங்கூடத் தாயின் கையி லிருந்த கட்டாரியைப் பிடுங்கி துர்ஜயஸிம்மனைக் குத்த முயற்சித்தேன். ஆனால், அந்தக் கோழை உயிர் தப்ப அவ்விடம்விட்டு ஓடிவிட்டான். நான் அவனைக் காணவில்லை. சாள ரத்தை உடைத்துக்கொண்டு அகழியில் விழுந்தேன். நேரிடையான யுத்தத்தில் அவனை ஒரு முறை காண் பேனாகில் தாயைக் கொன்றதற்குப் பழிவாங்குவேன்! என் வம்சத்தின் அபகீர்த்தியைப் போக்குவேன்! இதே ஆசையுடன்தான் இந்த எட்டு வருஷங்களாக பீல் ஜாதியாருடன் கானிலும், குகையிலும் இருந்து என் காலத்தைக் கழித்து வருகிறேன்; இந்த ஆசை யினாலேயே இவ்வளவு கஷ்டங்களையும் பொறுத்து உயிர் வாழ்ந்து வருகிறேன் ; பீல்களிடம் சரணடைந் திருக்கிறேன் ; இதயத்தின் துக்கத்தைச் சகித்து ஜீவித்து வருகிறேன். இவைக ளெல்லாம் துர்ஜய ஸிம்மனை ஒரு நாள் சந்திக்கத்தான்.

'துர்ஜயஸிம்மனுடன் ஒரு முறை போர் புரிய எனக்குத் தாங்கள் உத்தர வளியுங்கள்! அவன்

யுத்தத்தில் என் எதிரினின்றும் ஒருமுறை ஓடட்டும்! இதைத்தான் நான் விரும்புகிறேன்; தேஜ்ஸிம்மனின் மனத்திலுள்ள ஆசை இதுதான்.

சிறிது நேரம் வரை இருவரும் எதுவும் பேச வில்லை. குகையில் மௌனம் நிலவியது. பிறகு, தபஸ்வினி மெதுவாக, ஆனால், கம்பீரமான குரலில் பேச லானாள்: 'ஜாதிப் பகை, வம்ச பரம்பரையாக ரஜபுத்திரர்களிடை வளர்ந்துகொண்டேதான் வருகிறது. திலகஸிம்மர்-துர்ஜயஸிம்மன் வம்சத்தாரிடம் உள்ள பகைக் கனல் சுலபமாக அணையாது. அந்தத் துவேஷக் கனல் தேஜ்ஸிம்மன் உள்ளத்தைத் தகித்துக் கொண்டிருந்தால் இதில் ஆச்சரியப்பட ஒன்றும் இல்லை. ஆனால், அன்னியன் மேவாரை ஆக்கிரமித்துக்கொண் டிருக்கும்போது நமது உள்நாட்டுச் சண்டைகளை விட்டுவிட வேண்டும். இதுதான் மேவாரின் பழைய சம்பிரதாயம். குழந்தாய், தேஜ்சிங்! நீயும் இந்த வழக்கத்தை அனுசரிக்க வேண்டும்' என்றாள் தபஸ்வினி.

'அன்னியரான எதிரிகளிடம் யுத்தம் செய்வது ஒரு புறம் இருக்கட்டும். துர்ஜயஸிம்மன், சூரிய மஹலைக் கள்ளத்தனமாய்க் கைப்பற்றியது மன்னிக்கத் தக்கதா?' என்றான் தேஜ்.

'அக்பர். சித்தௌரை நாசம் செய்தார். உதய ஸிம்மருடன் அந்தக் கலகம் அடங்கிவிட்டது. யுத்தமும் நின்றுவிட்டது. ராணா, உதயப்பூரில் தமது ராஜதானியை ஸ்தாபித்து எந்த உபத்திரவமுமின்றி இருக்கலானார். அந்தச் சமயம்தான் துர்ஜய ஸிம்மன் சூரியமஹல் கோட்டையைக் கைப்பற்றிக் கொண்டான்!' என்றாள் தபஸ்வினி.

'இப்பொழுதும் அன்னியர் படையெடுப்பு நின்ற பாடில்லை. மானஸிம்மன் டில்லியிலிருந்து மேவாரை நோக்கிப் புறப்பட் டிருக்கிறு னென்று தெரிகிறது. மகாராணுவும் சும்மா உட்கார்ந் திருக்கவில்லை. அவரும் யுத்த ஏற்பாடுகளைச் செய்துவருகிறுர். ஆனுல், எதிரிகள் இப்பொழுது எங்கே இருக்கிறுர் கள் என்பது தெரியவில்லை' என்றுன் தேஜ்ஸிம்மன்.

'மழைக் காலத்தில் சிறுவர்கள்கூட இப்படித் தான், "மேகம் எங்கே இருக்கிறது?" என்று கேட் கின்றனர். ஆடி மாதத்து மேகம் எப்படி அதி வேக மாய்ப் பரவுகிறதோ, அதைவிட அதி வேகமாய்ச் சத்துருவின் சேனை வந்துகொண் டிருக்கிறது. எந்த வாளைக்கொண்டு நீ துர்ஜயஸிம்மனைக் கொல்ல விரும்புகிறுயோ, அதை எடுத்துக்கொண்டு ஹல்தி காடிக்குச் சென்று ராணுவுடன் சேர்! இந்தக் கிழவி யின் பேச்சைக் கேள்! ஹல்திகாடியில் இப்பொழுது அநேக வீரர்களுக்குத் தேவை இருக்கிறது. அன்னி யருடன் போர் நடக்கும்போது, நமது வீட்டுக்குள் சண்டை போட்டுக்கொண் டிருப்பது, ராஜ நீதிக்கு ஏற்றதல்ல. அன்னியருடன் போர் மூண்டுவிட்டால் நாட்டி லுள்ளவர் ஒன்றுசேர்ந்து கொள்வதுதான் ராஜஸ்தானத்தின் பழைய வழக்கம்.'

'தாயே! மேவாரைக் காக்க யுத்தம் ஏற்படுமா னுல், ராடௌர்கள் அதில் பங்கெடுத்துக்கொள்ளா மல் இருக்க முடியாது. ஆனுல், ராஜ தர்மத்தை மறந் திருக்கும் அதமன் துர்ஜயஸிம்மனை நான் எப்படிக் காண்பேன்?'

'அன்னியருடன் போராடும்போது வீட்டிற்குள் சண்டை போடுவது சரியல்ல!'

சிறிது நேரம் வரை இருவரும் பேசாமல் இருந் தனர். தபஸ்வினி மேலே நோக்கித் தியானம் செய் தாள். பிறகு, மிக்க கம்பீரத்துடன், 'குழந்தாய்! இன்றுதானே நீ துர்ஜயஸிம்மனின் உயிரைக் காப் பாற்றினாய்?' என்றாள்.

தேஜ்ஸிம்மன் வியப்படைந்து, 'தாயே! தாங்கள் யாவற்றையும் அறிவீர்கள். அந்தத் துஷ்டனை என் கையாலேயே கொல்லவேண்டு மென்று, அவனை அந்தக் காட்டுப் பன்றியிட மிருந்து காப்பாற்றி னேன்' என்றான்.

'துர்ஜயஸிம்மனை உன் குகைக்கு அழைத்துச் சென்று இருக்கை யளித்தபோதும் அவனைக் கொல்ல வில்லையே?'

'களைப்படைந்து நமது பாதுகாப்பில் வந்தவ னிடம் போர் புரிவது ராஜ நீதிக்குப் புறம்பானது. தந்தையின் கோட்டையை ஆக்கிரமித்து, அங்கே எதிர் நின்று போர்புரிய வேண்டு மென்பதுதான் என் விருப்பம். இதுதான் என் முடிவு. தாங்கள் சூரியமஹலை ஆக்கிரமிக்க ஆக்ஞை யளியுங்கள்! தங்கள் ஆசிர்வாதம் இருந்தால் நான் அந்தத் திருடன் கையினின்றும் தந்தையின் கோட்டையைப் பிடுங்கிக் கொள்வேன்; அந்தத் திருடனுக்கும், அவன் செய்த அநீதிக்குத் தக்க தண்டனை யளிப்பேன்' என்றான் தேஜ்.

'காட்டுப்பன்றி யிடமிருந்து சத்துருவைக் காப் பாற்றி, ரஜபுத்திர தர்மத்தைக் காட்டினாய். களைப்படைந்தவனுக்கு ஆதரவு அளித்து, அவனுடன் போர் புரியாமல் உன்னுடைய பெருந்தன்மையை வெளிப்படுத்தினாய். குழந்தாய், தேஜ் ஸிங்! நீ என்

வார்த்தையைக் கேள். அந்நியருடன் யுத்தம் நடக்கும்போது உள்நாட்டு யுத்தத்தை மறந்து, ரஜபுத்திர தர்மத்தைக் கடைப்பிடி. திலகஸிம்மரின் வீரம் உன்னுடைய ஒவ்வொரு நரம்பிலும் ஓடுகிறது. வெற்றிக் குறிகள் உனது நெற்றியில் சோபிக்கின்றன. ஆகையால், திலகஸிம்மரைப்போல் ரஜபுத்திர தர்மத்தைக் கடைப்பிடி. பத்து வருஷங்களுக்குள் அந்நியர் யுத்தம் ஒழிந்துபோகும். அப்பொழுது சூரியமஹல், ராடௌர் சூரியர்களால் 'பிரகாசமடையும்' என்றாள்.

திடீரென்று குகையிலிருந்த விளக்கு அணைந்தது. அந்தகாரமான அந்தக் குகையில் தபஸ்வினியின் ஆக்ஞை எதிரொலி செய்தது. இருண்ட அந்தக் குகையினின்றும் வெளிப்பட்ட தேஜ்ஸிம்மன், மறுநாள், ராணுவிடம் வந்துசேர்ந்தான். ஹல்திகாடி யுத்தம் நடந்த தினத்தன்று ராடௌர் வீரரின் வாட்கள் இந்திரஜாலங்கள் புரிந்தன.

## XI

## பில் பிரதேசம்

ஹல்திகாடி யுத்தம் முடிந்த பிறகு, ஒருநாள் பிற்பகல் தேஜ்ஸிம்மன் தனியாக, பீல்கள் வசிக்கும் மலைப் பிரதேசங்களிடையே ஏதோ சிந்தனை செய்தபடி சென்றுகொண்டிருந்தான். அவன் அவ்வாறு சிந்தனையில் ஆழ்ந்திராவிட்டால் சுற்றிலுமுள்ள இயற்கையின் அழகைக் கண்டு வியந்திருப்பான்.

அவன் நடந்து சென்ற வழியின் இருபுறங்களிலும் செங்குத்தான பாறைகள், அந்த வனத்தைக் காக்கும் கோட்டை அரண்கள்போல் நின்றன. மலைகளின் மேலுள்ள மரங்களும் செடிகளும், மலைக் காற்றை யுண்டு மூச்சு விடுவதுபோல் 'உச்'சென்று சீறிக் கொண்டிருந்தன. பிற்பகலாகிவிட்ட படியால் சூரி யன் மலைச் சிகரங்களின் பின் மறைந்து, கீழ்ப்புறம் நிழலாகவே இருந்தது. சிற்சில இடங்களில் சூரிய கிரணம் விழுந்தாலும் நேரம் ஆக-ஆக அதுவும் மறைந்துவிட்டது. பாதை ஓரமாய், அடர்ந்த மர முள்ள இடங்கள் ஒரே அந்தகாரமாக இருந்தன. ஜனசந்தடி யற்ற அந்த மார்க்கத்தில் மலை யருவி ஒன்று 'கலகல'வென்று ஒலித்துக்கொண் டிருந்தது. அதில் விழும் சூரிய ஒளியினால், அது ஜாஜ்வல்யமாய்ப் பிரகாசித்தது. பீல் பிரதேசத்தின் இந்த இயற்கை அழகைப்போல் உலகில் சில இடங்களில்தான் இருக்க முடியும். பிரான்ஸ் தேசத்து யாத்ரீகர் ஒருவர் இதைப்பற்றி எழுதி இருக்கிறார்: 'ஐரோப்பிய தேசங்களிலுள்ள அநேக அழகிய இடங்களைக் காட்டிலும் இந்த இந்திய பீல் பிரதேசம் அழகானது, ஆச்சரியகரமானது.'

மனத்தைக் கொள்ளைகொள்ளும் அந்த இயற்கை யின் நடுவே தேஜ்ஸிம்மன் தனியாகச் சென்றுகொண் டிருந்தான். மலைச் சிகரங்களில் ஆங்காங்கு பீல் களின் குடிசைகள் காணப்பட்டன. கீழிருந்து பார்க் கும்போது! அவை மனிதர் வசிக்கும் வீடுகளாகக் காணப்படவில்லை. குலிங்கபக்ஷிகள் வசிக்கும் கூடுகள் போல் காணப்பட்டன. பீல்களின் இருப்பிடத்திற் கருகில், நாற்புறங்களிலும், மலை யடிவாரத்திலும்

கொஞ்சம் பயிர் செய்யும் நிலங்கள் இருந்தன. அவைகளில் விளையும் தானியங்களைக் கொண்டுதான் பீல்கள் காலம் கழித்துவந்தார்கள். அவர்களுக்கு மற்றொரு தொழிலும் உண்டு. அதாவது வழிப்பறிக் கொள்ளை நடத்துவது அவர்கள் வழக்கம். மலைச் சிகரங்களில், வில்லும் அம்பும் ஏந்தி, பயங்கரமான பீல் வீரர்கள் நின்றிருந்தனர். அவர்கள்தான் அந்தப் பிரதேசத்தின் காவலர்கள். அந்த மலைப் பிரதேசத்தைத் தாண்டி, ஒரு ரமணீயமான ஏரியின் கரைக்கு வந்து சேர்ந்தான் தேஜ்ஸிம்மன். முன் கூறிய மலை யருவி அந்த ஏரியில்தான் வந்து கலந்தது. ஏரியின் நாற்புறங்களையும் மலைத் தொடர்கள் சூழ்ந்திருந்தன. ஏரிக் கரைக்குச் சென்று ஒருமுறை தலைநிமிர்ந்து பார்த்தான். அவ்விடத்திய மனோகரமான இயற்கை யழகைக் கண்டு சற்று நேரம் தன் கவலையை அறவே மறந்தான்.

அஸ்தமிக்கும் சூரியன், தன் செங்கதிர்களை வீசி அந்த ஏரியை ஜ்வலிக்கச் செய்துகொண் டிருந்தான். ஒரே நிசப்தம். எங்கும் சாந்தி நிலவியது. இயற்கை, சிருஷ்டி கர்த்தாவை ஆராதனை செய்வதற்காக, மலைகளால் சூழப்பட்ட அந்த ஏரியை உண்டாக்கி இருப்பதுபோல் தோன்றியது. தேஜ்ஸிம்மன் சிறிது நேரம் அந்த ஏரியின் அழகைப் பார்த்துக்கொண் டிருந்துவிட்டுப் பிறகு அதில் இறங்கிக் கை கால் கழுவிக்கொண்டு, தண்ணீர் அருந்தி, ஒரு கல் பாறைமேல் வந்தமர்ந்தான்.

பாரத நாட்டில் ரஜபுத்திரர்கள் வந்து வசித்த இடம், அவர்கள், தங்களுடைய வாள் வன்மையால் தங்கள் அரசை ஸ்தாபித்த இடமாகும். அவர்கள் வரு

முன், அந்த இடம், பீல் ஜாதியாருக்குச் சொந்த மான இடமாக இருந்தது. ரஜபுத்திரர்கள் பீல் களிட மிருந்து விளை நிலங்களைக் கவர்ந்துகொண்ட பிறகு, சுதந்திரப் பிரியர்களான பீல்கள், விந்திய மலை, ஆரவலி மலை முதலிய மலைகளின் பிரதே சங்களுக்குப் போய்த் தங்கள் சுதந்திரத்தைக் காப்பாற்றிக் கொண்டார்கள். கிறிஸ்து பிறந்த சில வருஷங்களுக்குப் பிறகு, இது நடந்திருக்கலாமென்று தெரிகிறது. பீல்கள் மலைப் பிரதேசத்திற்கு வந்த பிறகு, ரஜபுத்திரர்களுக்கும் அவர்களுக்கு மிடையே நட்பு வளர்ந்தது. பீல்கள் பெயரளவில் மாத்திரம் ரஜபுத்திரர்களின் ஆதிக்கத்தை ஒப்புக்கொண்டார் கள். ஆனல், உண்மையில் மலைகளில் சுதந்திரர்க ளாகவே வசித்துவந்தார்கள். சமயம் நேர்ந்தபோது, ஹிந்து முஸ்லீம் எல்லோரையுமே கொள்ளையடித்து, அந்தப் பொருளால் தங்கள் வாழ்க்கையை நடத் தினர்கள். அப்படி இருந்தும், மகாராணுவின் மகுடாபிஷேகத்தின்போது, ஒரு பீல் தலைவன், ஏதோ தன்னு லான காணிக்கைகளுடன் ராணுவிடம் வந் தான். யுத்த காலத்திலும், இதர ஆபத்துக் காலங்களிலும் அவன் தன்னு லான உதவியைச் செய்து வந்தான்.

பாரத நாட்டிலுள்ள நாகரிகமற்ற மலை ஜாதி யார் யாவரும் ஹிந்துக்களின் தேவதைகளில் ஏதாவ தொன்றை வழிபடுவதுடன், தாங்கள் ஹிந்துக்கள் என்றே சொல்லிக் கொள்கிருர்கள். பீல்கள், தங் களைக் கிராத ரூபதாரியான சிவபெருமானின் உரிமை மக்கள் என்று சொல்லிக் கொள்ளுகிருர்கள். 'சிவ பெருமான் ஒரு சமயம் காட்டில் சுற்றி அலைந்த

பொழுது, அங்கே ஒரு காட்டு மனிதனின் மகளைக் கண்டு மோகங்கொண்டு அவளை மணந்துகொண்டார். அந்தப் பெண்ணின் கர்ப்பத்தில் கறுத்த நிறத்துடன் பலவானான ஒரு புத்திரன் பிறந்தான். அவன் ஒரு சமயம் மகாதேவரின் வாகனத்தைக் கொன்றுபோட்டான். அதனால், மகாதேவர் அவனுக்குச் சாப மளித்தார். அதுமுதல் அவன் வம்சத்தார் அந்தச் சாபத்தினால் பீல்கள் என்ற பெயருடன் வனம் வனமாக அலையலானார்கள். நாங்கள் அவர்களுடைய சந்ததியார்தான்' என்று பீல்கள் கூறிக் கொள்வார்கள்.

மலைகளில் பீல்களின் கிராமங்கள் எவ்வளவு இருக்கின்றன என்பதை ஏற்கெனவே கூறியாய் விட்டது. நாற்புறங்களும் மரங்களாலும் முட்களாலும் அடர்ந்து கிராமத்திற்குள் ஒவ்வொரு பீல் வீடும் கோட்டைபோல் காணப்பட்டது. எதிரிகள் பீல்களின் இருப்பிடத்தை ஆக்கிரமிக்கும்பொழுது, பீல் ஜாதி ஸ்திரீகள், சிறு குழந்தைகளுடனும், ஆடு மாடு முதலிய தங்கள் வளர்ப்புப் பிராணிகளுடனும் அருகே யுள்ள குகைகளுக்கோ அல்லது அடர்ந்த கானகங்களுக்கோ சென்றுவிடுவார்கள். புருஷர்கள், வில்லும் அம்பும் ஏந்தி, எதிரிகளை எதிர்த்து, எதிரிகளின்மேல் கற்பாறைகளை வீசித் தங்கள் கிராமங்களைக் காப்பாற்றிக் கொள்வார்கள்.

பீல் ஜாதியாரிடையே தனித் தனி வகுப்புகள் உண்டு. ஒவ்வொரு வகுப்புக்கும் ஒவ்வொரு தலைவன் இருப்பான். அவனுடைய அபிப்பிராயத்தின்மேல் தான் அவர்கள் எந்தக் காரியத்தையும் செய்வார்கள். அந்த வகுப்புகளுக்குள் சண்டை சச்சரவுகள்

ஏற்படுவது முண்டு. ஆனால், வெளியேயிருந்து வரும் எதிரிகளை எதிர்க்கும் சமயம், தங்களுக்குள் இருக்கும் வேறுபாடுகளை மறந்து நிமிஷத்திற்குள் யாவரும் ஒன்றுசேர்ந்து, தங்கள் ஜாதியைக் காக்க முன் வந்துவிடுவார்கள். பகலில் ஒரு தளத்திலிருந்து மற்றொரு தளத்திற்குச் செய்தியனுப்ப முடியாதபோது, இவர்கள் இரவில் ஏதாவது காட்டு விலங்குகள் அல்லது பட்சிகள் மாதிரி கத்தி இரவிற்குள் எல்லாத் தளங்களுக்கும் தங்களுக்கு வந்திருக்கும் ஆபத்தை அறிவித்து விடுவார்கள். மேவார் மலைப் பிரதேசத்தில் இப்பொழுதுகூட இருபது லட்சம் பீல்கள் இருக்கின்றனர்.

பீல்களில் ஜாதி பேதம் இல்லை. அவர்கள் ஹிந்துக்களது ஒன்றிரண்டு தேவதைகளையும், இன்னும், இதர சில குறிகளையும் தேவதைகளாக வணங்கி வருகின்றனர். அவர்களுக்கு மதூக விருக்ஷத்தில்தான் அதிகப் பிரியம். அதன் புஷ்பங்களினின்றும் அவர்கள் மது தயாரித்துக் குடிப்பார்கள்.

பீல்கள் கறுப்பாகவும் திடகாத்திரமாகவும் இருப்பார்கள். நல்ல தைரியசாலிகள். வேலையில் அசாதாரண பலம் காட்டுவார்கள். பீல் ஸ்திரீகள் புருஷர்களைவிடச் சற்று சிவப்பாகவும் அழகாகவும் இருப்பார்கள். அவர்கள், துணியினால் மார்பிலிருந்து முழங்கால் வரை அரை உடம்புதான் மூடி இருப்பார்கள். கழுத்தில் சோழி சங்கு இவைகளாலான ஆபரணங்கள், கையில் சங்கு வளையல்கள் முதலியவைகளை அணிந்துகொள்வார்கள். சிற்சில சமயம் காட்டு மலர்களால் தங்களை அலங்கரித்துக்கொள்வதும் உண்டு. இவர்களுடைய விவாகம் மிகச்

சாதாரணமானது. குறிப்பிட்ட ஒரு தினத்தில் கிராமத்திலுள்ள விவாக மாகாத பெண்களும் வாலிபர்களும் ஓரிடத்தில் கூடுவார்கள். எந்த யுவன் எந்த யுவதியை விரும்புகிறானோ அவளை அவன் அழைத்துக்கொண்டு வனத்திற்குள் சென்றுவிடுவான். அந்த நிர்ஜன வனத்தில் அவர்களுக்குச் சில வேலைகள் கொடுக்கப்படும். அங்கே சிலநாட்கள் வரை இருந்துவிட்டுப் பிறகு தங்கள் கிராமத்திற்குத் திரும்பி வந்துவிடுவார்கள்.

நாகரிகமற்ற பீல்களிடம் இரண்டு உயர்ந்த குணங்கள் சர்வ சாதாரணமாக உண்டு. ஒன்று, தங்களுக்கு உபகாரம் செய்தவர்களை அவர்கள் ஒரு பொழுதும் மறப்பதில்லை. இரண்டாவது, ஒரு முறை வாக்குக் கொடுத்ததை உயிருள்ள வரை மறப்பதில்லை.

# XII

## பீல் கன்னிகை

தேஜ்சிங் உட்கார்ந்திருந்த ஏரிக் கரையைச் சுற்றி வளைந்துள்ள மலையின்மேல் பீமசந்திரன் என்ற பெயருள்ள பீல் தலைவனின் கிராமம் இருந்தது. அந்தக் கிராமத்திற் கருகில் ஒரு குகையும் இருந்தது. அந்தக் குகையின் மத்தியில்தான் வாசகர்கள் முன்பு ஒரு முறை துர்ஜயஸிம்மனைச் சந்தித்தார்கள்.

ஏரிக் கரையில் ஓர் உயர்ந்த பாறைமீது அமர்ந்திருந்தான் தேஜ்ஸிங். திடீரென்று ஒரு பீல் பெண் சிரித்துக்கொண்டே அங்கே வந்து அமர்ந்தாள். வினை

யாட்டாக ஏரியிலிருந்து தண்ணீரை அள்ளி தேஜ் ஸிம்மன்மேல் வீசினுள். தேஜ்ஸிம்மன் அந்தப் பெண்ணை நன்ருக அறிவான். ஆகையால், அந்தப் பெண்ணின் கையைப் பிடித்து இழுத்து அவளைத் தன்னருகே உட்கார வைத்துக்கொண்டு ஏதோ சிந்திக்கலானுன்.

பீல் கன்னிகை, பீல்களைப் போலவே கறுப்பாக இருந்தாள். உருண்ட அழகிய கண்கள். அழகான முகம். மலையில் ஏறுவதிலும் இறங்குவதிலும் வெகு சாமர்த்தியம் வாய்ந்தவள். மற்ற பீல்களைப்போல் அவளும் பிறந்தது முதலே சாமர்த்தியசாலியாக விளங்கினுள். கறுத் தடர்ந்த அவளுடைய தலைமயிர் நெற்றியில் தொங்கிக்கொண் டிருந்தது. கண்கள் சுழன்றுகொண் டிருந்தன. குதூகலமாக இருந்தாள். சிறு கற்களைப் பொறுக்கித் தண்ணீரில் போட்டு விளையாடிக்கொண் டிருந்தாள். இவ்வளவு விஷமம் உள்ளவளாக இருந்தபோதிலும், தேஜ்ஸிம்மன் ஏதோ கவலையாக உட்கார்ந்திருப்பதைக் கண்டு அவளும் கொஞ்ச நேரம் மௌனமாக உட்கார்ந்திருந் தாள். அவளுடைய தைரியத்தையும் குறும்பையும் கண்டு எல்லோருமே ஆச்சரிய மடைவார்கள்.

தேஜ்ஸிம்மன் என்ன யோசித்துக்கொண் டிருந் தான்? மழைக் காலம் நெருங்குவதைக் கண்டு எதிரி கள் மேவாரை விட்டுவிட்டுச் சென்றுவிட்டனர். அன்னியருடன் போர் நடக்கும்போது உள்நாட்டுச் சண்டையைக் கிளப்புவது சரியல்ல........ஆனுல், அவன் சூரியமஹலைப்பற்றிக் கவலைப்படவில்லை. பின்னே எதைப்பற்றிக் கவலைப்பட்டுக்கொண் டிருந் தான்?

பீல் பெண் ஜலத்தைத் தன் கைகளால் வாரி இறைத்து விளையாடிக்கொண் டிருந்தாள். தேஜ்ஸிம்மன் பேசாமல் காலைக் கட்டிக்கொண்டு யோசனை செய்த வண்ணம் அவளைப் பார்த்துக்கொண் டிருந்தான். சிறிது நேரம் அந்தப் பெண் அவனுடைய முகத்தைப் பார்த்துக்கொண் டிருந்துவிட்டு ஒரு பாட்டைப் பாட ஆரம்பித்தாள். "இளமைப் பருவத்தின் கனவுகள் அடிக்கடி உள்ளத்தில் எழுகின்றன. சிறு வயதில் பார்த்த முகங்கள் அகக்கண் முன் வந்து நிற்கின்றன. இளமையின் அன்பு, அலர்ந் திருக்கும் நெருப்புப்போலச் சிற்சில சமயம் ஜ்வலிக்கிறது" என்ற தாத்பரியத்துடன் ஒரு பாட்டைப் பாடினாள்.

அவளுடைய பாட்டைக் கேட்டு தேஜ்ஸிம்மன் சட்டென்று திடுக்கிட்டான். அவன், தன் பால்ய கால வாழ்க்கையைப் பற்றிச் சிந்தித்துக்கொண் டிருந்தான். இந்தப் பாட்டைக் கேட்டதும், அவள் முகத்தை நோக்கி, 'இந்தச் சிறு பெண் என் மனத்திலுள்ளதை அறிந்துவிட்டாளா? இந்தப் பாட்டை அவள் அறிந்துதான் பாடினாளா?' என்று யோசிக்கலானான்.

பெண் 'கலகல'வென்று நகைத்தாள். தேஜ்ஸிம்மனின் மனம் மீண்டும் சந்தேகம் கொண்டது. 'நான் என் பால்ய காலத்தைப்பற்றி நினைத்துக்கொண் டிருந்தேன். சரி, சொல்லு பார்ப்போம்! நீ, எப்படி என் மனத்தி லுள்ளதைத் தெரிந்துகொண்டாய்?' என்றான்.

சிறுமி சிரித்துக்கொண்டே, 'நீ சொல்லாமல் எனக் கெப்படித் தெரியும்? நீ என்ன நினைத்துக் கொண்டிருந்தாய் என்பது உனக்குத்தான் தெரியும்.

கனவைப்பற்றி நினைத்துக்கொண் டிருந்தாயா? அல்லது, பூவைப் பற்றியா?' என்றாள்.

தேஜ்ஸிம்மனுக்குக் கவலை அதிகரித்தது. அவன் புருவங்கள் விரிந்தன. அவன் ஆச்சரியம் நிறைந்த குரலில், 'நான் பூவைப்பற்றி நினைத்துக்கொண் டிருந்தேன். அது உனக்கு எப்படித் தெரிந்தது?' என்றான்.

சிறுமி, தேஜ்ஸிம்மன் முகத்தைப் பார்த்துவிட்டு, 'நான் உன் மனத்தி லுள்ளதை எவ்வாறு அறிய முடியும்? சிறு வயதில் ஜனங்கள் பூக்களையும் பழங் களையும் பற்றி நினைக்காமல் வேறெதைப் பற்றி நினைக்கப்போகிறார்கள்?' என்றாள்.

தேஜ்ஸிம்மன், சிறுமியின் ஸரளமான முகத் தைப் பார்த்து, மனத்திற்குள், 'நான் தவறாகச் சந்தே கித்தேன்' என்று எண்ணி, வெளிப்படையாக, 'நான் உண்மையில் பால்ய கால மலர்களைப் பற்றித்தான் கனவு கண்டுகொண் டிருந்தேன். நீ, என் மனத்தி லுள்ளதைப் பாடினாய்!' என்றான்.

'பீல்களின் எண்ணம் சரியாக இருக்கிறது. அவர்கள் விதவிதமான வஸ்துக்களைப் பார்க்கிறார் கள். எத்தனையோ விதமான பேச்சைக் கேட்கிறார் கள். நீ பீலாக இருந்தால்......'

'பீலாக இருந்தால் என்ன ஆகும்?'

தேஜ்ஸிம்மனின் கையில் அந்தச் சிறுமியின் கை இருந்தது. அவள் பேசாமல் தன் கையை அவனுக் குக் காட்டினாள்.

'பீலாக இருந்தால் என்ன ஆகும்?' என்றான் மறுபடியும் தேஜ்.

சிறுமி சிரித்துக்கொண்டே, 'நீ குருடனல்லவே?

வேற்றைதயும் பார்க்க வில்லையே? நீ பீலாக இருந் தால், உன் கைகள் இவ்வளவு சிவப்பாக இராமல் என் கைகளைப்போல் கறுப்பாக இருந்திருக்கும்' என்றாள். அவள் பீல் சிறுமி! அவள் இவ்வளவு நேரம் வர்ண பேதங்களைப் பற்றித்தான் எண்ணமிட்டுக் கொண்டிருந்தாள் போலும்!

தேஜ்ஸிங் மீண்டும் அன்புடன், 'சரி, சீக்கிரம் வீட்டுக்குப் போ. வானம் இருட்டிவிட்டது. சீக்கிரம் மழை வந்துவிடும்' என்றான்.

'நான் போகமாட்டேன்.'

'ஏன்?'

'கருமேகத்துடன் மின்னல் விளையாடுவதைப் பார்க்க எனக்கு மிகவும் ஆசையாக இருக்கிறது.'

தேஜ்ஸிங், மீண்டும் சிறுமியின் பக்கம் பார்த் தான். அவள் சுவாரஸ்யமாக மேகத்தைப் பார்த் துக்கொண் டிருந்தாள். அவன் தனக்குள், 'நீ உண் மையில் சிறுமிதானா? அல்லது, சிறுமி வடிவத்தில் வந்த ஸ்திரீயா? நான் இதுவரை உன்னைச் சரியாக அறியவில்லை!' என்று எண்ணி, யோசனையிலாழ்ந் தான்.

மறுபடி தலை நிமிர்ந்து பார்த்தபோது, அந்தப் பெண்ணை அங்கு காணோம். அந்தச் சஞ்சல வஸ்து மலைக் குகையொன்றுக்குள் சென்று மறைந்துவிட் டது. தூரத்திலிருந்து அவளுடைய சிரிப்பின் ஒலி மாத்திரம் கேட்டது. அவள் உண்மையிலேயே விசித் திரமான சிறுமிதான்.

# XIII

## பீல்களின் கிராமம்

தேஜ்ஸிங் அந்தக் கரையி லிருந்து எழுந்து மலையில் ஏறிச் சிறிது நேரத்திற் கெல்லாம் அந்தப் பெண்ணின் தந்தை வீட்டுக்கு வந்து சேர்ந்தான். பீல்களின் தலைவன் பீமசந்திரன் தான், பத்து வயதினனாயிருந்த தேஜ்ஸிம்மனைத் தன் கிராமத்திற் கருகிலுள்ள குகையில் ஒளித்து வைத்துக் காப்பாற்றினான். பீமசந்திரனின் அன்பினாலும், ஆதரவினாலும், ராஜ பக்தியாலும் தேஜ்ஸிங் பதினெட்டு வயதுள்ள வாலிப வீரனாகக் காணப்பட்டான்.

சாயங்கால வேளை. பீல் ஸ்திரீகள், தங்கள் தங்கள் வீட்டு வேலைகளில் முனைந் திருந்தனர். எல்லோரும் நல்ல திடகாத்திரர்களாக இருந்தனர். சரீரத்தின் மேற் பாகத்தைச் சிலர் மூடிக்கொண்டிருந்தனர்; சிலர் திறந்துகொண் டிருந்தனர். சிலர், தங்கள் மாடு கன்றுகளுக்குத் தீனி போட்டுக்கொண்டிருந்தனர். சிலர், தங்கள் குழந்தைகளுக்குத் தொண்டு செய்துகொண் டிருந்தனர். சிலர், சமையல் செய்துகொண் டிருந்தனர். இப்படிப் பற்பலர் பற்பல வேலைகளில் ஈடுபட்டிருந்தனர். வாசலில் குழந்தைகள் விளையாடிக்கொண் டிருந்தன. நாகரிக மாந்தரின் இருப்பிடத்தி லிருந்து வெகு தூரத்தில், மலைகளும் மரங்களும் சூழ்ந்த அந்தப் பீல் பிரதேசம் வெகு அழகாக இருந்தது. நாகரிக மனிதர்கள், அவர்களுடைய பண்படுத்திய நிலங்களைப் பிடுங்கிக்கொண்டார்கள். பீல்கள் அதற்குப் பதில் அவர்களைக் கொள்ளையடித்தார்கள். வனப் பட்சிகளைப்போல்

கிழே வந்து, நகரத்தில் புகுந்து, யாராவது ஒரு பணக் காரன் வீட்டில் அகப்படும் தின்பண்டங்களையோ, ஆகாரங்களையோ திருடிக்கொண்டு போய்த் தம் குழந்தைகளுக்குக் கொடுப்பார்கள்.

பீமசந்திரன் வீட்டில், அன்று, பீல் வீரர்கள் எல்லோரும் வந்து கூடி இருந்தனர். மாலைச் சூரிய னின் செங்கதிரில், அவர்களுடைய கறுத்த உருவம், இன்னும் பயங்கரமாகத் தோற்றமளித்தது.

பீமசந்திரன், இடையில் மாத்திரம் ஒரு சாதா ரணமான துணி உடுத்துக்கொண் டிருந்தான். சரீரம் நல்ல திடகாத்திரமாக இருந்தது. முகம் பார்ப்பதற் குப் பயங்கரமாக இருந்தது. சிறு வயதிலிருந்து, கடும் செயல் புரிந்துவந்ததால் மனத்தில் இன்ப உணர்வே சற்றுக்கூட இல்லாமல் இருந்தான். அவன் இதயம் பாறையைவிடக் கடினமாக இருந்தது. ஆயினும், ஒன்றிரண்டு நற் குணங்களும் அவனிடம் இருந்தன. ஆபத்துக் காலத்தில் அவன் எவ்வளவு தைரியம் காட்டுவானோ, அதேபோல், அதிலிருந்து தப்ப உபாயம் தேடுவதிலும் வெகு சமர்த்தன். நன்மை தீமையை ஆராய்ந்து, நொடிக்குள் தீர் மானிக்கும் ஆற்றல் உடையவன். தன்னுடைய தூரதிருஷ்டியினால், தனக்கு வரும் நன்மை தீமைகளை முன்கூட்டியே நன்றாக அறிந்துவிடுவான். அவனிடம் எஜமான பக்தி யுண்டு. நண்பர்களிடம் கபடமற்றுப் பழகி, உண்மையாக நடந்துகொள்வான். அவன் இதயத்தில் சற்று இனிய பண்பு இருந்ததும், அவ னுடைய அந்தச் சிறிய மகளுக்காகத்தான்.

அன்று அங்கு இரண்டு வெளியூர் ஆட்கள் வந் திருந்தனர். கியான்பந்த்ஜீயும், சந்திரபுரத்துக்

கோகுலதாஸும் பீமசந்திரனையும், தேஜ்ஸிம்மனை யும் காண வந்திருந்தனர். பந்த்ஜீ, ஒரு பிரசித்தமான கிருஹஸ்தர். விவசாயம் செய்து காலம் கழித்து வந்தார். அவர், வீரரில்லாவிட்டாலும், சரீரத்தில் நல்ல பல முடையவர். குடியானவர்கள், போர்க் களத்தில் நின்று யுத்தம் செய்ய அறியார்கள். எனினும், யுத்த காலத்தில், தங்கள் உயிரைத் திரண மாக மதித்துத் தங்கள் சொத்துக்களைக் காப்பாற்று வார்கள். சத்துருக்களைச் சாமானியமாகத் தங்கள் கிராமத்தில் நுழையவிடார்கள்.

கோகுலதாஸ், ஜாதியில் 'வம்சி'. அவருடைய விருத்தாந்தத்தை வாசகர்கள் முன்பே அறிந்திருக் கிறார்கள். வயதான காலத்தில் பல கஷ்டங்களைச் சகிக்கவேண்டி வந்ததால், சரீரம் பலவீனமாக இருந் தது. ஆனால், கூர்மையான பார்வை, உற்சாகமுள்ள இதயம், தைரியம்—இவை அப்படியே இருந்தன. அவருடைய மகனுக்குத் தூக்குத் தண்டனை அளிக் கப்பட்டது. அதற்குப் பழிக்குப் பழிவாங்கவேண்டும் என்ற ஒரே ஆசையுடன் அவர் உயிர் வாழ்ந்து வந்தார்.

எல்லோரும் பீமசந்திரனுடன் பேசிக்கொண் டிருந்தனர். இருட்டிச் சிறிது நேரமானதும் தேஜ் ஸிம்மன் வந்தான். எல்லோரும் அவனை மரியாதை யுடன் அழைத்துத் தங்களோடு உட்காரவைத்துக் கொண்டனர்.

பிறகு, அவர்கள் பற்பல விஷயங்களைப் பற்றிப் பேசலானார்கள். ஹல்திகாடியைப் பற்றிப் பேச்சு நடந்தது. பிறகு, துர்ஜயஸிம்மனையும், சூரிய மஹலையும் பற்றிப் பேச்சு நடந்தது.

எல்லோரும், 'தேஜ்ஸிம்மன் சூரியமஹலை எப்பொழுது ஆக்கிரமிக்கப் போகிருர்?' என்று கேட்டார்கள். பந்த்ஜீ, தம் குடியானவர்களுடனும், பீமசந்திரன், தனது பீல் வீரர்களுடனும், கோகுல்தாஸ், தனது 'வம்சி'களுடனும் உதவி புரிவதாகக் கூறி, எல்லோரும் சேர்ந்து தேஜ்ஸிம்மனை, அவனுடைய தந்தையின் அரியணையில் அமர்த்துவதாகப் பிரதிக்ஞை செய்தனர்.

தேஜ்ஸிம்மன் எல்லோருக்கும் நன்றி தெரிவித்துவிட்டு, பீமசந்திரனை விசேஷமாகப் புகழ்ந்து, 'திலகஸிம்மரின் அதிர்ஷ்ட மற்ற புத்திரனுன நான் பத்தாவது வயதில் பீமசந்திரரின் ஆதரவால் இந்தக் குகையில் ஒளிக்கப்பட்டு, உயிர் தப்பி, இன்று வாலிபனுயுள்ளேன். இவர் காப்பாற்றியிராவிட்டால், நான், சிறு வயதில் துர்ஜயஸிம்மனின் வாளுக்கு இரையாகி இருப்பேன். அவனுடைய கோபத்திற் கஞ்சாமல் இவரைத் தவிர வேறு யார் என்னைக் காப்பாற்ற முடியும்? பீமசந்திரரின் தந்தை, ராணு பிரதாபஸிம்மரின் தந்தை உதயஸிம்மரை ஆபத்தினின்றும் காத்தார். அதை நீங்கள் அறிவீர்கள். இப்பொழுது பீமசந்திரர் அம்மாதிரியான உதவியை எனக்குச் செய்திருக்கிருர். பீல்களிடம் எனக்குப் பூரணமான நம்பிக்கை உண்டு. பல தடவை பல யுத்தங்களில் பீல்கள் ரஜபுத்திரர்களுக்கு உதவி புரிந்திருக்கிருர்கள்' என்ருன்.

'நான் திலகஸிம்மரை நன்ருக அறிவேன். வீரமும், நியாய புத்தியும் உள்ள அவரைப்போன்ற ரஜபுத்திரரை வேறெங்கும் காண முடியாது. நான், என்னுல் முடிந்தவரை தங்களுக்காக முயற்சிகளைச்

செய்வேன். என்னிடம் உள்ள பீல் வீரர்கள் யாவரும் வில்லும் அம்பும் ஏந்தி சூரியமஹலை ஆக்கிர மிக்கத் தங்களுடன் வருவார்கள். நியாயமுள்ள ரஜபுத்திரர்களுக்கு உதவி செய்வது, பீல்களின் முக் கியமான தர்மம். வீட்டுக்கு வந்தவர்களுக்குப் புகலிட மளிப்பது பீல்களின் தர்மம்' என்றான் பீமசந்திரன்.

'நானும் திலகஸிம்மரை நன்ருக அறிவேன்' என்ருர் பந்த்ஜீ.

வயோதிகரான கோகுலதாஸ், 'கிருஹஸ்தரான ஸர்தார் பந்த்ஜீயே, துர்ஜயஸிம்மனின் கொடுமை யால் இவ்வளவு துக்க மடைந்துவிட்டா ரென்ருல் நாமெல்லாம் எம்மாத்திரம்? துர்ஜயஸிம்மனின் கொடுமைக் காளாகாமல், நிம்மதியாக நாட்களைக் கடத்தச் சந்திரபுரத்துப் பிரஜைகளால் முடியவில்லை. வம்சி ஜாதியார் சுதந்திர முடையவர்க ளல்ல. எப் பொழுதும் அடிமைத்தனத்திலேயே இருக்கிருர்கள். அவர்களால் என்ன செய்யமுடியும்? காலஞ்சென்ற திலகஸிம்மரின் குணங்களைப் பாடமுடியும். "அவரு டைய புத்திரர் ஜீவித்திருக்கிருரா இல்லையா?" என்றுதான், இரவு பகல் கேட்டுக்கொண்டிருக்கிருர் கள். தாங்கள் ஜீவித்திருக்கும் விஷயமே முதலில் வம்சி ஜாதியாருக்குத் தெரியாது. வேட்டை யாடிய அன்று, துர்ஜயஸிம்மன், தங்களைச் சந்தித்ததாகப் பேசிக்கொள்கிருர்கள். சூரியமஹலின் ஆதீனத்தி லுள்ள பிரஜைகள் எல்லோரும், நீங்கள் உங்கள் தந்தையின் சிம்மாசனத்தில், அமரவேண்டுமென்று, இரவு பகல் ஈசனை மனமாரத் துதிக்கின்றனர். தாங்கள் ஒருமுறை கட்டளையிட்டால், சந்திரபுரத்தி லுள்ள ஆபாலவிருத்தர், துர்ஜயஸிம்மனுக்கெதிராக

ஆயுத மெடுக்கத் தயார். இந்தக் கிழவன் தங்களிடம் வேறு என்ன சொல்ல முடியும்? எனக்கு இந்த வயோதிகப் பருவத்தில் இழைக்கப்பட்ட கொடுமை களுக்குத் தாங்கள் தான் நிவாரண மளிக்கவேண்டும் என்றார்.

கிழவரின் மகன் கொலை யுண்டதை யாவரும் அறிவர். அவருடைய வார்த்தைகளைக் கேட்டு எல்லோரும் மௌனமானார்கள்.

'நீங்கள் அனைவரும் என் தந்தையின் பழைய ஊழியர்கள். உங்களுடைய துக்கத்திற்குக் கடவுள் சாந்தி யளிப்பார். நான் என் தந்தையின் சிம்மா சனத்தி லமர்ந்தால், சந்திரபுரம் முதலிய கிராமங் கள் சுகமாக இருக்க என்னால் முடிந்தவரை முயற்சி செய்வேன்.'

இந்தவிதமாக அநேக விஷயங்களைப் பற்றிக் கூறிய பிறகு தேஜ்ஸிங், 'இன்னொரு விஷயம் இருக் கிறது. நான் முதல் நாள் வேட்டையன்று புலிக் காட்டு மலைக்குச் சென்றிருந்தேன்' என்றான்.

அந்தப் பயங்கரமான இடத்தின் பெயரைக் கேட்டு, எல்லோரும் திடுக்கிட்டனர். தபஸ்வினி தேஜ்ஸிம்மனிடம் என்ன கூறினாள் என்பதை யறிய எல்லோரும் ஆவலா யிருந்தார்கள்.

"'அன்னியருடன் போரிடும்போது, உள்நாட்டுக் கலகம் இல்லாம லிருப்பதே மேவாருக்குப் புகழ்; நீ இதனைக் கடைப்பிடிக்க வேண்டும்" என்பது தபஸ்வினியின் ஆக்ஞை' என்றான் தேஜ்.

வெகு நேரம் பொறுத்துக் கோகுலதாஸ், 'துர்ஜய ஸிம்மனிடம் பழி வாங்கவேண்டு மென்று இந்தக் கிழவனின் உள்ளம் துடித்துக்கொண் டிருப்பதை

ஈசனே அறிவார். புத்திர சோகத்தைவிடக் கொடிய துக்கம் உலகில் வேறொன்றும் இல்லை. ஆயினும், இந்த விருத்தனுக்குத் தபஸ்வினி உண்மையான கட்டளை யிட்டிருக்கிருள். டில்லி அதிபன், ராணு வுடன் தொடுத்துள்ள போர் முடியும் வரை, உள் நாட்டுச் சண்டையை நிறுத்தி வைப்பதே நன்மை' என்ருன்.

## XIV

## ராடௌர்களின் கோட்டை

இரவு, முதல் ஜாமம் கழித்து, தேஜ்ஸிங் விடை பெற்று, பீமசந்திரன் வீட்டினின்றும் ராடௌர் வம்ச வீரன் தேவிஸிம்மன் இருக்கும் பீமகட்டை நோக்கிச் சென்ருன்.

திலகஸிம்மரின் ஆதிக்கத்தின் கீழிருந்த வீரர் களில், தேவிஸிம்மனைப் போன்ற போர்த் திறமையும், தைரியமும், நம்பிக்கையு முள்ளவர்கள் வேறு யாரு மில்லை. பல வருஷங்களுக்கு முன்பே, திலகஸிம்ம ரின் மூதாதை ஒருவர் சூரியமஹலைக் கைப்பற்றிய போது, தேவிஸிம்மனின் மூதாதை அவருக்கு வலக் கரம்போல் இருந்து உதவி புரிந்தார். திலகஸிம்ம ரின் மூதாதை சந்தோஷ மடைந்து, அருகே இருந்த மலை யொன்றில் பீமகட் என்று ஒரு கோட்டையை அமைத்துக் கொடுத்து, அவரைத் தனது பிரதான சேனுதிபதி யாக்கினுர். அப்பொழுதிலிருந்து பீமகட்டி லுள்ள வீரர் யாவரும் சூரியமஹல் ஆதீனத்திற் குட் பட்டுப் போரில் அவர்களுக்குச் சகாயம் புரிந்து

வந்தார்கள். பல தடவை தங்கள் உயிரைப்பொருட்படுத்தாமல் சண்டையிட்டுத் தங்கள் ராஜ பக்தியைக் காட்டியிருக்கிறார்கள்.

துர்ஜயஸிம்மன் சூரியமஹல் கோட்டையைக் கைப்பற்றிய அன்று இரவு நடந்த யுத்தத்தில், திலகஸிம்மரின் சைனியம் அதிகமாக நாசமாயிற்று. தப்பியவர்கள், கோட்டையை விட்டுக் காட்டில் ஓடி ஒளிந்து, மலைகளில் வசித்து வந்தனர். கடைசியில், அவர்கள் பீமகட்டின் அதிபனான தேவிஸிம்மனின் ஆதரவில் வசிக்கலாயினர். அவர்களில் சிறுவர்கள் கூடப் பலர் இருந்தனர். அந்தச் சிறுவர்களில் சிலர், தேஜ்ஸிம்மன் குதித்துத் தப்பிச் செல்வதைப் பார்த்துக்கொண்டிருந்தனர். ஆகையால், அவர்கள், தேஜ்ஸிம்மன் உயிருடன் இருப்பான் என்றே எண்ணியிருந்தனர். வெகுநாள் வரை தேஜ்ஸிம்மனைத் தேடினார்கள். கடைசியில், திலகஸிம்மரின் பழைய வேலைக்காரர்கள் இருவர், பீல் வேஷத்திலிருந்த தேஜ்ஸிம்மனைக் கண்டு அறிந்துகொண்டு, தங்கள் இளவரசனுக்கு நமஸ்காரம் செய்தனர்.

அதன்பின், சிதறி இருந்த திலகஸிம்மரின் சேனா வீரர்கள், ஒவ்வொருவராகத் தேஜ்ஸிம்மனிடம் வந்துசேர்ந்து, அவனுக்காக உயிர் விடவும் தயாராயினர்.

திலகஸிம்மரின் விருத்த சேனாதிபதியான தேவிஸிம்மன், தேஜ்ஸிம்மனை அன்புடன் தழுவிக்கொண்டு, பீமகட்டில் வந்து இருக்கும்படி வற்புறுத்தினான். ஆனால், 'ஆபத்துக் காலத்தில் பீல்கள் எனக்குப் புகலிடமளித்தனர்; என்னைக் காப்பாற்றினார்கள். ஆகையால், நான் சூரியமஹலைக் கைப்

பற்றும் வரை அவர்களுடனேயே இருப்பேன் என்று சொல்லிவிட்டான் தேஜ்.

அன்று இரவு, அதே ராடௌளர்களின் பீமகட் கோட்டையில், வீரர்கள் எல்லோரும் கூடி இருந்தார்கள். தூரத்தில் தேஜ்ஸிம்மன் வருவதைக் கண்டவுடனேயே, எல்லோரும் சந்தோஷத்தால் ஆரவாரம் செய்தார்கள். அவர்களின் உத்சாகத்தைக் கண்டு தேஜ்ஸிம்மன் ஆனந்தமடைந்தான்.

குளிர்காயப் போட்டிருந்த நெருப்பின் ஜ்வாலையில், வீரர்களின் முகம் நன்ருகத் தெரிந்தது. சிறு வயதிலிருந்தே போர்த் தொழில் புரிந்து, அவர்கள் உடல் உறுதி யடைந் திருந்தது. ஒவ்வொருவரின் உடலிலும் வாளின் காயங்கள் இருந்தன. சிலருடைய தலை மயிர், வெள்ளிக் கம்பிபோல் நரைத்துவிட்டது. ஆயினும், கண்களில் ஒளி குன்றவில்லை. அவர்கள், திலகஸிம்மரின் காலத்தில் பல யுத்தங்கள் புரிந்திருக்கின்றனர். சித்தௌரின் வீழ்ச்சியை அவர்கள் கண்களால் பார்த்திருக்கிருர்கள். இப்பொழுது தேஜ்ஸிம்மனைத் தங்கள் தளத்திற்குத் தலைவனுக்கி, முதலில் சூரியமஹலைக் கைப்பற்றிப் பிறகு சித்தௌரை உத்தாரணம் செய்யத் தயாராக இருந்தனர்.

தன்னைச் சுற்றி நாற்புறங்களும் தன் தந்தையின் சேனு வீரர்கள் அமர்ந்திருப்பதையும், அவர்களுடைய ராஜபக்தி, உற்சாகம் இவற்றையும் கண்டு, தேஜ்ஸிம்மனின் உள்ளம் ஆனந்தத்தால் நிரம்பியது. கண்ணீர் பொங்கும் கண்களுடன் அவர்களை ஒரு முறை நோக்கினுன். அவனுடைய அந்தத் தண்ணளியைப் பார்த்து, ராடௌளர்கள் எல்லோரும் உத்சாகத்தால் ஜயகோஷமிட்டனர்.

'வீரர்களே! உங்கள் எஜமானருக்கு நீங்கள் உண்மையாக நடந்துகொண்டீர்கள். உங்களுடைய இந்த ராஜபக்தியால் ராடௌர் குலம் நிச்சயம் கௌரவம் அடையப்போகிறது' என்றான் தேஜ் ஸிம்மன்.

அதைக் கேட்ட வீரர்கள், 'நாங்கள் காலஞ் சென்ற திலகஸிம்மரின் உப்பைத் தின்றிருக்கிறோம். எங்கள் உடல், பொருள், ஆவி யாவும் தங்களுக்குத் தான். நாங்கள், தங்கள் கட்டளையை நிறைவேற்றத் தயார்' என்றனர்.

வயோதிகனான தேவிஸிம்மன், 'இந்த ஊழியன், ராஜா திலகஸிம்மர் சிம்மாசனத் தமர்ந்ததைக் கண்டிருக்கிறான். இப்பொழுது, இந்த விருத்தன், தான் இறக்குமுன், அவர் மகன் தேஜ்ஸிம்மர் அதே சிம்மாசனத்தி லமர்வதைப் பார்க்கவேண்டுமென்று விரும்புகிறான். இந்தக் கிழவனின் ஆசை இதுதான் என்றான்.

'என் தந்தையின் சம வயதுள்ள ராடௌர் வீரர்களில் தங்களைப்போன்ற பழைமையானவர்கள் யாரும் இல்லை. ஹல்திகாடி யுத்தத்தில் கலந்து கொண்ட ராடௌர் வீரர்களில், தங்களைவிடச் சிறந்த தைரியசாலிகள் யாரும் இல்லை. நான், தங்கள் உள்ளத்தை நன்கு அறிவேன். ஆனால், தங்கள் ஆசை பூர்த்தியாகச் சற்றுத் தாமதமாகும்' என்றான் தேஜ்.

'எனக்குக் காலஞ்சென்ற பிரபு திலகஸிம்மர் எப்படியோ அப்படியே தாங்களும். தங்கள் உத்தரவை அடியேன் சிரமேல் தரிக்கிறேன். தாங்கள் வெற்றியைப்பற்றிச் சந்தேகம் கொள்ளவில்லையே? சந்தாவத் துர்ஜயஸிம்மனிடம் ஆயிரம் வீரர்கள்

இருப்பதாகக் கேள்வி. ஓராயிரம் சந்தாவத்தார்களுக்கு இந்த ஐநூறு ராடௌர் வீரர்கள் போதாதா?'

'ராடௌர்களின் வீரத்தில் எனக்குச் சற்றும் சந்தேகமில்லை. தவிர, தந்தையின் இதர நண்பர்களும் எனக்கு உதவி செய்வதாக வாக்களித்திருக்கின்றனர். பந்த்ஜீயிடம் ஓராயிரம் வீரர்கள் இருக்கிறார்கள். பீமசந்திரனிடம் வில்லேந்திய இருநூறு வீரர்கள் இருக்கின்றனர். சந்திரபுரத்தில் இருநூறு இளைஞர்கள் இருக்கின்றனர். இவர்கள் எல்லோரும் எனக்காக உயிர் விடவும் தயாராக இருக்கின்றனர்.'

'பின், போருக்குத் தாமதம் செய்வானேன்?'

'இப்பொழுது சூரியமஹாலை ஆக்கிரமித்தால் வெற்றி கிடைத்துவிடும். ஆனால், அந்த யுத்தத்தில் நமது சேனை பெருவாரியாக மடிய நேரிடும்.'

'தங்களுக்காக உயிரைத் தியாகம் செய்வதைவிட, ராடௌர்களுக்குக் கௌரவமானது வேறென்ன இருக்கிறது? ராடௌர்கள் மரணத்திற் கஞ்சவில்லை.'

'தாங்கள் சொல்வது முற்றிலும் சரி. தந்தை, சித்தௌரை ரக்ஷிக்கத் தம் உயிரைக் கொடுத்தார். சூரியமஹலுக்காக நீங்கள் உயிரைக் கொடுத்தால், ஹல்திகாடியில் யார் போரிடுவார்கள்? வீரர்களே! தாயின் கொலை!—குலத்தின் அவமானம்!—இவை—தேஜ்ஸிம்மனின் உள்ளத்தில் ஆணிபோல் பதிந்திருக்கின்றன. அவன் நரம்புகளில் ரத்தம் ஓடும் வரை, அவன் அவற்றை மறக்கமாட்டான். ஆனால், அன்னியர்களுடன் போரிடும்போது நம்முள் சண்டை வேண்டாம். ரஜபுத்திர வீரர்களே! நீங்கள் க்ஷத்திரிய

தர்மத்தைக் கடைப்பிடியுங்கள்' என்றான் தேஜ் ஸிம்மன்.

வயதில் முதிர்ந்த ராடௌர் வீரர்கள் எல்லோரும் தலை குனிந்துகொண்டனர். வெகு நேரத்திற்குப் பிறகு, தேவிஸிம்மன் கம்பீரமான குரலில், 'எங்கள் பிரபு தேஜ் இடும் கட்டளையை நாங்கள் வணக்கத்துடன் ஏற்றுக்கொள்கிறோம். அன்னியர்களுடன் போர் நிகழும்பொழுது, ராடௌர்களும் சந்தாவத்களும் சகோதரர்களாகிவிடுகிறார்கள். முஸ்லிம்களைவிட ரஜபுத்திரர்களுக்கு வேறு சத்துரு யார்? ஆனால், அன்னிய யுத்தத்தின் முடிவு வரையில் தேவிஸிம்மன் ஜீவித்திருந்தால், துர்ஜயஸிம்மனின் பெயர் இருக்காது. துர்ஜயஸிங்! இப்பொழுதிலிருந்தே ஜாக்கிரதையாக இரு!' என்றார். ராடௌர் வீரர்கள் எல்லோரும் ஒரே குரலில், 'துர்ஜயஸிங்! இப்பொழுதிலிருந்தே ஜாக்கிரதையாக இரு' என்று கோஷமிட்டனர்.

இம்மாதிரி, பேச்சு வார்த்தை நடந்துகொண்டிருக்கையில், தேவிஸிம்மனின் மகன் சந்தன்ஸிங் மெள்ள தேஜ்ஸிம்மன் முன் வந்து நின்றான். அழகான முகம், ஒளி பொருந்திய கண்கள், திடமான சரீரம், இதழ்களில் புன்னகை. அவன், தேஜ்ஸிம்மன் முன் தலை குனிந்து நின்றான்.

அவனைப் பார்த்ததும் தேஜ்ஸிம்மனுக்குப் பழைய விஷயங்கள் ஞாபகத்திற்கு வந்தன. அவன் கண்கள் கண்ணீரால் நிரம்பின. அவன் மிருதுவான குரலில், 'சந்தன்! நீ என் பால்யத் தோழன். சூரியமஹலில் இருக்கும்போது நீயும் நானும் சேர்ந்து விளையாடினோம். அது உனக்கு ஞாபகம் இருக்கிறதா? ஆறு

வயதுச் சிறுவனுக இருக்கும்போது, நான் செய்வதைப் பார்த்து, நீயும் வாள் வீசினுய். அதைக் கண்டு என் தந்தை, “சந்தனும் தேவிஸிம்மனைப்போல் வீரனுவான்” என்ருர். இது உனக்கு ஞாபகம் இருக்கலாம் என்ருன்.

சந்தன் மரியாதை தெரிவிக்கும் குரலில், ‘இளவரசே! நீங்கள்தான் என் பால்ய காலக் குரு. நீங்கள் எனக்குத் தமயன் போன்றவர். நான் அதை மறக்க முடியுமா? முதன்முதல் தாங்கள்தான் எனக்கு யுத்தப் பயிற்சி யளித்திர்கள். என்னை இந்தச் சமயம் முஸல்மான்களுடன் போரிட உத்தரவிட்டீர் களானுல், நான் பேறுபெற்றவனுவேன் என்ருன்.

‘சந்தன்! நீ சிறுவன். கோட்டையி லிருந்தே யுத்தத்தில் இன்னும் நல்ல தேர்ச்சி பெறு! உசிதமான சமயத்தில் உன் தந்தை உன்னை யுத்தரங்கத்தில் ஏற்றுவார்.’

‘ஏன், பதினுறு வயதுள்ள இந்த ராடௌர் சிறுவன் முஸல்மான்களை எதிர்க்க முடியாதா?’

தேஜ்ஸிம்மன் சிரித்துக்கொண்டே, ‘சிங்கத்தின் வயிற்றில் பிறந்தது சிங்கம்தானே? தேவிஸிம்மனின் மகனுய்ப் பிறந்து, போரில் ஆர்வ மில்லாமல் எப்படி இருக்க முடியும்? சந்தன்ஸிங்! சில நாட்கள் பொறு! சீக்கிரம் பயங்கர யுத்தம் நிகழும். அந்தப் போரில் நமது ஆசை பூர்த்தி யாகும். யுத்தத்தில் உன் தந்தை மகாராணுவுக்கு உதவி புரிவார். நீ இங்கே இராவிட்டால் பீமகட்டை யார் காப்பார்கள்? இந்த வயதிலேயே நீ வீரர் போற்றும் செயலாற்றக் கூடியவன். நான் உன்னிடம் பீமகட்டைக் காக்கும் பொறுப்பைக் கொடுக்கிறேன். உன் கையி

லுள்ள ராடௌர்களின் வாள், ஒரு நாளும் மழுங்கி விடாதென்பது எனது நம்பிக்கை' என்ருன்.

சந்தன்ஸிங், உறையி லிருந்து வாளை உருவிக் கையில் பிடித்து, 'அப்படியே ஆகட்டும்! சந்தன்ஸிங் தங்கள் கட்டளைப்படி இன்று முதல் பீமகட்டைக் காப்பான். கடவுள் அருளால், கடைசி ராடௌர் வீரன் ஜீவித்துள்ளவரை—சந்தன்ஸிங் உயிருள்ள வரை—இந்தக் கோட்டைக்குள் முஸல்மான்கள் நுழையாமல் பார்த்துக்கொள்வான்!' என்ருன்.

சிறுவன் வாயினின்றும் இம்மாதிரிப் பிரதிக்ஞை யைக் கேட்டு, ராடௌர் வீரர்கள் எல்லோரும் அவனைப் போற்றினர். விருத்த தேவிஸிம்மன் ஒன்றும் சொல்லவில்லை. அவன் கண்களில் கண்ணீர் துளிர்த்தது. ராடௌர்கள் அதைக் கவனிக்க வில்லை. யுத்தத்தின் ஜ்வாலை எழும்போது—ரத்தம் பெருக்கெடுத் தோடும்போது—சந்தன்ஸிங், தன் பிரதிக்ஞையை எப்படிக் காப்பாற்றப் போகிருன் என்பதை, தேவிஸிம்மன்கூட அறியவில்லை.

## XV

## சந்தாவத்தார்களின் கோட்டை

*வாசகர்களே! வாருங்கள், சூரியமஹல் கோட்டைக்குச் சென்று துர்ஜயஸிம்மனைச் சந்திக்கலாம்.*

ஹல்திகாடி யுத்தம் முடிந்த பிறகு, துர்ஜயஸிம்மன் சூரியமஹலுக்குத் திரும்பிவந்தான். காலை வேளை. சூரியமஹல் கோட்டையின் மேல், சந்தாவத் கொடி பறந்துகொண் டிருந்தது. பெண்கள் மங்கள கீதம்

பாடி, யுத்தத்தி லிருந்து திரும்பிய சந்தாவத் வீரா களை வரவேற்றார்கள். நாற்புறங்களிலும் வாத்தியங் கள் முழங்கின. சபையில் வந்தமர்ந்தான் துர்ஜய ஸிம்மன். அவனுடைய வீர மித்திரர்கள் இருபுறமும் அமர்ந்தனர். கோட்டையிலுள்ள இதரர்களும் வந்திருந்தனர். எல்லோரும் ஹல்திகாடி யுத்தத்தைப் பற்றி விதம் விதமாகப் பேசிக்கொண் டிருந்தனர்.

அதற்கு முன் சபையில் இருந்த வீரர்களில் பலர் அப்பொழுது இல்லை. அவர்கள் எங்கே? அவர்களை இந்த உலகில் தேடினால், இனிக் கிடைக்கமாட்டார் கள்! அவர்களின் வீரத்தையும், அற்ப ஆயுளையும் பற்றி, எல்லோரும் புகழ்ந்தும் வருந்தியும் பேசினார் கள். அவர்கள் ஆன்மா சாந்தியடைய ஈசனைத் துதித் தார்கள். திரும்பி வந்த வீரர்களும், தங்கள் தேசத்திற் காக அவர்களைப்போல் உயிரைவிட உறுதி கொண் டனர். அன்று சபையி லிருந்த வீரர்களில் பலருக்கு, யுத்தத்தில் ஏற்பட்ட காயம்கூட ஆறவில்லை.

சபாமண்டபத்தின் ஒருபுறம், துர்ஜயஸிம்மனின் மெய்க்காவலர் நின்றார்கள். ஹல்திகாடி யுத்தத்தின் போது துர்ஜயஸிம்மனுடன் நூறு மெய்க்காப்பாளர் சென்றிருந்தார்கள். அவர்களில் ஐம்பது பேர் தான் திரும்பி வந்தனர்.

துர்ஜயஸிம்மன் யுத்தத்தைப்பற்றி ஆலோசனை செய்யலானான். மழைக் காலம் கழிந்ததும் மீண்டும் இளவரசன் ஸலீம், மொகல் சேனையுடன் வருவானா? மானஸிம்மனின் தாகம் ராஜபுதனத்து மக்களின் ரத்தத்தாலும் தணியவில்லையா? மேவாரின் ஸிஸோ திய வம்சம் இன்னும் தன் ரத்தத்தைச் சிந்தத் தயாராக இருக்கிறது. மொகலாய சேனை வந்தால்

மீண்டும் ஸிஸோதிய வீரர்கள் போர் வெறி கொண்டு அவர்களை எதிர்த்துச் சமர் செய்வார்கள்.

ஸிஸோதிய வீரர்களின் உடலில் உயிருள்ள வரை—சந்தாவத் வீரர்களின் நரம்புகளில் ரத்தம் ஓடும் வரை—மேவார், அடிமைத்தனம் என்ற களங்கத்திற்கு உள்ளாகாது.

ஹல்திகாடி யுத்தத்தை நேரில் பார்த்த வயதான சாரணன் ஒருவன் வந்து சேர்ந்தான். துர்ஜய ஸிம்மனின் கட்டளைப்படி ஹல்திகாடி யுத்தத்தை வர்ணிக்க ஆரம்பித்தான். ஹல்திகாடி யுத்தத்தில் காட்டிய பிரதாபஸிம்மனின் வீரத்தையும், சந்தாவத்தார்களின் ஒப்பற்ற போர்த் திறமையையும் டிங்கல பாஷையில் கவிகளாகப் புனைந்து, கம்பீரமாகப் பாடினான். சபை நிசப்தமாகக் கேட்டுக்கொண்டிருந்தது. சாரணனின் வீரப் பாடல்கள் சபையில் எதிரொலி செய்தன. கடைசியில், துர்ஜயஸிம்மனின் வீரத்தையும் சந்தாவத்களையும் பற்றிப் பாடிய போது, சபையில் ஆனந்த கோஷம் எழுந்தது.

விருத்த சாரணன் பாடி முடிந்ததும், மற்றொரு வாலிப சாரணன் எழுந்து, துர்ஜயஸிம்மனை நோக்கி, 'சந்தாவத் வீரரே! இந்த ராஜ சாரணர் பாடியதைப் போல் என்னால் யுத்த கீதங்களைப் பாடமுடியாது. ஆனாலும், தாங்கள் இஷ்டப்பட்டால் அக்பர் பாதுஷாவால் சித்தௌர் எப்படி அபகரிக்கப்பட்டதென்பதைப் பற்றிக் கொஞ்சம் பாடுகிறேன். மழைத் தண்ணீரினால், வானளாவும் மரங்கள் பசுமை கொள்ளுகின்றன. ஆனால், அதே தண்ணீரினால் புல் பூண்டுகளும் தழைத்துப் பசுமை கொள்வதில்லையா? தங்களைப் போன்ற பெரியோர்களின் ஆதரவு இருந்

தால் இந்தச் சிறுவனும் சில கவிதைகளை இயற்றக் கூடும். தாங்கள் உத்தர வளித்தால், இந்தக் கவி யின் மனோரதம் பூர்த்தி யாகும்' என்றான்.

'உன் அடக்கத்தைக் கண்டு சந்தோஷ மடைந் தோம். நீ எங்களுக்கு அறிமுக மில்லாதவ னானாலும், உன் குணத்தினால் அறிமுக மாகிவிட்டாய். வீரரும் கவிகளும் தங்கள் குணத்தினால்தான் பிரசித்த மடை கிறார்கள். சரி, கவிகளைப் பாடு என்றான் துர்ஜய ஸிம்மன்.

வாலிபக் கவி. கவிதையைப் பாடலானான். வீரர்கள் ஆவலுடன் கேட்கலாயினர். கவிதையின் பொருள் இதுதான் :

'பலம் பொருந்திய அந்தக் கோட்டை யாரு டையது? யார் வம்ச பரம்பரையாக அதைக் காத் தார்கள்? யார் அதைக் கொள்ளையடித்து எடுத் துக்கொண்டார்கள்? கோட்டைக்குள் திருடன் எவ்வளவு நாட்களுக்கு இருக்க முடியும்? அவர் கள் மான மிழந்து வெளி ஏறுவார்கள். அவர்களது இதயத்தின் ரத்தத்தால் ரஜபுத்திரர்களின் வாட் கள் சிவப்பாகும்.

'தகர்க்க முடியாத அந்தக் கோட்டை யாரு டையது? எந்தப் பெண்மணி கோட்டைய்யக் காப் பாற்றப் போர் புரிந்தாள்? ஸ்திரீஹத்தி செய்து கோட்டையைக் கைப்பற்றிக் கொண்டவன் யார்? ஸ்திரீஹத்தி செய்தவன் அவமான மடைவான்- ஸ்திரீஹத்தி செய்தவனின் இதயத்தில் இன்று இல்லாவிட்டாலும் ஒரு நாள் ரஜபுத்திரரின் வாட்கள் புகும்.

'திடமான அந்தக் கோட்டை யாருடையது? எந்தப் பாலகனுடைய சொத்துக்கள் அபகரிக்கப் பட்டன? எந்த வீரப் பாலகன் மலைக் குகையில்

வசித்தான்? அந்தப் பாலகன் இப்பொழுது பால கன் அல்ல. அவன் இப்பொழுது வாளேந்திவிட் டான். ஹல்திகாடி யுத்தத்தில் தன் வீரத்தைக் காட்டினன். கோட்டையை அபகரித்தவனுடைய தலை, அவன் கை வாளால் உருளும்!

'உன்னதமான அந்தக் கோட்டை, இன்று மலையில் வசிக்கும் அந்த வீரனுடையது. அவன் மீண்டும் கோட்டையை ஆக்கிரமிப்பான். சத்ருக் களை அடித்து விரட்டி, கோட்டையில் தனது ஆதிக் கத்தை நிலைநாட்டுவான்!'

கவிதை முடிந்தது. வாலிபனின் சிவந்த முகத் தைக் கண்டு எல்லோரும் ஆச்சரிய மடைந்தனர். எல்லோரும் உரத்த குரலில், 'அப்படியே நடக்கும்! முஸல்மான்களின் ரத்தத்தால், தங்கள் வாட்களின் தாகத்தைத் தணித்து ரஜபுத்திரர்கள் மீண்டும் சித்தெளரைக் கைப்பற்றுவார்கள்' என்று கோஷ மிட்டனர்.

ஆனல், துர்ஜயஸிம்மனின் வாயினின்றும் ஒரு வார்த்தைகூட வெளிவர வில்லை. அவன், கவிதை யைப் பற்றி ஒரு வார்த்தைகூடப் புகழாமல், தலை குனிந்து, பூமியை நோக்கிக்கொண் டிருந்தான். சிறிது நேரம் பொறுத்துத் தலை நிமிர்ந்து சாரண யுவன் இருந்த இடத்தை நோக்கினன். ஆனல், சபையில் அவனைக் காண வில்லை.

## XVI

## கவிதை பாடியவன் யார்?

இரவு முதல் ஜாமம் கழிந்துவிட்டது. துர்ஜயஸிம்மன் உப்பரிகையில் ஒரு பெண்ணின் மடியில் தலை வைத்து ஆனந்தமாகப் படுத்துக்கொண் டிருந்தான். மற்றொரு பெண் கால்களை வருடிக்கொண் டிருந்தாள். இருவரும் யௌவன மங்கையர்; கட்டழகிகள். ஆனால், துர்ஜயஸிம்மனுக்கு இன்று அவர்களுடைய அழகிலோ, சேவையிலோ சற்றும் மனம் செல்லவில்லை.

துர்ஜயஸிம்மன் வெகு நேரம் வரை யோசித்துக் கொண்டிருந்தான். பிறகு, மந்திரியை அழைத்துவர உத்தரவிட்டு, எழுந்து உலாவலானான். நங்கையர் இருவரும் அவ்விடம்விட் டகன்றனர். சிறிது நேரத்திற்குள் மந்திரி வந்துசேர்ந்தான். துர்ஜயஸிம்மன் அவனிடம், 'நாம் யுத்தத்திற்குப் புறப்படும் சமயம் இட்ட கட்டளை நிறைவேற்றப்பட்டு விட்டதா?' என்று கேட்டான்.

'நான் அப்பொழுதே பல ஒற்றர்களை நாற்புறங்களுக்கும் அனுப்பினேன். அவர்களில் சிலர் திரும்பி வந்தனர். மீண்டும் அவர்களை அனுப்பி இருக்கிறேன். ஆனால், இது வரை திலகஸிம்மரின் மகளைப்பற்றிய தகவல் ஒன்றும் கிடைக்கவில்லை' என்றான்

'அந்த ஒற்றர்களிடம் முக்கியமாகக் காடுகளிலும், மலைகளிலும், பீல் கிராமங்களிலும் தேடச் சொல்லவில்லையா?'

'திலகஸிம்மரின் மகனை, அவர்கள் தேடாத இடம் பாக்கி இல்லை. ஆனால், தகவல் கிடைக்கவில்லை.'

துர்ஜயஸிம்மன் தலை குனிந்து யோசனையிலாழ்ந்தான்.

'அரசே! நீங்கள் ஏன் கவலை கொள்ள வேண்டும்? தேஜ்ஸிம்மன் உயிருடன் இருப்பதாகவே வைத்துக் கொள்வோம். அவன், தங்களை என்ன செய்ய முடியும்?'

'தேஜ்ஸிம்மன் உயிருடன்தான் இருக்கிறான். இதில் சந்தேகம் வேறு இருக்கிறதா?'

'"இரவு நேரத்தில், ஒரே ஒரு தடவைதான் அவன் முகத்தைப் பார்த்திருக்கிறேன். பிறகு பார்க்கவில்லை" என்று தாங்கள் சொன்னீர்கள். அவன் உயிரோடிருந்தால் நமது ஒற்றர் அவனிருக்குமிடத்தை நிச்சயம் அறிந்து வந்துவிடுவார்கள். அவன் ஜீவித்திருந்தால் இவ்வளவு நாட்கள் சும்மா உட்கார்ந்திருப்பானா? அரசே! தாங்கள் வீணாகக் கவலை கொள்ள வேண்டாம். தேஜ்ஸிம்மன் அப்பொழுதே இந்த அகழியில் விழுந்து இறந்துபோயிருப்பான்' என்றான் மந்திரி.

'நான் அவனை ஓர் இரவு மாத்திரம் பார்த்திருந்தால், அவன் மரணத்தைப் பற்றிச் சந்தேகப்பட இடமிருக்காது. ஆனால், நான் அவனை இரண்டு மூன்று முறைகள் பார்த்துவிட்டேன்.'

'எப்பொழுது?'

‘ கிருஷிகர்களுக்கும், பீல்களுக்கும் போர்புரியத் தெரியுமா ? ஹல்திகாடி யுத்தத்தில் பீல்களின் தளம் ஒன்று, குடியானவ வேஷதாரியான—வாளேந்திய—ஒரு யுவன் தலைமையில், மானஸிம்மன் சேனையைத் தாக்கியது !’

‘ அது ஆச்சரியமான விஷயம்தான் !’

‘ ஆச்சரியப்படக் கூடிய தொன்று மில்லை. அவர்கள் பீல்கள் அல்ல. பீல்கள் வேஷம் தரித்து வந்த ராடௌளர்கள். மாறு வேஷம் புனைந்திருந்த தலைவனை நான் அறிந்துகொண்டு விட்டேன். அவன், அதே யுவன்தான். சித்தௌர் நாசமானபோது ஜயமல்லரின் பக்கம் நின்ற திலகஸிம்மரின் வீரத்தையும், அவர் அசுர பலம் கொண்டு வாசலைக் காத்ததையும் நான் பார்த்தேன். அவரைப்போலவே அவர் மகனும் போர் வல்லமை மிக்கவன். யுத்தத்தில் அவன், தன் தந்தைக்குச் சற்றும் சளைத்தவ னல்ல’ என்றான் துர்ஜயஸிம்மன்.

மந்திரியின் முகம் சுண்டியது. துர்ஜயஸிம்மன் மீண்டும் கூறலானான்: ‘ஹல்திகாடி யுத்தத்தில் அந்த யுவனின் வீரத்தைக் கண்டதும், என் கையிலிருந்த ஈட்டி நழுவியது. ஒரே வீச்சில் என் ஜன்ம சத்துருவை இவ்வுலகத்தி னின்றும் அனுப்பிவிட வேண்டும் என்ற எண்ணம் உண்டாயிற்று. ஆனால், வேட்டையாடின அந்தத் தினத்தின் ஞாபகம் வந்ததும், கையில் இருந்த வேல் கையிலேயே நின்று விட்டது.’

‘வேட்டை யன்று அவன் தங்கள் உயிரைக் காப்பாற்றினான். ஆகையால், அவனைக் கொல்லக் கூடா தல்லவா ?’

'அதல்ல! அன்னியருடன் போர் மூண்டிருக்கிறது. இதை அறிந்துதான் தேஜ்ஸிம்மன் வேட்டையன்று நம்மைக் காப்பாற்றினுன். ஆகையால், சத்துரு நமது நாட்டில் இருக்கும்போது, துர்ஜய ஸிம்மன் உள்நாட்டுச் சண்டையைக் கிளப்பித் தன்னைக் களங்கப்படுத்திக் கொள்ளமாட்டான்!'

'அப்படியானுல், அவனைத் தேடியிருக்க வேண்டிய தில்லையே?'

'அன்னியரின் யுத்தம் முடிந்ததும், துர்ஜய ஸிம்மன் தன் இதய பூமியின் களறுகளைப் போக்குவான். தன் பாதையி லுள்ள முட்களைக் களைந்தெறிவான். ஆகையால்தான் முதலிலேயே அவன் இருக்கு மிடத்தைத் தேடுகிருன்.'

'நான் அவனைத் தேடுவதை நிறுத்த வில்லை. இரவு பகல் அதே வேலையாகத் தானிருக்கிறேன். ஆயினும், தகவல் கிடைக்க வில்லை. மகாராஜா மூன்றும் முறையாக அவனை எங்கே கண்டார்?' என்றுன் மந்திரி.

துர்ஜயஸிம்மன் வெகு நேரம் வரை அந்தக் கேள்விக்குப் பதிலளிக்க வில்லை. மெள்ள மெள்ள அவன் முகபாவம் மாறியது; புருவங்கள் விரிந்தன. கோபத்தினுல் குரல் நடுக்கமுற, 'இன்று புதிய சாரண யுவன் ஒருவன் வந்து கவி பாடினுனே, அந்தக் கவியின் அர்த்த மென்ன?' என்று கேட்டான்.

'சாரணன், சித்தெளரின் புனருத்தாரணத்தைப் பற்றிப் பாடினுன்!'

துர்ஜயஸிம்மன் கோபத்துடன், 'சரிதான், நீ மந்திரி வேலை பார்ப்பது இப்படித்தான் இருக்கும். உம்! அப்பொழுதிலிருந்தே எனக்குச் சந்தேகம்!

இனிச் சந்தேகத்திற்கு இடமில்லை. கண்களுக்குப் பிரமை ஏற்பட முடியும்? ஆனால், பழி வாங்கும் இந்த இதயத்திற்கு ஏற்பட முடியாது. அந்தப் புதிய சாரணனைக் கண்டது முதல், உள்ளத்தின் கனல் எரிய ஆரம்பித்துவிட்டது. மந்திரி கேலிகள் நிறைந்த அந்தக் கவிதை, சித்தௌர் நாசமானதைப் பற்றியதல்ல; துர்ஜயஸிம்மனால் சூரியமஹல் ஆக்கிரமிக்கப்பட்டதைப் பற்றியது. மாறுவேஷம் புனைந்த அந்தச் சாரணக் கவி, சாரணனல்ல; திலகஸிம்மரின் மகன் தேஜ்ஸிம்மன்.

## XVII

## நாட்டு மலர்

சந்திரன் உதயமாகிவிட்டது. குளிர்ந்த காற்று வீசிக்கொண்டிருந்தது. நடு இரவு. அந்த நிசப்தமான இரவில், சூரியமஹல் மலையின் மேல் ஒரு நந்தவனத்தில், ஒரு ராஜகுமாரி தனியாக உலவிக்கொண்டிருந்தாள். அந்த நிலவு பொழியும் இரவில், அவள் ஏன் தனியாக உலவிக்கொண்டிருந்தாள் என்பது தெரியவில்லை. சில சமயம் கண் கொட்டாமல் வானை நோக்கினாள். சில சமயம் ஒன்றிரண்டு புஷ்பங்களைக் கொய்து, அவற்றினுடைய இதழ்களை ஒவ்வொன்றாய்ப் பிய்த்துக் கீழே எறிந்தாள். சில சமயம் ஏக்கத்துடன் இனிய குரலில் மெள்ளப் பாடினாள்.

பொற்கொடி போன்ற அந்தக் கட்டழகியைப் பார்த்தால், மானிடப் பெண் என்றே தோன்றவில்லை. தேவலோகத்தி லிருக்கும் அப்ஸரஸ், இந்த

மலர்வனத்தில் விளையாட வந்திருப்பதைப்போல் தோன்றியது. கன்னிகையின் வயது பதினைன்கிற்கு மேல் இராது. மதிமுகம்; மலர்ந்த கமலக் கண்கள்; லாவண்யமான—தளிர் போன்ற சரீரம். பெண்ணின் பெயர் குஸுமகுமாரி. அவள் முகத்தைக் கூர்ந்து நோக்கியபொழுது அந்தச் சிறு வயதிலேயே, ஏதோ மர்மமான துக்கம் அவள் மனக் கோட்டையில் அமர்ந்து, ஆட்சி புரிவதாகத் தோன்றியது. அன்பு பொங்கும் அவள் கண்களில், சோகம் குடிகொண் டிருந்தது.

சந்திரிகை ஒளியில், மரங்களி லுள்ள இலைகளும் பூக்களும் வெள்ளியாலானதுபோல் திகழ்ந்தன. புதிதாய் மலர்ந்த புஷ்பராசிகள், நள்ளிரவில் தன் மார்பின்மீதுள்ள மேலணியை அகற்றி, குளிர்ந்த காற்றில் மனம் மகிழ்ந்துகொண் டிருந்தன. குஸுமாவுக்கு இரவில் பூக் கொய்வதில் மிகவும் பிரியம். ஆகையால், அவள் நிலவில் பூப் பறித்துக்கொண் டிருந்தாள்.

அவள் சோகத்தில் மூழ்கி இருந்தாலும், அவளது முக காந்தியைக் கண்டு, சந்திரன் முகம் வெளுத்தான். அவள் மேனியின் அழகைக் கண்டு சந்திரிகை வெட்க மடைந்தது. அந்த மலர் வனத்தில் அவள் சென்ற விடம் ஒரு புது அழகுடன் விளங்கியது.

அவள் உண்மையில் ஒரு பெண்ணு அல்லது கனவில் தோன்றுகின்ற திவ்ய ரூபதாரிணியான தேவியா? அம்மாதிரி ஒரு சுந்தரி பூமியில் இருக்க முடியுமா? நாம் இன்றுவரை அவளைப்போல் ஒரு பெண்ணைப் பார்த்ததில்லை. ஆகையால், அவளைக்

கற்பனையின் உயிர்ச் சித்திரம் என்று சொல்லுகிறோம். உவமையற்ற சௌந்தரியத்திற்கு என்னென்ன வேண்டுமோ, அவை யாவும் அவளிடம் இருந்தன.

திடீரென்று இரவின் நிசப்தத்தைப் பிளந்து கொண்டு தூரத்திலிருந்து வீணா கானம் கேட்டது. நிமிஷத்திற்குள் அந்த இன்னிசை உலகை மோகிக்கச் செய்துவிட்டது. வீணையின் இனியஒலியுடன், வீணையைப் பழிக்கும் குரலில் 'குஸுமா' என்று யாரோ அழைப்பதும் கேட்டது. அவள் ஆச்சரிய மடைந்து திரும்பிப் பார்த்தாள்.

மீண்டும், வீணையின் ஒலியும், கூடவே சப்தமும் 'குஸுமா' என்று அழைப்பதும் அவள் செவிகளில் செம்மையாக விழுந்தன.

கீதம் வரும் திசையை ஆவலுடன் பார்க்கலானாள் குஸுமா. பூந் தோட்டத்திற்கு வெளியே ஒரு மரத்தடியில் அமர்ந்து, சாரணன் ஒருவன் வீணையை மீட்டிப் பாடுவதற்குத் தயார் செய்து கொண்டிருந்தான். குஸுமாவுக்குச் சாரணர்களின் பாட்டில் அதிகப் பிரியம். அவள், மெள்ள சாரணனிருக்கு மிடம் வந்து, ஒரு மரத்தின் மறைவில் நின்று, பாட்டைக் கேட்கலானாள்.

சாரணன் பாடிய பாட்டின் கருத்து இதுதான்:

'ராஜபுத்திர ஸ்திரீயின் பூர்வ கால விருத்தாந்தங்களில் ஒன்றைக் கேள்; சத்தியத்தைக் காக்க நடந்த ஒரு சம்பவத்தைக் கேள். ஏழு வயதுள்ள சிறுமி ஒருவள், பத்து வயதுள்ள சிறுவன் ஒருவனைச் சந்தித்தாள். விளையாட்டாக அந்தப் பெண் அந்தப் பையனைக் கணவனாக வரித்து, "அவனை யன்றி

வேறு யாரையும் மணந்துகொள்ள மாட்டேன்" என்று பிரதிக்ஞை செய்துகொண்டாள். சிறுவனும் பிரதிக்ஞை செய்தான். ராஜபுத்திரப் பெண்கள், தங்கள் வாக்குறுதியிலிருந்து ஒருபொழுதும் தவறிய தில்லை.

'திடீரென்று விபத்தின் மேகங்கள் கூடின. துன்பச் சூழலில் இன்ப உலகம் மூழ்கியது. அந்தச் சிறுவன் பிறகு என்ன ஆனான்? எங்கு சென்றான்? யுத்தத்தில் கொல்லப்பட்டானா? தண்ணீரில் மூழ்கினானா? அவன் எங்கு சென்றானென்று யாரால் சொல்ல முடியும்? எல்லோரும் அவனை மறந்துவிட்டார்கள். ஆனால், அந்தச் சிறுமியும் அவனை மறந்திருப்பாளா?

'சந்தாவத் குலத்தின் வீரனொருவன், அந்தக் கன்னிகையை மணக்க விரும்பினான். அவனுடைய செல்வமும், கீர்த்தியும், பராக்கிரமமும் தேசம் பூராவும் பரவி இருந்தன. அவனது செல்வத்தைக் கண்டு தன் வாக்கை, அவள் மறந்தாளா? ராஜ புத்திரப் பெண்கள் சத்தியத்தை அலட்சியம் செய்ய மாட்டார்கள்.

'சந்தாவத் வீரன் ஆசை காட்டினான். அந்தப் பெண், "நான் ராடௌருக்கு வாக்குக் கொடுத்து விட்டேன்" என்றாள். அப்பொழுது சந்தாவத் வீரன் அவள் கையைப் பலவந்தமாகப் பிடிக்க முயன்றான். அந்த வீர நங்கை, "சந்தாவத் வீரரே! வீணாக இதில் தைரியம் காட்டாதீர்! மரணத்திற்கு அஞ்சுங்கள். மரணத்தின் முன் தங்களுடைய தொன்றும் நடவாது. ராஜபுத்திரப் பெண் தான் செய்த சத்தியத்தை ஒருநாளும் புறக்கணிக்க முடியாது" என்றாள்.

'அந்தப் பெண் நேசிக்கும் அந்த ராடௌர் வீரன் எங்கே? அவன் இந்தச் சமயம் மலைக் குகையில் வசிக்கிறான். பீல்களுடன் காலம் கழிக்கிறான். பிச்சை எடுத்து உண்டு, மகாராணுவுக்காகப் போருக்குச் சென்று வீரம் காட்டுகிறான். ராஜபுத்திரப் பெண் சத்தியத்தில் தவறாது இருந்தால் அவன் கட்டாயம் ஜயிப்பான். ராஜபுத்திரப் பெண், தன உயிரினும் மேலாகச் சத்தியத்தை மதித்தால், ராஜபுத்திரன் ஒரு நாளும் தோல்வி யடைய மாட்டான். ராஜகுமாரி தன் சத்தியப் பிரதிக்ஞையினின்று வழுவாவிட்டால், ராடௌரும் தன் சத்தியத்தைக் காப்பாற்றுவான்.'

அந்தக் கம்பீரமான கீதத்தைக் கேட்டுக் குஸுமாவுக்கு ஆச்சரியமாகப் போய்விட்டது; அந்தக் கீதத்தின் ஒலி காற்றோடு காற்றாய்க் கலந்து மங்கும் வரை மௌனமாக நின்று கேட்டுக்கொண் டிருந்தாள். அந்தப் பாட்டினால் அவளுடைய மென்மையான இதயம் இளகிவிட்டது. அவ்வளவு நாட்களாக அவள் உள்ளத்தில் மறைந்து கிடந்த ரகசியம் வெளிப்பட்டது. தன் உள்ளத் துடிப்பை அவளால் சமாளிக்க முடியவில்லை. மெள்ள மரத்தின் மறைவினின்று வெளி வந்தாள்.

சாமர்த்தியசாலியான அந்தச் சாரணன், உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் அழகு வாய்ந்த அந்தக் கட்டழகியின் பக்கம் பார்த்துவிட்டு, மீண்டும் தலைகுனிந்து, 'என்னுடைய இந்த அற்பப் பாடலினால் இந்தக் குஸும குமாரியின் மனத்திற்கு ஏதாவது கஷ்டம் ஏற்பட்டுவிட்டதோ? வனவாசியான இந்தச் சாரணனின் பாட்டை யார் கேட்கப்

போகிறுர்கள்? அப்படி யாராவது இருந்தால், அது இந்தக் குஸுமகுமாரி ஒருவள்தான். அவளுக்கும் என் பாட்டு பிடிக்காவிட்டால், அவளும் பதில் சொல்ல வேண்டாம். பிறகு, இந்தச் சாரணன் தூரத்திலுள்ள கோரமான வனத்தில் தனியாக அமர்ந்து தன் பாடலைப் பாடுவான்' என்று சொல் லிக்கொண்டான்.

குஸுமாவுக்குச் சங்கீதத்தைவிடச் சாரணனின் வணக்கமான இந்த வார்த்தைகள் மனத்திற்கு அதிகத் திருப்தியை அளித்தன. அவன் பாட்டில் இருந்த இனிமை அவன் பேச்சிலும் இருந்தது. சாரணன் வணக்கமான அந்த சொற்களைச் சொல்லிக் கொண்டே மரத்தின் மறைவினின்றும் வெளிவந் தான். நிலவொளியில் அவனுடைய உருவத்தைக் கண்டு, குஸுமா இன்னும் அதிக ஆச்சரியமடைந் தாள். திடகாத்திரமான தேகத்துடன் வாலிபத்தின் முறுக்குடனும், அற்புத அழகுடனும் திகழ்ந்தான் சாரணன். பிரம்மச்சாரியான அந்த வாலிபனின் அழகினல் அந்த இடமே ஒரு புதிய அழகு கொண் டது. அவனுடைய கையில் வீணை இருந்தது. நில வொளியில் அவனுடைய அகன்ற நெற்றியும், ஒளி பொருந்திய கண்களும், அவைகளில் தேங்கும் கவலை யும் நன்ருகத் தெரிந்தன.

சாரணன் மீண்டும் கீழே பார்த்துக்கொண்டே, 'குமாரி! நீ சொன்னல் இந்தச் சாரணன் நிர்ஜன மான தன் வனத்திற்குச் சென்றுவிடுவான். ஆனல், இந்தக் கீதத்தைப் பிறர் வாயிலிருந்து நீ எப்பொழு தாவது கேட்க முடியுமா?' என்ருன்.

குஸுமாவினல் தன் உள்ளத் துடிப்பை அடக்க

முடியவில்லை. அவள் முக்காட்டை விலக்காமல மெல்லிய குரலில், ‘சாரண தேவா! தாங்கள் இந்தக் கீதத்தை யாரிடம், எப்பொழுது கற்றுக்கொண்டீர் கள்?’ என்று கேட்டாள்.

சாரணன் முன்போலவே மெல்லிய-ஆனால், கம் பீரமான குரலில், ‘காட்டின் மலைக் குகையில் யார் வசித்து வருகிறார்களோ அவர்களிடம், அந்தக் கானி லும், அந்தக் குகையிலும் கற்றேன்’ என்றான்.

‘காட்டிலும் மலையிலும் இருந்து யார் காலம் கழிக்கிறார்கள்?’

‘தன் பிதுரார்ஜிதமான கோட்டையை இழந்து சிறு வயதிலிருந்தே மலையிலும் கானிலும் அலைந்து கொண்டிருக்கிறானே அவன்!’

குஸுமாவினால் பொறுக்க முடியவில்லை. அவள் உரத்த குரலில், ‘தாங்கள் அபாக்கியவதியான ஒரு ராஜகுமாரியின் துணிச்சலுக்கு மன்னித்துக் கொள் ளுங்கள். அந்த ராடௌர் வீரர், இந்தத் துர்ப்பாக்ய வதியின் அதிர்ஷ்டத்தால் உயிருடன் இருக்கிறாரா?’ என்றாள்.

‘ஹல்திகாடி யுத்தத்தில் அந்த வீரனின் வாள் ஒளியை ஜனங்கள் கண்டார்கள். மொகல் சேனை திரும்ப வரும்பொழுது, மீண்டும் அதனைக் கண்பார் கள்!’

குஸுமகுமாரி கண்ணீர் நிறைந்த கண்களுடன் சாரணனின் பக்கம் பார்த்து, ‘கடவுள் அவரைச் சௌக்கியமாக வைக்கட்டும்!’ என்றாள்.

‘தேவி! இந்தச் சாரணனின் துடுக்கை மன்னிப் பதானால், இன்னும் சில விஷயங்களைக் கேட்கத் தைரியமடைவான். தாங்கள் அந்த ராடௌரை எப்

பொழுதாவது பார்த்திருக்கிறீர்களா? எல்லோரா லும் மறக்கப்பட்டு, பீல்களுடனும் குடியானவர்களு டனும் காட்டிலும் மலையிலும் இருப்பவனைக்கூட ஞாபகம் வைத்துக்கொண் டிருக்கும் ஒருவர் இருக் கின்றாரா?'

சாரணன் இன்னும் ஏதோ சொல்ல விரும்பி னான். ஆனால், அவன் குரல் தடைப்பட்டுவிட்டது. அவன், நடுங்கும் குரலில், 'நானும் காட்டுவாசிதான். ஒருகால் அந்த ராடௌரைச் சந்திக்கவும் கூடும். ஆகையால், அவரிடம் ஏதாவது செல்ல வேண்டு மானால்........என்றான்.

'ராஜபுத்திர கன்னிகைக்குச் சத்தியத்தைக் காப் பாற்றத் தெரியும்; அவள் தன் சத்தியத்தைக் கட் டாயம் கடைப்பிடிப்பாள்' என்று சொல்லுங்கள்.

'அந்த ராடௌருடன் உங்களுக்கு முன்பே பழக் கம் உண்டா?'

இந்தத் தடவை குஸுமா வெட்கத்தால் தலை குனிந்தாள். பிறகு மெள்ள, 'அந்த ராடௌர் இந்த அபாக்கியவதிக்கு மிகவும் பழக்கமானவர்!' என்றாள்.

வெகுநேரம் வரை இருவரும் மௌனமாக இருந் தார்கள். அதன் பிறகு சாரணன், 'தேவி! தேஜ் ஸிம்மன் எனக்கு இந்தப் பாட்டைக் கற்பித்த பொழுது இந்த மோதிரத்தையும் என்னிடம் கொடுத் தான். "இந்தக் கீதத்தில் வர்ணிக்கப்பட்ட வீரப் பெண்ணைச் சந்திக்க நேரிட்டால், என்னுடைய வாக்கை நிரூபிக்கும் பொருட்டு இந்த மோதிரத்தை அவளிடம் கொடுத்துவிடு" என்று சொன்னான். இன்று தங்களைச் சந்தித்தேன். உத்தரவு கிடைக்கு

மானால், இந்த மோதிரத்தைத் தங்களுக்கு அணிவிப் பேன்' என்றான்.

வெட்கம் மேலிட்டவளாய் குஸுமா அந்த அழகிய வாலிப சாரணனின் பக்கம் நோக்கினாள். அவள் உடல் வெட்கத்தால் குன்றியது. சங்கோசத் துடன் அவள் யுவனின் பக்கம் கையை நீட்டினாள். அவள் சரீரம், ஏனோ தெரியவில்லை, நடுங்கியது.

சாரணன் மெள்ள மோதிரத்தை அவள் விரலில் அணிவித்தான். மோதிரத்தை அணிவிக்கும்போது சாரணனின் சரீரம் முழுமையும் மயிர்க்கூச்செறிந் தது. கைகள் நடுங்கின. குஸுமா, தன் கண்களை மூடிக்கொண்டாள். சாரணன் விட்ட பெருமூச்சு அவள் கைகளில் படிந்தது. சாரணனின் உதடுகள் அவள் கைகளில் படிந்த மாதிரியான ஓர் உணர்ச் சியும் அவளுக்கு ஏற்பட்டது.

ஆனால், சாரணன் உண்மையாகவே அம்மாதிரித் துடுக்கான காரியத்தைச் செய்தானா? இல்லை. இது குஸுமகுமாரியின் கற்பனைதான். குஸுமா கண் களைத் திறந்தாள். எதிரே அதே மனோகரத் தோற்றம் கொண்ட அந்த வாலிபன் அன்பு தவழும் முகத்துடன் நின்றான். குஸுமா, தன் மலர்க்கரங் களை மெள்ள விடுவித்துக்கொண்டாள் ;. முகம் சிவந்துவிட்டது; தேங்கித் தேங்கி மூச்சுவிடலா னாள்.

பிறகு, குஸுமா தன்னைத் தைரியப்படுத்திக் கொண்டு திடமான குரலில், 'இந்த மோதிரத்திற் குப் பதிலாக அந்த வீர புருஷருக்குக் கொடுக்கக் கூடிய பொருள் என்னிடம் என்ன இருக்கிறது? தாங்கள் அவரைச் சந்திக்க முடியு மானால், என்

ஞாபகார்த்தமாக இந்தப் புஷ்பத்தை அவரிடம் கொடுங்கள் ' என்ருள்.

## XVIII

## காட்டு மலர்

கிழக்கு வெளுக்கச் சிறிது நேரம்தான் இருந்தது. தேஜ்ஸிம்மன் சூரியமஹல் மலையிலிருந்து கீழே இறங்கிச் சாரண வேஷத்தைக் களைந்துவிட்டு, பீம சந்திரனின் கிராமத்தருகே இருந்த ஏரிக்கு ஸ்நானம் செய்யச் சென்ருன்.

அவன் ஏரியை நெருங்கியதும், பீல் பாஷையில் யாரோ பாடுவது கேட்டது. அந்த நிசப்தமான இரவின் இறுதியில் யார் பாடுகிருர்கள் என்பதை அறிய ஆவலுள்ளவனாய், ஏரியின் அருகே யுள்ள மாந் தோப்புக்குள் புகுந்தான். உள்ளே ஓர் உயர்ந்த பாறையின் மேல் அமர்ந்து ஒரு பெண் பூத்தொடுத்துக்கொண் டிருந்தாள், நடு நடுவே பாட்டும் பாடிக்கொண் டிருந்தாள். அவளைக் கண்டு ஆச்சரிய மடைந்தான் தேஜ்ஸிம்மன். அவள் பீம சந்திரனின் மகள்.

தேஜ்ஸிம்மன் சிறிது நேரம் நின்றுவிட்டு, ' வன தேவி !' என்றழைத்தான்.

அவள் அவனைத் திரும்பிப் பார்த்துவிட்டு, ஆச் சரியமடைந்தவள்போல் சிரித்துக்கொண்டே, நான் உனக்காகக் காட்டு மலர்களைப் பறித்துத் தொடுத்துக் கொண்டிருக்கிறேன் ' என்ருள்.

' உண்மையில் நீ வனதேவிதானு? இந்த இரவில் ஜனசந்தடி யற்ற இந்த வனத்திலா பூக்

கொய்கிருய்? என்னுடன் வா, வீட்டுக்குச் செல்லலாம்.'

'நீ புஷ்பத்தை மிகவும் விரும்புகிருயல்லவா? உனக்காக மலர் கொண்டுவர இங்கு வந்தேன்' என்று சொல்லிவிட்டு, அவள் சிரித்தாள். தேஜ்ஸிம்மனின் புருவங்கள் விரிந்தன. ஆனுல், பேசாமல் இருந்துவிட்டான். அந்தப் பெண்ணின் வார்த்தைகளிலிருந்த கருத்தை அவனுல் அறிய முடியவில்லை.

பெண் மீண்டும் சிரித்துக்கொண்டே, 'நான் கட்டிய இந்தப் பூமாலையை ஏற்றுக் கொள்வாயா?' என்ருள்.

'ஏன் ஏற்றுக் கொள்ளாமல் என்ன? கொடேன்!'

'நானே என் கையால் உன் கழுத்தில் போடுகிறேன்!''

'சரி, போடு, பிறகு என்னுடன் வீட்டுக்கு வந்துவிடுவாயல்லவா?'

'அடடா! இது என்ன உன் மார்பில்?'

'ஒன்றுமில்லை, ஒரு புஷ்பம்.'

'அதை எடுத்து எறிந்துவிடு.'

'ஏனே?'

'அது நாட்டில் மலர்ந்த புஷ்பம்.'

'இருக்கட்டும், நான் அதை எறியமாட்டேன்.'

'அப்படியானுல் நான் இந்த மாலையை உனக்குப் போடமாட்டேன்.'

'ஏன்?'

'இந்த மாலையை அணிவித்தால், அதோ உன் மார்பில் உள்ள மலர் கோபித்துக்கொள்ளும்!'

தேஜ்ஸிம்மன் ஆச்சரியத்துடன், 'என்ன?' என்ருன்.

'உத்தியான வனத்துப் புஷ்பத்திற்கும், காட்டில் மலர்ந்த புஷ்பத்திற்கும் உள்ள வித்தியாசம், பெரிய மனிதருக்கும் சிறியவருக்கும் உள்ள வித்தியாசத்தைப்போன்றது. சிறிய மனிதர்களைப் பார்த்துப் பெரிய மனிதர்கள் கோபிக்கிறார்கள். உன் கழுத்தில், வனபுஷ்ப மாலையைப் பார்த்தால் நாட்டுமலர் கோபமடையாதா?'

பெண்ணின் வார்த்தையி லுள்ள அர்த்தத்தை தேஜ்ஸிம்மன் நன்றாக அறியவில்லை. ஆகையால், அவன், 'மலர்கூட யார்மீதாவது கோபிக்குமா?' என்றான்.

'ஏன் கோபிக்காது? கோபிக்கா தென்றால் இந்தப் பூவை எடுத்தெறிய, நீ ஏன் இவ்வளவு பயப்படுகிறாய்?'

தேஜ்ஸிம்மன் பேசாமல் இருந்தான்.

'இந்த இரவில் தனியாக நீ எங்கே சென்றிருந்தாய்?' என்றாள் அந்தப் பெண்.

'அதை ஏன் நீ கேட்கிறாய்?'

,ஏனென்றால், இரவில், வழியில் பயம் அதிகமாயிற்றே என்பதற்காக.'

'யாருடைய பயம்?'

'திருடர்களுடைய பயம்!'

'திருடர்கள் கொள்ளைக்காரர்கள் என்று யாரைச் சொல்கிறாய் என்பதே எனக்குத் தெரியவில்லை.'

'அவர்கள் ஒருபொழுதும் உன் பொருள்களைத் திருடிய தில்லையா?'

'இல்லை.'

தேஜ்ஸிம்மனைப் பாதாதிகேசம் ஒரு முறை

பார்த்துவிட்டு, 'அப்படியா, ஆனால் உன் கையிலிருந்த மோதிரம் எங்கே போயிற்று?' என்றாள் அவள்.

இந்தத் தடவை உண்மையாகவே தேஜ்ஸிம்ம னுக்கு ஆச்சரியமாகிவிட்டது. அவன், மனத்திற்குள், 'இந்தப் பீல் பெண் என்னுடைய சகல விஷயங்களை யும் அறிவாளா? இன்றைய சகல சம்பவங்களையும் தன் கண்களால் பார்த்தாளா?...மோதிரம் கொடுக் கும்போது இவள் பார்த்தாளா? இல்லை. அப்படி யிருக்காது. இவள் தான் அந்தச் சமயம் இங்கே பூக்கொய்துகொண்டு இருந்தாளே!' என்று எண்ண மிடலானான்.

தேஜ்ஸிம்மன் யோசனை செய்வதைக் கண்டு, பெண் கலகலவென்று நகைத்து, 'சொல், உன் னுடைய பொருள் ஒன்று திருட்டுப் போய்விட்ட தல்லவா?' என்றாள்.

'இல்லை! திருட்டுப் போகவில்லை. அந்த மோதி ரத்தை எங்கேயோ விட்டுவிட்டேன்.'

'சரி, நான் அதைத் தேடிக் கண்டுபிடிக்கிறேன்!'

'கொண்டு வாயேன்! உன்னையார் தடுக்கி றார்கள்.'

'நான் தேடிக் கொண்டுவந்துவிட்டால், அந்த மோதிரம் என்னுடைய தாகிவிடுமா?'

'சரி, அப்படியே.'

ஆனந்தத்தால் அந்தப் பெண் கலகலவென்று நகைத்துவிட்டு, 'சரி, ஆனால் என் மாலையைப் போட்டுக்கொள்ள மாட்டாயா?' என்றாள்.

இல்லை, இன்று இல்லை. நீ வீட்டிற்குப் போ!'

நான் போகமாட்டேன்.'

'ஏனோ?'

'எனக்கு இந்தச் சந்திரனைப் பார்த்துக் கொஞ்சம் பாட்டுப் பாடவேண்டுமென்று ஆசையாக இருக்கிறது.'

தேஜ்ஸிம்மன் ஸ்நானம் செய்யச் சென்றான். சிறிது நேரத்தில் அப்பெண்,

'வாசனை வர்ணமற்ற வனமலர் ஒன்றுண்டதனை
வாங்கியே அணிவார் இந்த வையத்தில் யாருமில்லை
வாசமே வீசும் நல்ல வண்ண மலர் தேடிச்செல்வார்
வாடியே வீழும் இந்த வனமலரைக் கையால் தீண்டார்
காதலி யொருத்தி அன்பால் கட்டினாள் மலர்மாலைதான்
வேதனை உள்ளம் கொண்டாள், வேண்டினாள்' மறுத்தான் [அன்பன்
'பகட்டின்றிக் கானில் பூத்த பனிமலர் எந்த நாளும்
முகப்பதற்கு அன்பர் இன்றி முடிக்கும்தன் வாழ்வைத்தானே!'

என்று பாடுவது அவன் காதிற்குக் கேட்டது. அதில், ஸப்த ஸ்வரங்களும் கலந்தொலித்தன; ஓசை அந்த மலையைத் தாண்டிப் போய் வைகறையின் நிர்மல ஆகாயத்தை முட்டியது.

## XIX

## இருளில் தோன்றிய ஒளி ரேகை

மழைக் கால ஆரம்பத்தில், ஹல்திகாடி யுத்தத்தில், தங்கள் தேசத்திற்காகப் பதினாலாயிரம் ராஜபுத்திரர்கள் உயிரைத் தியாகம் செய்தனரென்பது ஏற்கெனவே கூறப்பட்டிருக்கிறது. அந்த வருஷம் மழையின் காரணமாகத் துருக்க சேனை ஒன்றும் செய்ய முடியவில்லை; செயலற்று மேவாரை விட்டுச் சென்றது. பிரதாபஸிம்மனுக்குச் சில மாதங்கள் இளைப்பாறச் சமயம் கிடைத்தது.

சமயம் வந்ததும், சத்துரு சைனியம் மேவாரை மறுபடியும் எதிர்த்து வந்தது. வீர சிரேஷ்டனுன பிரதாபஸிம்மன் மீண்டும் எதிரிகளை எதிர்த்தான். ஆனுல், கணக்கற்ற மொகலாய சேனையுடன் போர் செய்தது வீணுயிற்று. வெற்றி யின்றிப் போர்க் களத்தினின்றும் வெளியேறினுன்.

மொகல் சேனுதிபதி ஷஹபாஜ்கான் கமலமீர்க் கோட்டையைச் சூழ்ந்துகொண்டான். பிரதாபஸிம்மன், உதயப்பூர் அரண்மனையை விடுத்துத் தன் தலை நகரை அங்கே அமைத்திருந்தான். மேவாரிலிருந்து வடமேற்குத் திசையில், மார்வார் செல்லும் மலை வழி யில் ஓர் உயரமான மலையில் அந்தக் கோட்டை நிறு வப்பட்டிருந்தது. இருபுறங்களும் இரு பெரிய பர்வ தங்கள். நடுவே கற்களும் பாறைகளும் நிறைந்த சிறு வழி. அந்த வழியாகத்தான் எதிரிகள் மார்வாரை ஆக்கிரமித்தனர். அது காரணமாக அந்த வழியை அடைக்கும்பொருட்டு, பிரதாபஸிம்மன் கமலமீரில் தன் தலைநகரை ஏற்படுத்திக் கொண்டான். எவ்வளவு நாட்கள் முடியுமோ அவ்வளவு நாட்கள், அந்த மலைக் கோட்டையைக் காத்தான். கடைசியில், வேறு வழி யில்லை. கோட்டையி லுள்ள சேனைகள் பலவிதமான கஷ்டங்களுக்கு உள்ளாயின. ஆகவே, அந்தக் கோட் டையைத் தன் மாமனிடம் ஒப்படைத்துவிட்டு அவன் மற்ருெரு கோட்டைக்குச் சென்று தங்கினுன்.

பிரதாபஸிம்மனின் மாமன், பிஜிலியைச்சேர்ந்த பாவர் வம்சத்தவன். யுத்த ஆரம்பத்தில் அவன் மகாராணுவிடம் செய்த பிரதிக்ஞையைப் பூராவும் நிறைவேற்றினுன். தனது சத்தியத்தைக் காப்பாற்று வதற்காக பாவர் குலாதிபன் சந்தோஷமாக உயி

ரைக் கொடுத்தான். கமலமீர், எதிரிகள் வசமாகி விட்டது.

கமலமீரிலிருந்து வெளியேறிய பிரதாபஸிம்மன் மேவாருக்குத் தென்மேற்கில் சவந்த பிரதேசத்தில் தன் தலைநகரை ஸ்தாபித்தான். அந்தப் பிரதேசம் மலைகள் சூழ்ந்ததால் எதிரிகள் விரைவில் வர முடியாததாக இருந்தது. அந்தப் பிரதேசத்தில், விசேஷமாகப் பீல்கள்தான் வசித்துவந்தனர். அந்த ஆபத்துக் காலத்தில் பீல்கள் ராஜபுத்திரர்களிடம் பெரிதும் அநுதாபம் காட்டினார்கள். தங்களுக்கு வரும் விபத்தை லட்சியம் செய்யாமல் பிரதாபஸிம்மனுக்கு இடமளித்தனர். அவனுக்கு முழு உதவியும் செய்தனர். அவன், சவந்தக் கோட்டையில் பீல்களையும் ராஜபுத்திரர்களையும் சேர்த்துக்கொண்டு இருந்து வரலானான்.

எதிரிகளும் சும்மா இருக்கவில்லை. கமலமீரைக் கைப்பற்றிய மானஸிம்மன், தர்மேதி,கருந்தம் முதலிய கோட்டைகளைச் சூழ்ந்துகொண்டான். மஹாவத்கான் உதயப்பூரைக் கைப்பற்றிக்கொண்டு, பிரதாபஸிம்மனை ஜயிக்க பரீத்கானை சவந்தக் கோட்டையை நோக்கி அனுப்பினான். இந்தவிதமாக நாற்புறங்களிலும் எதிரிகளால் சூழப்பட்டும், பிரதாபஸிம்மன் தைரியத்தை இழக்கவில்லை. அவன் தைரியத்துடன், 'மேவாரில் ஒரு மலைக் குகை அல்லது பள்ளத்தாக்கு சுதந்திரமாக இருக்கும் வரையும் இந்த வீரன் பீல்களுடன் மலைக் குகையில் இருந்து ஸிஸோதியா வம்சத்தின் கௌரவத்தைக் காப்பாற்றுவான்' என்று அவன் பிரதிக்ஞை செய்துகொண்டான். ஒவ்வொரு மலையிலும், மலைக் காட்டிலும் ராஜபுத்திர சைனியம்

லிருந்தது. மலையடிவாரத்திலும் குகைகளிலும் பிரதாப ஸிம்மனின் வீரர்கள் இருந்துவந்தார்கள். அவனுடைய உத்தரவுப்படி மாறுவேஷமணிந்து எதிரியைப்பற்றிய தகவல்களைச் சேகரித்துப் பிரதாப ஸிம்மனுக்குத் தெரிவித்துக்கொண்டிருந்தனர்.

மலையுச்சியில் நடுநிசியில் தீவட்டி எறிவதைக் கண்டு பிரதாப ஸிம்மனின் வீரர்கள் அதன் கருத்தை அறிந்துகொள்வார்கள். இந்த விதமான சங்கேதத்தினால் பிரதாபஸிம்மன் தன் சேனையை ஓர் இடத்தில் கூட்டி எதிரி சேனை அஜாக்கிரதையாக இருக்கும் தருணம் பார்த்து அவர்களைத் தாக்குவான். பிரதாபஸிம்மன் எங்கோ ஓடிவிட்டான் என்று எண்ணி எதிரிகள் நிம்மதியாக இருப்பார்கள். அதே சமயம் திடீரென்று பிரதாபஸிம்மன் ராஜபுத்திர சைனியத்துடன் தோன்றி எதிரிகளைத் துவம்சம் செய்துவிட்டு, வந்த வழியே சென்றுவிடுவார்.

உதயப்பூர் போய்விட்டது; கமலமீர் போய்விட்டது; கைவசமிருந்த மலைக் கோட்டைகள் யாவும் எதிரி வசமாகிவிட்டன. மலைகளிலும், சமவெளியிலும் எங்கு நோக்கினும் மொகலாய சேனை பரவிக் கிடந்தது. மானஸிம்மன், ஷஹபாஜ்கான், பரீத்கான், மஹாவத்கான் ஆகியவர்கள் சேனைகளுடன் நாற்புறமும் ஆக்கிரமிக்க முயன்றுகொண்டிருந்தனர்.

ஆயினும், மேவாரின் வீர புருஷன், தன் உத்தேசத்தினின்றும் சற்றும் தளரவில்லை. பிரதாபஸிம்மன் ஸிஸோதியர்களின் பெயரைக் காப்பான்; சுதந்திரத்தை நிலைநாட்டுவான்!

சவந்தக் கோட்டையைக் கைப்பற்ற பரீத்கான் சேனையுடன் வந்துகொண்டிருந்தான். அந்த உயர்ந்த

மலைப் பிரதேசத்தை ஜயித்து பிரதாபஸிம்மனைப் பிடித்துச் செல்லவேண்டு மென்ற உற்சாகத்துடன் மொகலாய சேனை வந்துகொண்டிருந்தது. திடீ ரென்று, ராணுவின் அழைப்புச் செய்தி ரகசியமாக மலையின் நாற்புறங்களிலும் உள்ள ராஜபுத்திர சைனியத்திடையே பரவியது; ராஜபுத்திரர்கள் ராணுவின் உத்தேசத்தை அறிந்துகொண்டனர்.

நிமிஷத்திற்குள் பரீத்கானைச் சூழ்ந்துகொண் டனர். தன்னையும் சேனையையும் ராஜபுத்திர சைனி யம் சூழ்ந்துவிட்டதை அறிந்தான் பரீத்கான். அதி னின்றும் தப்ப வழி யொன்றும் தோன்றவில்லை. எல்லாச் சேனைகளும் அங்கேயே போரிட்டு மாண் டன. பரீத்கானே, அவனது வீரர்களோ ஒருவராவது தமது நாட்டுக்குத் திரும்பவே யில்லை.

கருமேகம்போல் விபத்துக்கள் நாற்புறங்களிலும் திரண்டு வரலாயின. எதிர்கால வானம் ஒரே அந்த கார மயமாக இருந்தது. சேனை, தளம், பலம், கோட்டைகள் இவை குறையக் குறைய, பிரதாப ஸிம்மனின் ஊக்கம் பெருகிக்கொண்டே வந்தது. கணக்கற்ற மொகலாய சேனையின் முன், வாள் ஏந்தி, அவர் ஒருவரே அந்த மலைப் பிரதேசத்தை ரக்ஷிக்க வேண்டும்; ரக்ஷிப்பார்! அந்தப் பர்வதத்தின் ஒவ் வொரு கல்லிலும் தன் வீர சின்னத்தைப் பதிப்பார்.

எதிர்கால ஆகாயத்தை ஆபத்து மேகங்கள் இன்னும் கடுமையாகச் சூழ ஆரம்பித்தன. அந்த அந்தகாரத்தில் பிரதாபஸிம்மனின் தைரியமும், திட சங்கல்பமும் மின்னல்போன்று ஜ்வலித்தன. அந்த ஒளி ரேகை டில்லியின் வாசல்வரை சென்று மின்னி யது. அந்த அபூர்வ ஒளி ரேகை, பாரத நாடு பூரா விலும் ஒரு கிளர்ச்சியை எழுப்பியது.

மீண்டும் மழைக் காலம் வந்தது. இந்தத் தடவை மானஸிம்மனும், மொகலாய சேனையும் ஒன்றும் செய்ய முடியாமல் மேவாரைக் கைவிட்டு விட்டு டில்லி திரும்பினார்கள்.

## XX

## வீர புருஷன்

கடவுளின் படைப்பில் கால வேறுபாடுகள் ஏற்பட்டுக்கொண்டுதான் இருக்கின்றன. பார்த்துக்கொண்டிருக்கும்போதே மீண்டும் வசந்தருது வந்தது. அந்த வசந்தகாலத்தின்கூடவே சண்டமாருதம் போல் சத்துருவின் சைனியமும் வந்தது. ஆயினும் பிரதாபஸிம்மன் ஸிஸோதியா வம்சத்தின் கௌரவத்தைக்காப்பார்! தேசத்தின் மானத்தைக் காப்பார். சுதந்தரத்தைக் கைநழுவ விடமாட்டார்!

மீண்டும் மலையிலும், சமவெளியிலும் சத்துரு சேனை வந்து குவியலாயிற்று. மீண்டும் சத்துருக்கள் ஒவ்வொன்றாக மலைக் கோட்டைகளைக் கைப்பற்றி ராஜபுத்திரர்களை விரட்டலாயினர். ஆனால் அந்தத் தடவையும் பிரதாபஸிம்மன் முன்போலவே தன் பிரதிக்ஞையினின்றும் சற்றும் தளரவில்லை.

அந்த வருஷம் சென்றது. மறுவருஷமும் வந்தது. வருஷத்திற்குப்பின் வருஷங்கள் கழியலாயின. யுத்தத்திற்கு ஒரு முடிவும் ஏற்படவில்லை. எதிரிகளால் மேவாரைப் பூரணமாக ஜயிக்கவும் முடியவில்லை. சுதந்திரவீரன் பிரதாபஸிம்மன் சுதந்திரமாகவே இருந்தார்.

சுதந்திரத்தைக் காக்க பிரதாபஸிம்மன் பற்பல கஷ்டங்களைச் சகித்தார். ஒவ்வொன்றாக மேவாரின் மலைகளிலெல்லாம் வாசம் செய்தார். சிலசமயம் குகைகளில் நாட்களைக் கழித்தார். சிலசமயம் பயங்கரமான காட்டில் துஷ்ட மிருகங்களின் மத்தியில் வசிக்கவேண்டியிருந்தது. அவருடைய மனைவிக்கும் மக்களுக்கும்கூட அதேகதிதான். அவர்களும் எதிரி சேனைக்குப் பயந்து மலைக்குமலை திரிந்துகொண்டிருந்தார்கள். சிலசமயம் காட்டு பீல்களின் ஆதரவிலும் சிலசமயம் புலிக்காட்டு மலைக்குகையிலும் காலத்தைக் கழித்தனர். அந்த ராஜபுத்திரக் குடும்பம் அந்தச் சமயம் பட்டகஷ்டம் தவசிகள் கூடப் பட்டிருக்கமாட்டார்கள். குளிரிலும், மழையிலும், வெய்யிலிலும் அவர்களுக்கு உறைவிடம் அந்த மலைகள்தான். எல்லாவற்றையும் சகித்தனர். உணவைப்பற்றிய கஷ்டங்கள் சொல்லி முடியாது. சிலசமயம் வயிற்றுக்கு ஏதாவது கிடைக்கும்; சிலசமயம் ஒன்றுமே கிடைக்காது. சில தினங்கள் அவர்கள் காய் கிழங்குகளைத் தின்று பொழுதை ஒட்டுவார்கள். இந்த விதமாக அநேக கஷ்டங்கள் இருந்தபோதிலும் பிரதாபஸிம்மன் போர்புரிவதை விடவில்லை. ஆகையால்தான் மொகலாயர்களால் மேவாரை ஜயிக்க முடியவில்லை.

பிரதாபஸிம்மனின் வீரச்செயல்கள் பாதுஷாவின் காதுவரை எட்டியது. டில்லியில் வீட்டிக்கு வீடு பிரதாபஸிம்மனைப்பற்றி ஜனங்கள் பேசினார்கள். ஹிந்து முஸ்லீம் இரு வகுப்பாரும் பிரதாபஸிம்மனைப் புகழ்ந்தனர்

பராக்கிரமசாலியான அக்பர் அந்த க்ஷத்திரிய

வீரனின் போர்த்திறமையையும், தீரத்தையும் கேட்டு ஆச்சரிய மடைந்துபோனார். பாதுஷாவின் சேனாதிபதிகள் ஆச்சரியமடைந்தனர். டில்லி பொற் சிங்காதனத்திலமர்ந்தவர் தரித்திர நிலையிலிருந்த பிரதாப ஸிம்மனைப் புகழலானார். பாரதநாடு முழுதும் அவரைப் புகழ்ந்தது.

பிரதாபஸிம்மனின் வீரத்தைப்பற்றி நினைக்கும்போது பழைமையான பாரதநாடு நம் நினைவிற்கு வருகிறது. மஹாபாரதத்தில் வரும் மஹா வீரர்களின் நினைவு வருகிறது. பிரதாபஸிம்மன் ஏழு மகாரதர்களுடன் மட்டும் போரிடவில்லை. ஆனால் ஏழுகோடி மனிதர்களின் தலைவனான அக்பருடன் போர்புரிந்தார். இருபத்தைந்து வருஷ காலம் ஓய்வில்லாமல் தொடர்ந்து சுதந்திரத்தைக்காக்க போரிட்டார். இருபத்தைந்து வருஷமும் யுத்தத்தை நடத்திவந்து தன் உயிரைத் தியாகம் செய்தார். உயிருள்ளவரை சுதந்திரத்தை இழக்கவில்லை.

பிரதாபஸிம்மனின் வீர சரிதம் நாவலைவிட ஆச்சரியகரமானது. ஆனால் அது பொய்யல்ல! நாவலைப்போல் வெறும் கற்பனையல்ல. நம்பிக்கை இல்லாவிட்டால் கீழேயுள்ள கவிதையைப் படியுங்கள். அது நம்மால் எழுதப்பட்டதல்ல. பிரதாபஸிம்மனின் எதிரியான அக்பர் பாதுஷாவின் சபையிலிருந்த கான்கானா என்ற கவி இந்த ஏழை ஹிந்து வீரனின் பராக்கிரமத்தைப்பற்றி எழுதிவைத்தது. அதன் கருத்தைக் கீழே தருகிறோம்.

முடிமிசை மன்னர் போற்ற
முடிவிலாக் கீர்த்தி பெற்றாய்
அடிமையின் தளைகள் நேரா
தகற்றவே அறப்போர் செய்தாய்!

பொன் பொருள் செல்வம் இன்ப
போகமே துறந்தாய்—நாட்டின்
அன்பையே மனத்தில் கொண்டாய்
அரணியம் போந்து வாழ்ந்தாய் !
இருண்டிடும் மேகம் தன்னில்
இட்டொளி செய்மின் னல்போல்
புரண்டிடும் எதிரி சேனை
புகுந்துநீ அல்லல் செய்தாய் !
தாழ்மை வந்துற்ற போதும்
தலை வணங்காமல் நின்றாய்
வாழ்கஉன் கீர்த்தி வீரத்
திலகமே பிரதாப ஸிம்மா !

## XXI

## பரிசயமற்றவள்

போர் இடைவிடாமல் நடந்துகொண்டுதான் இருந்தது. மொகல் சேனையுடன் ராஜபுத்திர வீரர்கள் சண்டையிடாத நாளே இல்லை. ஒவ்வொரு வருஷமும் இம்மாதிரி பயங்கரமான போர்கள் நடந்துவந்தன. எதிரியின் சேனை ஈசல்போல் மலைகள் ; குகைகள், கிராமங்கள், சமவெளிகள் எங்கும் வந்துபரவினர். ஒவ்வொரு கோட்டையாகக் கைப்பற்றினர். ஆனால் பிரதாப ஸிம்மன் போராடிக்கொண்டுதான் இருந்தார். மேவாரைப் பூராவும் அவர்களால் ஜயிக்க முடியவில்லை.

ஒருநாள் மொகலாய சேனையுடன் நாள்முழுதும் போர் நடந்துகொண்டே இருந்தது. கணக்கற்ற எதிரிப்படை பிரதாபஸிம்மனை வந்து சூழ்ந்துகொண்டது. பிரதாபஸிம்மன் வீரத்துடன் போர் புரிந்தார். அவருடைய போர் ஆற்றலை கண்டு எதிரிகள் பிர

மித்துப் போயினர். யுத்தம் பகல் பூராவும் நடந்தது இரவும் நீடித்தது. ஆயினும் பிரதாபஸிம்மன் சற்றும் சளைக்கவில்லை,

நடுஇரவு ஆனதும் இருள்சூழ்ந்த அந்தவனத்தினின்றும் பலபில்கள் ஒரு மரப்பெட்டியை தூக்கிக்கொண்டு மலைமீது ஏறிச்சென்றனர். ஒருவர் முகத்தை ஒருவர் காணமுடியாதபடி இருள்பரவிக் கிடந்தது. கைக்குக்கை தெரியவில்லை. அந்தக் காரிருளில் பீமசந்திரனின் ஆட்கள் புதருக்குள்ளிருந்து அந்தப்பெட்டியை எடுத்துச்சென்று கொண்டிருந்தனர். அந்த இருளில் அந்த மலைப்பிரதேசத்தில் அந்தச் செய்கை பீல்களால் அன்றி வேறுயாரால் செய்யமுடியும்? அவர்கள் செல்லும்போது சத்தமே கேட்கவில்லை, பேசாமல் பெட்டியுடன் பீமசந்திரன் இருக்கும் கிராமத்திற்குள்வந்துசேர்ந்தனர். அருகே ஒருகுகை இருந்தது. அந்தக்குகையைப்பற்றி வாசகர்களுக்கு ஏற்கனவே தெரியும். பெட்டியை அங்கே வைத்துவிட்டு பீல்கள் சென்று விட்டனர்.

அந்தப்பெட்டியில் வேறொன்றும் இல்லை. முன்பு கூறப்பட்ட அதேகுஸுமகுமாரிதான் இருந்தாள். பல வருஷங்களாக நடக்கும் இந்தயுத்தத்தில் சூரியமஹலுக்கும் பல ஆபத்துக்கள் வந்தன. ராணியும் இதர ஸ்திரீகளும் பயமற்று நிம்மதியாக இருக்கக்கூடிய இடம் சூரியமஹலில் இல்லை. ஆகையால் துர்ஜயஸிம்மனைச் சேர்ந்தவர்கள் முதலிலேயே அதை விட்டு வேறு இடத்திற்குச் சென்றுவிட்டார்கள் அன்று யாரோ பரிசயமற்ற ஒரு வீரனின் உத்திரவுபடி குஸுமகுமாரி பீல்களால் அந்தக்குகைக்குக் கொண்டு வரப்பட்டாள்.

குகைக்குள் ஒருவிளக்கு எரிந்துகொண்டிருந்தது. அதன் வெளிச்சத்தில் குஸுமா ஆச்சரியத்துடன்பார்த்தாள். நடுத்தரவயதுள்ள ராஜபுத்திர ரமணி ஒருவள் அமர்ந்திருந்தாள். உட்கார்ந்திருந்தவள் நல்ல உயரம். கம்பீரமான தோற்றமும் கொண்டிருந்தாள். கழுத்தில் முத்துமாலையும் காதில் வைரமும் மணியும் ஜ்வலித்தன. அவளுடைய அழகையும் தோற்றத்தையும் பார்த்தால் அவள் ஏதோ ஒரு பெரிய இடத்து ஸ்த்ரீ என்றே தோன்றியது. ஆனால் கஷ்டத்தாலும், துக்கத்தாலும் அவள் கண்கள் ஒளி இழந்து காணப்பட்டன. முகம்வாடி இருந்தது. வயது முப்பத்தைந்து நாற்பதிற்குள் தான் இருக்கும். அவள் யார்? இவளை வாசகர்களுக்குத் தெரியாது. ஆனால் மேவார் வாசிகள் இவளை நன்றாக அறிவார்கள்.

குஸுமா சூரியமஹலை விட்டுப் புறப்பட்டபின் எந்த ஸ்திரீயையும் சந்தித்ததில்லை. பேசியதும் இல்லை. பீல்களின் வாசஸ்தலத்திற்குவந்து அவள் ஆச்சரியமும் பயமும் அடைந்திருந்தாள், அந்த விளக்கு வெளிச்சத்தில் அந்த அழகிய ராஜபுத்திர ஸ்திரீயின் முகத்தைக் கண்டபிறகு குஸும குமாரியின் உள்ளத்தில் கொஞ்சம் தைரியம் உண்டாயிற்று. நம்பிக்கையும் பிறந்தது.

அவள் மெள்ள அந்தப்பரிசயமற்ற ரமணியின் அருகில் சென்று அவள் பாதங்களைத் தொட்டு வணங்கி நான் எங்கேவந்திருக்கிறேன்? யாரை தரிசித்துக் கொண்டிருக்கிறேன்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. தாங்கள் ஏதோ பெரியஇடத்து கிருஹலக்ஷிமியைப்போல் காணப்படுகிறீர்கள். இந்த

யுத்தகாலத்தில் ஆபத்தின் காரணமாக இந்தக் குகையை ஆசிரயித்திருப்பீர்கள்! ஒருகால் இந்த அறைதையின் மேல்தயை வைத்து என்னை இங்கு கொண்டுவந்திருப்பீர்கள் என்று எண்ணுகிறேன். தாங்கள் யாராக இருந்தாலும்சரி, நான் தங்களை அடைக்கலமென்று வந்திருக்கிறேன். எனக்குத் தாங்கள் புகலளிக்க வேண்டும். குஸுமகுமாரி புகலிட மற்ற அகதி! இவளைத் தாங்கள் தங்கள் மகளாகக் கருதவேண்டும், என்ருள்.

குஸுமகுமாரியின் கண்களில் ததும்பும் கண்ணீரும், அவளுடைய வருத்தமிகுந்த வார்த்தைகளும், அந்த ஸ்த்ரீயின் உள்ளத்தை இளகச் செய்து விட்டது. பரிசயமற்ற அந்த ஸ்த்ரீ அன்புடன் குஸுமாவின் கரங்களைப் பற்றித் தன்னருகே அமர்த்தி அவள் கண்ணீரைத் துடைத்து 'குழந்தாய், குஸுமா, இன்று உன்னுடைய நிலைமை என்னவோ அதுதான் என்னுடையதும்! இந்தக் குகை பீல்களுடையது! அவர்கள்தான் ஆபத்துக் காலத்தில் நமக்கு இடமளித்திருக்கிருர்கள். அவர்களே நம்மைக் காக்க முன்வந்திருக்கிருர்கள். எதிரிகளின் கையிலின்றும் தப்ப என்னை ஆபத்தில்லாத இந்த இடத்திற்கு சில நாட்களுக்குமுன் அவர்கள் கொண்டுவந்தார்கள். அவர்களே உன்னையும் காப்பாற்ற இங்கு கொண்டு வந்திருக்கிருர்கள். நீ விரும்பினுல் என்னுடனேயே இருக்கலாம். என் குழந்தைகள் சௌக்கியமாக இருந்தால் நீயும் சௌக்கியமாக இருப்பாய். உனக்கு ஆறுதலளிக்க இதைவிட அதிகமாக வேறு என்ன சொல்ல முடியும்?' என்ருள்

அந்த அன்பு நிறைந்த இன்சொற்களைப் பேசின

ரமணி யார்? வெகு நாட்களாகக் குஸுமா அம்மாதிரியான இன்சொற்களைக் கேட்கவில்லை. வெகு நாட்களுக்குப் பிறகு அந்த மதுரமான சிநேக வார்த்தைகளைக் கேட்டு குஸுமாவின் இதயம் உருகியது. அவள் கண்கள் கண்ணீரைச் சொரிந்தன. அந்தக் கண்ணீர்ப் பெருக்கு பரிசயமற்ற ஸ்திரீயின் இரு பாதங்களையும் நனைத்தது.

பரிசயமற்ற ரமணியின் இதயத்தில் தயை பொங்கியது. அவள் பற்பல ஆறுதல்களைக் கூறி 'பெண்ணே, தைரியமாக இரு, கலங்காதே. என் கணவர் மேவாரில் ஒரு பிரசித்த வீரர். இந்த யுத்தம் முடிந்ததும் அவர் உனக்கு உதவி செய்வார். நீ பயப்படவேண்டாம்' என்றாள்.

# XXII

## பவிஷ்யவாணி

பரிசயமற்ற பெண்மணி குஸுமாவுடன் பேசிக் கொண்டிருந்த சமயம், புலிக்காட்டு மலைத் தபஸ்வினி திடீரென்று அந்த பீல்களின் குகையில் தோன்றினாள்.

தபஸ்வினி முன்வந்து கம்பீரமான குரலில் 'தேவி பீமசந்திரனின் இந்த இருட்குகை தங்கள் வருகையால் புனிதமான பிரகாசமடைந்தது. அந்தப் பிரகாசத்தைக் காணவே நான் வந்தேன். தலை முக்காட்டை அகற்றுங்கள் தபஸ்வினியின் முன் முக்காட்டுக்கு அவசியம் இல்லை' என்றாள்.

மேவாரின் மகாராணி தலை முட்டாக்கை அகற்றினாள். அவளுடைய முகமண்டலத்தின் ஜோதியினால்

அந்தக்குகை ஒளி கொண்டது. அவளுடைய அகண்ட நெற்றியில் ஒரு வைர ஆபரணம் ஜ்வலித்துக்கொண்டிருந்தது. கழுத்தில் ஒரு முத்துமாலை அசைந்து கொண்டிருந்தது. தபஸ்வினிக்கு உசிதமான மரியாதைகள் செய்து மகாராணி அவளுடன் வார்த்தையாடலானாள்.

'தபஸ்வினித் தாயே, தங்கள் தரிசனத்தால் இன்று சாந்தியடைந்தேன். ஆபத்துக் காலத்திலெல்லாம் வெகு நாட்களாகத் தாங்களே எங்களுக்குச் சகாயம் செய்து வருகிறீர்கள். மகாராணா பல தடவை விபத்துக்களை சகித்திருக்கிறார். நானும் பல சங்கடமான தினங்களைக் கண்டிருக்கிறேன். வெகு நாட்களாக மகாராணாவைத் தரிசிக்கவில்லை. யுத்தத்தினின்றும் அவர் சிறிதுகூட ஓய்வெடுத்துக் கொள்ள முடியவில்லை. இரவு பகல் யுத்தத்திலேயே மூழ்கிக்கிடக்கிறார். அதன் காரணமாக மனைவி மக்களைக் காணக்கூட அவருக்குச் சந்தர்ப்பம் இல்லை. நான் குழந்தைகளுடன் ஒரு மலைக் கோட்டையிலிருந்து மற்றொரு மலைக் கோட்டையாகத் திரிந்து கடைசியில் சில தினங்களாக பீல்களின் இந்தக் குகையில் வசிக்கிறேன். இங்குகூட நாங்கள் ஆபத்தின்றி இருக்கவில்லை. ஆபத்தை எதிர்பார்த்துக் கொண்டே இருக்கிறோம். நாங்கள் இருக்குமிடம் அறிந்து மொகலாயசேனை இந்தப் பக்கம் வருவதாக அறிகிறேன். இங்கிருந்து சிறிது தூரத்தில் மலைச் சமவெளியில் மகாராணாவுடன் மொகலாயர்கள் சண்டையிட்டுக் கொண்டிருக்கின்றனர். பயங்கரமான போர் நிகழ்ந்து வருகிறது. இன்னும் அந்தப் போர் முடிவடையவில்லை. முஸல்மான்களின் யுத்த

கோஷம் இன்னும் கேட்டுக் கொண்டுதான் இருக்கிறது. என் மனத்திற்கு மிகவும் கவலையாக இருக்கிறது. அம்மா, தாங்கள் மகாராணுவின் க்ஷேமச் செய்திகளைக் கூறி என் கவலையை அகற்றுங்கள்' என்ருள் ராணுவின் மனைவி.

'மகாராணி, தாங்கள் கலங்காதிர்கள், சற்றும் கவலைவேண்டாம், பார்வதி தேவி தங்கள் பதியை ரக்ஷித்துக் கொண்டிருக்கிருள். அவர் சௌக்கிய மாக இருக்கிருர்' என்ருள் தபஸ்வினி.

'தாயே, தங்கள் வார்த்தையால் நான் தேருதலடைந்தேன், என் மனக்கவலை அகன்றது. தங்கள் வாய்க்குச் சர்க்கரை போடவேண்டும்! மேவாரின் ராணி ஆபத்திற்கு பயப்படவில்லை. அவள் தன்னைப் பற்றியும் பார்க்கவில்லை. ஏனென்ருல், ஆபத்துக்களை அவள் துச்சமாக மதித்து, சத்துருக்களை சட்டை செய்யாமல் ஸிஸோதியர்களின் பிராசீன தர்மத்தை அனுசரித்து உயிரைத் தியாகம் செய்து மானத்தைக் காத்துக்கொள்ள அறிவாள். என்னைப்பற்றி எனக்கொன்றும் கவலை இல்லை. கவலை எல்லாம் மகாராணுவைப் பற்றியும் அவருடைய குழந்தைகளைப் பற்றியும்தான். மேவாரில் ராஜகுமாரர்கள் ஆபத்தின்றி இருக்கக்கூடிய இடம் ஒன்றுகூட இல்லை. மேவாரின் அரசகுமாரர்கள் மொகலாயர்களிடம் கைதியாவார்களா? மேவாரின் சரித்திரம் இன்ருேடு முடி வந்துவிடப் போகிறதா?"

குழந்தைகளின் எதிர்காலச் சங்கடங்களை நினைத்து ராணியின் வீர உள்ளம் நடுங்கியது. அவளுடைய ஒளி பொருந்திய இரு விழிகளிலும் கண்ணீர் பெருகியது.

அவளுடைய நிலைமையைக் கண்டு குஸுமா தன் துக்கங்களை யெல்லாம் மறந்தாள். கண் கொட்டாமல் மகா ராணியின் பக்கம் பக்தி பாவத்துடன் நோக்கலானாள். மகா ராணியின் கண்களில் கண்ணீரைக் கண்டு குஸுமாவினால் தன் கண்ணீரை அடக்க முடியவில்லை.

அதைப் பார்த்து தபஸ்வினி, இவர்களுக்கு ஆறுதலாக 'ஸிஸோதியா வம்சத்தில் ஒரு வீரன் ஜீவித்துள்ள வரையில் மேவாரின் சரித்திரம் முடிவடைய முடியாது. மகா ராணி! தாங்கள் பயப்பட வேண்டாம். மேவாரின் ராஜ குமாரர்கள் பயமற்று நிம்மதியாக இருக்க பத்திரமான இடம் இருக்கிறது. பீல் மக்கள் ஸிஸோதியா ராஜபுத்திரர்களுக்கு நம்பிக்கை வாய்ந்த நண்பர்கள். மகா ராணா உதய ஸிம்மனுக்கு இதே பீம சந்திரனின் தந்தை பாதுகாப்பளித்தான். இந்தக் குடிசையில் ஒரு சுரங்கம் இருக்கிறது. சூரியனின் ஒளிகூட இங்கு எட்டிப்பார்க்க முடியாது. அங்கிருந்து சத்தம் போட்டால் வெளியே கேட்காது. சுரங்கத்தின் வாசல் அடைக்கப் பட்டிருக்கிறது. அதைத் திறக்கும் வகை என்னைத் தவிர வேறு யாரும் அறியார்கள். மகா ராணாவின் குழந்தைகள் ஆபத்தின்றி அந்தச் சுரங்கத்தில் இருக்கலாம். அந்தச் சுரங்கம் எங்கே இருக்கிறதென்பதையும் நான் அறிவேன். அன்னிய சத்துருக்களுடன் நடக்கும் போர் சீக்கிரம் முடிவடையும்' என்றாள்.

'தபஸ்வினி தேவி, தங்கள் இன் சொல்லால் என் மனம் மிக்க தைரியம் அடைந்து விட்டது. என் கலக்கம் நீங்கியது. ராஜபுத்திரர்கள் யுத்தத்திலோ

ஆபத்திலோ அதைரிய மடைவதில்லை. சத்துருக்களின் பயத்தால் அவர்கள் இதயம் நடுங்குவதில்லை. நான் வீர பத்தினி ஆயினும் பெண் தானே! ஆகையால் குழந்தைகளின் நிலைமையை நினைக்கும்போது உள்ளம் கலங்குகிறது. என் குழந்தைகளுக்கு ஒரு வித ஆபத்துமின்றி அவைகள் ஜாக்கிரதையாக இருக்க முடியுமானுல் இந்த யுத்தம் யுக யுகாந்தரங்கள் வரை நடந்தாலும் நான் கவலைப்படமாட்டேன். மேவாரின் ராணு யுத்தத்தை சிறிதும் பொருட்படுத்தவில்லை. அவர் போரைப் பற்றி ஒரு பொழுதும் பயந்ததே இல்லை. அவருடைய பத்தினியான அடியாளும் பயப்படவில்லை. நான் இந்தக் குகையையே அரண்மனையாகப் பாவிப்பேன்' என்ருள் ராணி.

பீல்களின் இந்தக்குகையில் ராஜகுடும்பங்களுக்கு யாதொரு துன்பமும் நேராது. துன்பம் ஏன் நேரும்? இந்தக் குகைதான் ஒரு பிரதானமான ராஜபுத்திரவீரனின் புகலிடமாக இருக்கிறதே, என்ருள் தபஸ்வினி.

'நான் அதையும் கேள்விப்பட்டேன். அந்த ராடௌர் வீரன்தான் பிமகட் கோட்டையில் எங்களைக்காப்பாற்றினுன். அவனேதான் நாங்கள் ஆபத்தின்றி இருக்க பீல்களின் இந்தக் குகைக்கு எங்களைக்கொண்டுவந்தான். வீரனைப்பற்றி விபரமாய் அறிய ஆவல் எழுகிறது. என்ன காரணத்தால் அந்த ராஜபுத்திரன் வீடுவாசல்களை விட்டுச் சிறு வயதுமுதல் இந்தக் குகையில் வசிக்கிருன் என்று தெரியவில்லை. ஏதாவது கடினமான சபதத்தை நிறைவேற்ற இந்தக்குகையில் வசிக்கிருனு? இவைகளை அறிய விருப்பம் உண்டு. ஆனுல் எங்களுக்கு வந்

திருக்கும் விபத்தில், அவனைப்பற்றி விசாரிக்கக்கூட அவகாசம் இல்லை. அவன் தன்னை அறிமுகம் செய்து கொள்ளவும் விரும்பவில்லை. ஆனால் இந்த ஆபத்துக் காலத்தில் எங்களைக் காப்பாற்றிய அந்தவீரத்தியாகியை ஒரு பொழுதும் மறக்கமாட்டோம். மகாராணாவும் அதை மறக்கமாட்டார், என்றாள் ராணி.

குஸுமாவின் உள்ளம்படபடத்தது. அவள் பேசாமல் உட்கார்ந்திருந்தாள். மகாராணி குறிப்பிடும் ராடௌர் வீரன் அவன் தானோ? அந்த ராடௌர் குலபூஷணம் தன் பிதுரார்ஜிதக் கோட்டையைவிட்டது முதல் இந்தப் பயங்கரமான குகையிலிருந்தா காலம் கழிக்கிறான்?,

இதற்குள் தபஸ்வினி தேவி 'அந்த வீரனின் நீண்ட கதையை இன்னொருநாள் கூறுகிறேன். இன்றுமன்னியுங்கள். ஆனால் ஒன்றுமாத்திரம் சொல்லுகிறேன். பீல்களால் வளர்க்கப்பட்ட தேஜ்ஸிம்மனைப் போல் பராக்கிரமமும் நம்பிக்கையும் பொருந்திய வீரன் மகாராணாவிடம் வேறுயாரும் இல்லை. தேஜ்ஸிம்மனின் கையில் வாள் இருக்கும்வரை, அவன் உடலில் ரத்தம் உள்ளவரை, உங்களுக்கு ஓர் ஆபத்தும் நேரிடாது, என்றாள்.

குஸுமாவின் உடல் ஒரு குலுங்கு குலுங்கியது. மயிர்க்கூச்செறிந்தது. உள்ளத்தில் வர்ணிக்க முடியாத ஆனந்த அலைகள்வந்து மோதின.

'ஈச்வரன் தேஜ்ஸிம்மனை காக்கட்டும்! அம்மா ராஜபக்தனான அந்த வீரபுருஷனின் உதவிக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்? என்றாள் ராணி.

குஸுமாவின் மனம் மீண்டும் யோசனையில் சிக்

கியது. நெகிழ்ச்சியால் உள்ளம் பதறியது. அவள் தபஸ்வினியின் வாயைப்பார்த்துக் கொண்டிருந் தாள்.

'மஹாராணி! அந்த தேஜஸ்ஸிம்மன் ஒரு பெண் ணுக்கு வாக்குறுதியளித்தான். அன்று முதல் அவள் அவனையே கணவனுக வரித்தாள், அவள் உன்னிடம் புகலடைந்திருக்கிருள். அந்தப் பெண் குஸுமகுமாரிக்கு நீங்கள் இடமளியுங்கள். அவளைப் போன்ற நம்பிக்கையுள்ள பெண் வேறுயாரும் தங் களுக்குக் கிடைக்க மாட்டாள். குஸுமா முக் காட்டை அகற்று, தபஸ்வனியிடம் சங்கோசப்பட வேண்டிய அவசியமில்லை. போ, ஸிஸோதியா வம்சம் போற்றத்தக்கதாய் மேவாரின் ராணியின் சர ணத்தை ஏற்றுக்கொள், என்ருள்.

ஆனந்தம், ஆச்சரியம், வெட்கம், சங்கை, இவை களால் மோதப்பட்டவளாய் கண்ணீர் நிறைந்த கண் களுடன் குஸுமா மகா ராணியின் பாதங்களில் சிரம் வைத்து நமஸ்காரம் செய்தாள்,

மகாராணி குஸுமாவைத்தூக்கி அவளைச் சாந் தப்படுத்தி 'பெண்ணே குஸுமா! நீ என் மகள் போன்றவள். என்னை உன் தாயாகபாவித்துக்கொள். என் குழந்தைகள் சௌக்கியமாக இருந்தால் நீயும் இருப்பாய் என்று முன்பே நான் உனக்கு வாக்களித் திருக்கிறேன். இப்பொழுதும் அதே ஆறுதலை கூறப் போகிறேன்!' என்ருள்.

அதன்பின் மகாராணி தபஸ்வினியை நோக்கி யுத்தத்தைப்பற்றிய தகவல்களைக் கேட்டாள்.

அப்பொழுது தபஸ்வினி 'மகாராணி, தாங்கள் கவலையடைய வேண்டாம். மேவாரின் விபத்துக்கள்

சூழ்ந்த இரவுக்கு சீக்கிரம் விடிவு உண்டு. வீரத்திற்கும் தன்னம்பிக்கைக்கும் ஜயம் வந்தே ஆகவேண்டும்!' என்றாள்.

'எப்படி ஸிஸோதியா வம்சம் வெற்றியடையும்? அதை நான் எப்படியறிய முடியும்?'

'அரசனுக்கு பலம் ஆயுதமும் யோசனையும், பொருளும்தான். இதனால்தான் அரசன் ஜயிக்க வேண்டும். ஆயுதங்களால் ஆகும். காரியங்களை ராணா செய்கிறார். பொருள் பலமும் யோசனையும் இந்த சமயம் பாமாஷாவினால் ஆகவேண்டி இருக்கிறது. அவருடைய யோசனையாலும் முயற்சியாலும் மேவார் வெற்றிபெறும்.'

'தாயே, தங்களுடைய வார்த்தையினால் என் மனம் மெத்த தைரியமடைந்தது. தங்களிடம் இன்னொன்று கேட்கிறேன்.'

'என்ன கேட்க விரும்புகிறீர்களோ கேளுங்கள் தபஸ்வினி அதற்கு உசிதமான பதிலளிப்பாள்!.

'தபஸ்வினி தேவி, நான் தங்கள்போன்றவர்கள் மூலமாக டில்லி சிம்மாதனமும், பாரதவர்ஷமும் ராஜபுத்திரர்கள் அதிகாரத்திலிருந்ததாகக் கேள்விப் பட்டிருக்கிறேன். பிருதிவிராஜன் ஒருசமயம் டில்லி அதிபதியாக இருந்தார். ஐம்பது வருஷங்களுக்கு முன் ராணா ஸங்கிராமஸிம்மன் டில்லியைத் தம் அதிகாரத்திற்குக் கொண்டுவரப் போரிட்டார். டில்லி மீண்டும் ராஜபுத்திரர் வசமாகும்படியான பாக்கியத்தை நாங்கள் பெறுவோமா? பாரதநாட்டின் எதிர்காலம் எப்படி இருக்கிறது என்பது ஒன்றும் தெரியவில்லை. கடைசியில் மொகலாயர்கள் தான் ஜயிப்பார்களா?' என்றான்.

தபஸ்வினி வெகுநேரம்வரை யோசனை செய்தாள். பிறகு கம்பீரமான குரலில் 'நான் ரொம்ப கிழவி. என் பார்வை மழுங்கிவிட்டது. எதிர்கால வானம் வெகுதூரம் தெரியவில்லை. அந்தகாரத்தின் மேல் கோர அந்தகாரமாக இருக்கிறது. ராஜபுத்திரர்கள் வெகுநாட்களாக மொகலாயர்களுடன் போரிட்டு வருகிறார்கள், அதன்பின் தெற்கே மகாராஷ்டரர்களுடன் போர்புரியக்கூடும்! அதன்பின்...இதென்ன? மஹா சமுத்திரத்தில் பால்போன்ற அலைகள் ஒன்றன்பின் ஒன்றாக பாரதவர்ஷம் பூராவும் வந்து வியாபிப்பதைப்போல் தோன்றுகிறது. அதன் பின்னால் இருப்பது ஒன்றும் சரியாகத் தென்படவில்லை. கிழவியின் கண்களுக்கு அவ்வளவுதூரத்தில் இருக்கும் வஸ்துவைக்காணச் சக்தி இல்லை' என்றாள்.

## XXIII

## சூர்யமஹல் வீழ்ச்சி

ராஜ குடும்பத்தின் நிலைமை என்ன? அவர்கள் எதற்காக பீல்களின் குகையை அடைந்தார்கள்? ஆகியவைகளைப் பற்றிச் சுருக்கமாக இங்கே சொல்ல வேண்டியது அவசியம்.

மகாராணா பிரதாபஸிம்மன் மொகலாயருடன் போர் செய்வதற்காக அரண்மனையை விட்டுத் தன் குடும்பத்துடன் மலைக் குகைகளில் வசிக்கலானார். மேவாரின் ராணியும் தன் கணவனைப் போலவே தேச பக்தி கொண்டவள். அவள் தேசத்தின் பொருட்டு சகிக்கொணா கஷ்டங்களையெல்லாம் சகித்தாள். அவர்கள் ராஜ போகங்கள் யாவற்றையும்

துச்சமாக எண்ணிக் குகையை அரண்மனையாக எண்ணினார்கள். ராணி இரவில் கற்பாறைகளில் உறங்கினாள். தன் கையால் சமையல் செய்து தன் குழந்தைகளுக்கு இட்டாள். ஆபத்து வந்ததும் மலைக்கு மலை, குகைக்குக் குகை, ஓடி ஒளிந்தாள். மலைகளில் ஏறி இறங்கும் பெரும் கஷ்டங்களையும் சகித்தாள். ஆனால் எதிரியிடம் சமாதானம் செய்து கொள்ளும்படி கணவனிடம் ஒரு நாளும் சொன்ன தில்லை. குளிர் காலத்தில் தீ மூட்டி குழந்தையை மார்போடு அணைத்துக் கொண்டு இரவு முழுதும் தூங்காமலே கழிப்பாள். சில சமயம் மழை வந்து விடும். மழைத் தண்ணீர் குகைகளில் புகுந்துவிடும். நிற்க இடமின்றி தவித்திருக்கிறாள். சில சமயம் வெறும் ரொட்டியையும், சில சமயம் காய் கனிகளை யும் புசித்துக்'காலம் கழித்திருக்கிறாள். சில சமயம் சாப்பாட்டுக்கு ஒன்றுமில்லாமல் குழந்தைகள் பசி யால் துடிப்பதைக் கண்டு மனம் துடித்திருக்கிறாள். சில சமயம் தயாரான சமையலை எதிரிகள் வருகிறார் கள் என்ற பயத்தினால் அப்படியே விட்டுவிட்டுப் போய் பசியுடன் கஷ்டப்பட்டிருக்கிறாள். இவ்வித மான கஷ்ட தசையை அடைந்த போதிலும் அவள் மொகலாயர்களிடம் சமாதானம் செய்துகொள்வதை உசிதம் என்று எண்ணவில்லை.

தன் பட்டமகிஷியும் குழந்தைகளும் இவ்விதக் கஷ்டத்திலிருந்தும் மகாராணா மொகலாயர்களுடன் போரிடுவதை விடவில்லை. யுத்தத்தில் சௌரியம் காட்டினார். ஆனால் மொகலாயரிடம் கணக்கற்ற சேனை இருந்தது. அவர் எவ்வளவு தூரம் போரிட்டு மீளமுடியும்? மெள்ள மெள்ள துருக்க சேனை

மேவாரின் பிரதேசங்களை யெல்லாம் கைப்பற்றிக் கொண்டது. அவ்வளவு பெரிய மேவார் தேசத்தில் பயமற்று இருக்க பிரதாபஸிம்மனுக்கு இடம் இல்லை. கடைசியில் அவர் சந்தாவத் துர்ஜயஸிம்மனின் சூரிய மஹாலுக்குத் தன்குடும்பத்தை அனுப்பிவிட்டுத்தான் சிறிது சைனியத்துடன் சத்துருக்களை ஒளிந்து ஒளிந்து தாக்கலானர்.

ராஜ குடும்பத்தார் வசிப்பதற்காக துர்ஜயசிம்மன் தனது அரண்மனையைக் காலிசெய்து கொடுத்தான். அவர்களுக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தான். ஆனல் ராஜகுடும்பத்தார் சென்ற விடமெங்கும் ஆபத்தும் அவர்களைத் தொடர்ந்து சென்றது. திடீரென்று கணக்கற்ற எதிரி சேனை சூரியமஹாலை நாற்புறமும் சூழ்ந்துகொண்டது. மேவாரின் முக்கியமான தலைவர்கள் பிரதாபஸிம்மனுடன் இருந்தனர். மீதி இருந்தவர்கள் சூரிய மஹாலைக் காப்பாற்றலானர்கள்.

தேஜ்ஸிம்மன் சூரியமஹாலிலேயே இருந்தான். ஆபத்து வந்துவிட்டால் ராஜபுத்திரர்கள் பரஸ்பரம் சகோதரர்களாகிவிடுவது வழக்கம். துர்ஜயஸிம்மன் உதார குணத்துடன் தேஜ்ஸிம்மனுக்கும் அவனைச் சேர்ந்த ராடௌர் வீரர்களுக்கும் சூரியமஹாலில் தங்க இடமளித்தான். ஏன் அளிக்கமாட்டான்? தேஜ்ஸிம்மன் கீர்த்திபெற்ற ராஜபுத்திர வீரன்! வஞ்சனை என்பதை அறியாதவன். அரசனின் காரியத்திற்கென்று கோட்டைக்குள் நுழைந்திருக்கும் சமயம் அவன் ஒருகாலும் தன் கருத்தை நிறைவேற்றிக் கொள்ளமாட்டான். சத்துருவின் கோட்டையில் சத்துருவின் சேனை மத்தியில் தேஜ்ஸிம்மன் தன்

சிறு சைனியத்துடன் பயமற்று இருந்தான். துர்ஜய ஸிம்மனும் ராஜபுத்திரன். அன்னியருடன் போர் புரியும்பொழுது தேஜ்ஸிம்மனுக்கெதிராக ஒரு போதும் வாள் எடுக்கமாட்டான்.

தேஜ்ஸிம்மனும் துர்ஜயஸிம்மனும் சாதாரண மான வீரர்கள். அந்தசமயம் இரு வீரர்களும் பரஸ் பரம் ஒன்றுசேர்ந்து, அதி பராக்கிரமத்துடன் வல் லமை காட்டலானார்கள். எந்தப்பக்கம் ஆபத்தை எதிர்பார்த்தார்களோ, எந்தப்பக்கம் எதிரி ஆக்கிர மிப்பான் என்று எதிர்பார்த்தார்களோ அந்தப்பக் கம் இருவரும் சென்று எதிர்த்துப் போர்புரிந்து கோட்டையைக் காத்தனர்.

ராடௌர்களும் சந்தாவத்களும் வீரத்தில் ஒரு வரைவிட ஒருவர் சிறந்தவர்கள். ஒருநாள் எதிரிகள் இரவில் கோட்டையின் ஒரு வாயிலை உடைத்துக் கொண்டு உள்ளே பிரவேசிக்க வழி செய்தார்கள், அந்தசமயம் தேஜ்ஸிம்மன் பொறுக்கி எடுத்த தனது வீரர் சிலருடன் திடீரென்று சத்துரு சேனையின்மேல் பாய்ந்து பிரசண்ட சாகசத்துடன் அவர்களைத் தடுத்துவிட்டான், தன்னுடைய ஒப்பற்ற வீரத்தால் சத்துருக்களைச் சின்னாபின்னமாக்கினான், பிறகு வந்து கோட்டையின் வாசலைத் தற்காலிகமாக மூடினான். அவன் சரீரம் ரத்தத்தால் நனைந்தொழுகியது. அவ னுடைய வீரத்தைக் கண்டு கோட்டையிலுள்ளவர் கள் ஜயகோஷம் செய்தனர்.

துர்ஜயஸிம்மன் தேஜ்ஸிம்மனின் வீரத்தைக் கண்டான். அவனுடைய ஜயகோஷத்தைக் கேட் டான். உடனே கோட்டைக் கதவுகளைத் திறக்கச் சொல்லி இருநூறு சந்தாவத்வீரர்களுடன் மொகல்

சேனையை ஆக்கிரமித்தான். அவனுடைய வேகத்தை எதிர்த்து நிற்க மொகலாயரால் முடியவில்லை. துர்ஜயஸிம்மன் உன்மத்தம் பிடித்தவனைப்போல் போரிடுவதைக் கண்ட துருக்க சைனியம், மலையைவிட்டுக் கீழிறங்கி வழிகண்ட இடமெல்லாம் உயிர் தப்பினோமென்று ஓடினார்கள் சத்துருக்களை ஜயித்து சந்தாவத் வீரன் மீண்டும் கோட்டைக்குள்வந்து வாசலை மூடினான். சந்தாவத்களின்வீர கோஷமும் கோட்டையில் எதிரொலி செய்தது.

இந்தவிதமாக ராடௌர்களும் சந்தாவத்களும் பரஸ்பரம் சிநேகத்துடன் அதிதைரியமாய் போர் புரியும்வேகத்தைக்கண்டு எதிரிகளின்கர்வம் குலைந்து விட்டது.

இருவரிடையேயும் வம்சபரம்பரையாக விரோதமிருந்தபோதிலும் அப்பொழுது பார்ப்பவர்கள் யாரும் அவர்களிடையே விரோதம் இருக்கிறது என்றுகூறவே முடியாது. இரவில் எழுந்து இருவீரரும் சந்திரவெளிச்சத்திலோ, அல்லது தீப்பந்தங்களின் வெளிச்சத்திலோ கோட்டைமீது உலாவுவார்கள். அவர்கள் லட்சியங்கள் எல்லாம் எதிரிகளின் ஆக்கிரமிப்பில்தான். இருவரும் தங்கள் சைனியத்திற்கு உற்சாகமூட்டுவார்கள். சத்துருக்களின் அஜாக்கிரதையைக்கண்டு அவர்களைத்தாக்கிச் சின்னபின்னமாக்குவர். யுத்தத்தில் இருவீர சகோதரர்கள் போல ஒருவரை ஒருவர் காத்து நின்றனர்.

இருவரும் முன்னேற முயச்சிப்பார்கள். இருவரும் ஒருவரைமிஞ்சி ஒருவர் வீரம்காட்டுவார்கள். சத்துருக்களை விரட்டி இருவரும் ஒன்றாகக்கோட்டைக்குத்திரும்புவார்கள். இருவரும் ஒரே இடத்தி

லமர்ந்து ஏதோ அகப்பட்டதை உண்பார்கள். இருவரும் கோட்டையில் பயமின்றி உறங்குவார்கள்.

ராஜபுத்திரர்களின் சரித்திரத்தைப் படித்தால் ஆதிமுதல் அந்தம்வரை கபடமோ சத்தியபங்கமோ எங்கும் அகப்படாது. கொடிய சத்துருக்களிடத்தும்கூட அவர்கள் முறைதவறிய யுத்தமோ நம்பிக்கைத்துரோகமோ செய்ததில்லை. பெரிய பெரிய சக்ரவர்த்திகளின் வார்த்தைகளில் வித்தியாசம் உண்டாகும்; ராஜி ஒப்பந்தங்கள் அலட்சியம் செய்யப்படும் ஆனால் ராஜபுத்திரர்கள் சத்தியத்தை அவமானம் செய்து யாரும் கண்டதில்லை.

மாதங்கள் கழிந்தன. எதிரிசேனை பெரிய பெரிய கடுமையான கஷ்டங்களைச்சகித்துக்கொண்டு கோட்டையை மீண்டும் சூழ்ந்தது. சூரியமஹலில் உணவுப் பொருள்கள் நாளுக்குள் குறையலாயின். எல்லோருடைய அபிப்பிராயத்தின்பேரில் ராஜகுடும்பம் இனி அங்கு இருப்பது சரியல்லஎன்று தீர்மானிக்கப்பட்டது. துர்ஜயஸிம்மன் முதலியவீரர்கள் அரைவயிறு சாப்பிட்டு உயிர்தரித்துக் கோட்டையைக்காத்து வந்தனர்.

மனிதசக்தியால் இயன்ற அளவு ராஜ புத்திரர்கள் முயற்சி செய்தார்கள், ஆனால் உணவு இல்லாமல் உயிர்வாழ்வதென்பது மனிதசக்திக்குப் புறம்பானது. கடைசியில் சூரியமஹலின் வாசல் உடைப்பட்டது. மொகலாய சேனையும் உள்ளே நுழைந்தது கோட்டைக்குள் ராஜபுத்திரர்களும் மொகலாயர்களும் பயங்கரமான போர்புரிந்தார்கள். இருதரப்பாரும் உபயோகித்த ஆயுதங்களை வர்ணிப்பதென்பது இயலாதகாரியம். ராஜபுத்திரர்கள் மரணத்தை

எதிர் நோக்கி மானத்தைக்காக்க, போர்வெறி கொண்டு யுத்தம்செய்ததை சரித்திரத்தின்ஒவ்வொரு பக்கத்திலும் காணலாம். ராஜபுத்திரர்கள் அதிதீரத்துடன்தான் போரிட்டனர். ஆனால் பத்துபேருக்கு முன் ஒருவன் என்ன செய்யமுடியும்? அவர்களுடைய கணக்கற்ற சேனைமுன் ஒருசிறு சைனியம் போராடி, தங்கள் எண்ணிக்கை குறையக்குறையப் பின்வாங்கலானார்கள், வெகுநேரம்வரை கோட்டைவாசலில் போர் நடந்தது. பிறகு அரண்மனையின் சிம்மவாசலுக்குள் வந்துசேர்ந்தனர். துப்பாக்கிப்புகையாலும் ஜனங்களின் கூக்குரலாலும் சூரியமஹல் அல்லோல கல்லோலப் பட்டது. சில ராஜபுத்திரர்கள் தான் எஞ்சினர். ஆயினும் உயிரின் மேலுள்ள ஆசையை விட்டுச் சத்துருவுடன் போரிட்டு அரண்மனையைக் காக்கமுனைந்தனர்.

அரண்மனையின் ஓர் அறையில் துர்ஜய ஸிம்மனும் தேஜ்ஸிம்மனும் சந்தித்தார்கள். இருவர் கையிலும் வாள் இருந்தது. இருவரும் ரத்தத்தில் நனைந்திருந்தனர். தேஜ்ஸிம்மன் சிறிது யோசித்துவிட்டு, துர்ஜயசிங் நீங்கள் ராடௌர்களின் வீரத்தைக்கண்டீர்கள்; நாங்களும் சந்தாவத்தின் வீரத்தைப்பார்த்தோம். இனிப்போரிடுவதுவீண். நாம் இந்தப்போரில் உயிரிழப்பது வீணாகும். நாம் இன்றைய யுத்தத்தில் தப்பித்துக்கொண்டால் எதிர்காலத்தில் மகாராணாவுக்கு இன்னும்பல காரியங்கள் செய்யமுடியும். என்றான்.

'மகாராணாவின் காரியசாதனை தான் ராஜபுத்திரர்களின் முக்கியமான கடமை. ஆனால் இன்று தப்பிச்செல்ல வழி இல்லையே' என்றான் துர்ஜயஸிம்மன்.

தேஜ்ஸிம்மன் மெள்ள ஒரு சாளரத்தின்பக்கம் சுட்டிக்காட்டி ஒரு ‘ ராடோர் பாலகன் இந்தச்சாளரத்தின்வழியாய் குதித்து அகழியில் விழுந்து பிறகு நீந்தித் தன் உயிரைக் காப்பாற்றிக் கொண்டான். ராடோர் பாலகன் செய்தசெயலை சந்தாவத்தும் இந்தசமயம் செய்யமுடியும் என்று நினைக்கிறேன்' என்றான்.

துர்ஜயஸிம்மனுக்கு வெகுநாளைய விஷயம் ஞாபகத்திற்கு வந்தது. வெட்கத்தாலும் கோபத்தாலும் அவன் முகம் சிவந்தது, அவன் கையிலுள்ளவாள் நடுங்கியது. கோபத்தால் ஓர் உதைவிட்டுச்சாளரத்தைத் தகர்த்து அதிகவேகமாய் அகழியில் குதித்தான்.

தேஜ்ஸிம்மனும் அதேசாளரத்தின் வழியாக அகழியில் குதித்தான். இருவீரரும் நீந்தி அகழியைக் கடந்து சென்றார்கள்.

சூரியமஹல் சத்துருவின் வசமாயிற்று

# XXIV

## பீமகட் வீழ்ச்சி

முன் அத்தியாயத்தில் கூறிய சம்பவம் நடந்த பிறகு ஒரு மாதம்வரை யுத்தம் நின்றிருந்தது. பீமகட் வாசிகளான ராஜபுத்திரர்கள் அந்த வருஷம் அதற்குமேல் யுத்தம் ஒன்றும் நடக்காதென்று எண்ணினார்கள். ஆனால் அவர்களுடைய எண்ணம் சீக்கிரம் மாறிவிட்டது.

மகாராணா பிரதாபஸிம்மன் எப்பொழுதும் கோட்டையில் இருப்பதில்லை. சிறு சேனையுடன்

மலைகளிலும், காட்டிலும் இருந்துவந்தார். அங்கங்கே சேனைகளை ஒளிந்திருக்கச்செய்து சமயம் வந்ததும் எதிரிகளைத் தாக்கிக்கொண்டிருந்தார். மொகலாய சேனை தளம்தளமாக நாற்புறமும் வந்து கூடும்போது அவர்கள் மறைந்து விடுவார்கள். குளிர், மழை, பனி, வெய்யில் இரவு, பகல் பிரதாபஸிம்மன் மேவாரை காப்பதிலேயே முனைந்திருந்தார். மேவாரில் நடந்த யுத்தத்திற்கு ஒரு கணக்கே இல்லை. எப்பொழுது, எங்கே எவ்விதமாக யுத்தம் நிகழும் என்பதை நிர்ணயிக்கவே முடியாமலிருந்தது. ராஜபுத்திரர்களுக்கும் மொகலாயர்களுக்கும் பிரதி தினம் ஏதாவது ஒரு சண்டை நடந்துகொண்டேதான் இருந்தது. யுத்தத்திற்குப்பின் யுத்தமாகத் தொடர்ந்து நடத்தியும் மேவார் முழுவதையும் ஜயித்துக் கைப்பற்ற முடியவில்லை.

இவ்வாறு சிலதினங்கள் கழிந்தன. ஒருநாள் நள்ளிரவில் திடீரென்று இரண்டாயிரம் வீரர் கொண்ட துருக்க சேனை பீமகட்டை ஆக்கிரமித்தது. பீமகட்டில் ராஜகுடும்பம் இருந்தது. அந்த விஷயம் எப்படியோ அவர்களுக்குத் தெரிந்துவிட்டது. ராஜகுடும்பத்தைக் கைதுசெய்து டில்லிக்கு அனுப்பிவிட்டால் மொகலாயரின் ஆதிக்கத்தை பிரதாபஸிம்மன் ஒப்புக்கொண்டு விடுவார் என்ற எண்ணத்தினால் முஸல்மான்கள் வெகு ஆடம்பரமாக பீமகட்டை வந்து சூழ்ந்தார்கள்.

அம்மாதிரி இரவில் அவர்கள் கோட்டையை வந்து சூழ்ந்த விஷயம் ராஜபுத்திரர்களுக்குத் தெரியாது. ஆகையால் கோட்டையிலுள்ளவர்கள் அஜாக்கிரதையாக இருந்தார்கள். பிரதாபஸிம்மன் கோட்

டையில் இல்லை. தேவிஸிம்மனும் சில ராடௌர் வீரருடன் ராணுவுக்கு உதவியாக மலைப்பிரதேசத்தில் சுற்றிக்கொண்டிருந்தார். ஐநூறு ராடௌர் வீரர்களுடன் சிறுவன் சந்தனஸிம்மன்தான் கோட்டையில் இருந்தான். அந்தசமயம் தேஜ்ஸிம்மனும் அந்தக் கோட்டையில் இருந்தான். ராஜ குடும்பத்தைக் காக்கும் பொறுப்பை அவன் ஏற்றுக்கொண்டிருந்தான். அதுகாரணமாகத்தான் அவன் கோட்டையைவிட்டு எங்கும் வெளியே போகவில்லை.

முஸல்மான்களின் பயங்கரமான திடீர் ஆக்ரமிப்பினால் தேஜ்ஸிம்மன் சற்றும் கலங்கவில்லை. அவன் சிறிதுநேரம் எறும்புச் சாரைபோல் நடக்கும் துருக்க சேனையைப் பார்த்தான். பிறகு சிறுவன் சந்தனஸிம்மனை அழைத்து "இன்று கோட்டையைக் காப்பது கடினம் என்று தோன்றுகிறது' இந்தச் சிறு தொகையினரான ராஜபுத்திரர்களால் கோட்டையை காக்க முடியுமா முடியாதா என்பது சந்தேகமாக இருக்கிறது, இந்தமாதிரி சந்தேகமான நிலைமையில் ராஜ குடும்பத்தை இங்கு வைப்பது உசிதமல்ல. பீமகட்டிலிருந்து வெளியேறிக் காட்டுக்குள் செல்ல ஒரு ரகசிய வழி இருக்கிறது. அந்த வழியை நானும் என் நம்பிக்கையுள்ள பீல் நண்பர்களுமே அறிவோம். ஆனால் அந்த வழி மிகவும் கடினமானது. ஆபத்தில்லாத இடம் போய்ச் சேருவதற்குள் இரவு கழிந்துவிடும். வீரச் சிறுவனே இப்பொழுது ஐநூறு வீரருடன் இன்றிரவு இந்தக் கோட்டையைக் காப்பது உன் பொறுப்பு' என்றான்.

சந்தனஸிம்மன் உற்சாகம் மேலிட்டவனாய், 'தாங்கள்தாம் முதலிலேயே இந்தக் கோட்டை

யைக் காக்கும் பொறுப்பை அடியேனிடம் ஒப்படைத்திருக்கிறீர்களே! இந்தச் சிறுவன் அதைக் கட்டாயம் நிறைவேற்றுவான். சாமர்த்தியம் பூராவையும் உபயோகித்துப் போரிடுவான். உயிருள்ளவரை சத்துருக்களைக் கோட்டையில் நுழையவிடான். எங்களுடைய உடல் பொருள் ஆவி யாவும் ராணுவினுடையது. ராணுவிற்காக இன்று இந்த ஊழியன் உயிரைத் துச்சமாக எண்ணி சத்துரு சேனையிடமிருந்து பீமகட்டைக் காப்பாற்றுவான். தாங்கள் கவலையின்றி ராஜ குடும்பத்தை ஆபத்தில்லாத இடத்திற்குக் கொண்டு சேர்க்க ஏற்பாடு செய்யுங்கள். சூரியோதயம் ஆகும்வரை சத்துருக்கள் இந்த பீமகட்டிற்குள் நுழையாமல் நான் பார்த்துக்கொள்கிறேன்' என்றான்.

சிறுவன் வாயினின்றும் வந்த வீர உரைகளைக் கேட்டு, தேஜ்ஸிம்மன் ஆனந்த மெய்தி, 'சந்தன் ஸிங்' நீ இந்த வேலையை ஏற்றுக்கொண்டது போதும். எனக்கு ஒரு கவலையும் இல்லை' என்று கூறி, ஒரு நீண்ட பெருமூச்சுவிட்டு, 'ஆஹா! தேவி ஸிம்மன் திரும்பிவந்து மகனைப்பற்றிக் கேட்டால் அப்பொழுது தேஜ்ஸிம்மன் என்னசொல்வான்?' என்றான்.

சந்தன் பதிலொன்றும் கூறவில்லை.

மேலும் தாமதம் செய்வதில் பயனில்லை என்று தேஜ்ஸிம்மன் ராஜ குடும்பத்தைப் பத்திரப்படுத்தும் வேலையில் முனைந்தான். தான் பீல் வேஷம் தரித்து ராஜ பரிவாரங்களைக் கூட அழைத்துக் கொண்டு, கடினமான வழியுள்ள காட்டுக்குச் செல்லலானான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் கோட்டையின்மேல்

இப்பந்தங்கள் எரிவது தெரிந்தது. நிமிஷத்திற்குள் முன்னூறு ராடௌர் வீரர்கள் ஆயுதபாணிகளாகக் கோட்டையினின்றும் வெளிப்பட்டனர். ராஜபுத்திரர்கள் சிறு கூட்டத்தினர்தான்; ஆயினும் அவர்கள் சாகசம் அளவற்றது. சிறுவன் சந்தன ஸிம்மன் அன்று சாதாரணமாகத் தென்படாத தேர்ச்சியுடனும் பலத்துடனும் கலங்காத உள்ளத்துடனும் சத்துருவை எதிர்பார்த்து நின்றான். இருநூறு வீரர்கள் தான் கோட்டைக்குள் இருந்தனர்.

பார்த்துக் கொண்டிருக்கும் போதே மொகலாய சேனை அதி வேகமாய் மலைமேல் ஏறலாயிற்று. அவர்களுடைய, 'வெட்டு,! கொல்லு!' என்ற கூச்சலால் மண்ணும் விண்ணும் நடுங்கின. அந்தப் பயங்கரமான இரவில் நடந்த கோர யுத்தத்தை இங்கு வர்ணிப்பதென்பது முடியாத காரியம். கோட்டையைக் கைப்பற்றி ராணாவின் குடும்பத்தைக் கைது செய்துகொண்டு போக வேண்டுமென்று மொகலாய சேனை உயிரை லட்சியம் செய்யாமல் போரிட்டது. அவர்களுடைய எண்ணிக்கை அதிகமாக இருந்தாலும் மலைமேல் ஏற ஒரே வழிதான் இருந்தது. அதுவும் கரடு முரடானது. ஆகையால் அவர்கள் சட்டென்று ராஜபுத்திரர்களை வந்து சூழ்ந்துகொள்ள முடியவில்லை. சீறி எழும் கடலைப் போல் பொங்கித் தாக்கியது மொகலாய சைனியம். ஆனால் கடலோரப் பாறைபோல் அந்தத் தாக்குதலை சமாளித்து நின்றது ராஜபுத்திரச் சைனியம்.

மகாராணாவின் கௌரவம், நமது வாழ்வு, நமது தாய், சகோதரிகள், மனைவிமார்கள் உற்றார் உறவினர், ஜாதி தர்மம், யாவும் இன்று நமது

கைவரிசையைப் பொருத்திருக்கிறது. இதே எண்ணம் தான் ஒவ்வொரு ராடௌர் வீரன் உள்ளத்திலும் எழுந்தது. அவர்கள் அதி வீரத்துடன் போராட லானுர்கள். சுதந்திரத்தை விரும்பும் வீரனின் மனத்தில் இந்த எண்ணம் இருக்கும்வரை அவனே உலகில் யாரும் ஜயிக்க முடியாது. துருக்கிய சேனே அளவு கடந்ததுதான்; அதற்காக ராஜபுத்திரர்கள் சுலபமாக அவர்களுடைய ஆதிக்கத்தை ஒப்புக் கொண்டு விடுவார்களா?

இந்த எண்ணங்கள் மனதில் எழுந்ததே ராடௌர்களின் முகம் ரத்தம் போல் சிவந்தது. புருவங்கள் விரிந்தன. ஆனுல் அவைகளுக்குத் தங்கள் வாள் வீச்சினுல் அவர்கள் பதில் அளித் தார்கள்.

இரவு பூராவும் சண்டை நடந்தது. யுத்தத்தில் இருநூறு பேருக்கு மேலான ராஜபுத்திரர்கள் மடிந் தனர். கிழக்கே செவ்வானம் மின்னியது. அங்கே மிகுந்திருந்த ராஜபுத்திரர்கள்மேல் மொகலாயர்கள் அதி வேகமாய்ப் பாய்ந்தனர். ராஜபுத்திரர்களும் சளேக்கவில்லே.

சண்டையில் வெற்றியைக் காணமுடியவில்லே. சந்தன்ஸிம்மன் ஐம்பது வீரர்களுடன் கோட்டைக் குள் திரும்பி வந்தான். அவர்களுடைய வீரமதத்தை யும் சிவந்த கண்களேயும் பயங்கரமான முகத்தையும் பார்த்த போது தேவாசுர யுத்தத்தில் தோல்வி யடைந்த தேவர்கள் தங்கள் இருப்பிடம் திரும்பி வந்ததைப் போல் தோன்றியது. முஸல்மான்கள் கோலாகல சப்தத்துடன் கோட்டையில் நுழைய முயற்சித்தனர். தடதடவென்ற சத்தத்துடன்

கோட்டைக் கதவு அடைபட்டது. ஏனென்றால் மீதி இருந்த ராஜபுத்திரர்கள் உயிரோடு இருக்கும் வரை கோட்டையை எதிரிகள் கைவசமாக்க விரும்பவில்லை. க்ஷத்திரியர்களின் அபரிமிதமான பராக்கிரமத்தைக் காட்ட விரும்பினார்கள்.

இரவெல்லாம் போராடி முஸல்மான்கள் களைத்திருந்தனர். சற்று இளைப்பாறலாமென்று ஏங்கியது அவர்கள் மனம். அந்த சமயம்தான் கதவு அடைபட்டது. அப்பொழுது மொகலாய சேனாதிபதி 'கவலைப்படவேண்டாம். இப்பொழுது நாம் ஒரு விதமாக பீமகட்டை பிடித்து விட்டோம். இன்று பிரதாப ஸிம்மனின் குடும்பம் கைதியாகி விடும்' நீங்கள் சற்று இளைப்பாறலாம்' என்றான்.

முஸல்மான்களின் சந்தடி அடங்கியதைக் கண்டு சந்தன்ஸிம்மன் கோட்டைமேல் ஏறிப் பார்த்தான் கோட்டை வாசலில் வெளிப்புறம் ஆயிரம் துருக்க வீரர்கள் இளைப்பாறிக் கொண்டிருந்தனர். அன்று யுத்தம் முடியவில்லை. இடையே சற்று நேரம் போர் நிறுத்தப்பட்டிருக்கிறதென்பதை அறிந்தான். பின்புறம் திரும்பிப் பார்த்தான். இருநூறு ராடௌர்கள்தான் மிஞ்சி இருந்தனர். அந்த யுவனின் புருவங்கள் விரிந்தன. முகம் வெளுத்தது. கவலை வந்து மனத்தில் சூழ்ந்தது. ஆயினும் சற்று நேரத்திற்கெல்லாம் தன் கடமையில் ஸ்திரமுள்ளவனாகி சிரித்துக்கொண்டே கீழே இறங்கினான்.

கோட்டைக்குள் இருந்த வீரர்கள் எல்லோரையும் அழைத்து, 'வீரர்களே, நாம் செய்யவேண்டிய கடமைகளைச் செய்தோம். பாருங்கள், கிழ்த்திசையில் சூரியன் உதயமாகப் போகிறான். இன்னும்

கோட்டைவாசலில் ஆயிரம் முஸல்மான்கள் போராடத்தயாராக இருக்கிறார்கள். கோட்டைக்குள் நம்மில் சிலர்தான் மிஞ்சி இருக்கிறோம். இந்த சமயம் உங்களுடைய யோசனை என்ன?' என்றான்.

'எதிர்த்து நின்று போர் புரிந்து உயிர் விடுவதைத் தவிர வேறு யோசனை ஒன்றையும் ராடௌர்கள் அறியார்கள்' என்றான் ஒருவன்.

'அதன்பின்? நமது தாய் சகோதரிகள் — அவர்களுடைய கதி என்ன ஆவது? அவர்கள் முஸல்மான்களுக்கு அடிமையாவதா? ராஜபுத்திர ரமணிகள் டில்லிக்கு மன உல்லாசமகளிர் ஆவதா?' என்றான் சந்தன்.

கோபத்தினால் எல்லோருடைய முகங்களும் சிவந்தன. எல்லோரும் உறையினின்றும் வாளை உருவி வெளியே புறப்பட்டனர். யாரும் ஒன்றும் பேசவில்லை. சிற்சிலர் மெள்ள மெள்ள 'தீக்குளிப்பது' என்று முனகினர். பிறகு எல்லோரும் ஒரே குரலில் 'புருஷர்களுக்குப் படுக்கை போர்க்களம்! ஸ்திரீகளுக்குச் சிதாரோஹணம். இந்த இரண்டு வார்த்தைகளும் இந்த சமயத்திற்குப் பொருத்தமாக இருக்கின்றன' என்றார்கள்.

ராடௌர் வீரர்களின் வாயினின்று வந்த வார்த்தையைக்கேட்டு சந்தனஸிம்மன் உள்ளே சென்றான். அங்கே அவனுடைய தாய் இதர ராடௌர் ரமணிகளுடன் அமர்ந்திருந்தாள். மகன் தாயின் பாதங்களைத் தொட்டு நமஸ்கரித்தான், தாய் யுத்தச் செய்தியைப்பற்றிக் கேட்டாள்.

'யுத்தச் செய்திகள் நன்றாகத்தான் இருக்கின்றன. ஒரு ராஜபுத்திரன்கூட போரினின்றும் சற்

றும் பின் வாங்கவில்லை. முஸல்மான்களின் சேனையில் பாதியை நாசம்செய்துவிட்டு நம்மவர்கள் கோட்டைக்குள் வந்துவிட்டனர். சூரியோதயம் ஆகிவிட்டது. கோட்டை இதுவரை நம் கையில்தான் இருக்கிறது' என்றான்.

தாய்சந்தோஷமடைந்து புத்திரனை ஆசிர்வதித்தாள். அப்பொழுது மகன் மெதுவாக அம்மா உத்திரவானல் சிலவார்த்தைகளை விண்ணப்பித்துக் கொள்கிறேன். இரவுநடந்த யுத்தத்தில் கிட்டத்தட்டமுன்னூறு ராடௌளர்கள் வீரத்துடன் சண்டையிட்டு மண்ணில் சாய்ந்தனர். இந்தச்சமயம் கோட்டைக்குள் இருநூறு இருநூற்றைம்பது வீரருக்கு மேல் இருக்கமாட்டார்கள். எதிரிகளின் எண்ணிக்கைஆயிரத்திற்குமேல் இருக்கும். சிறிதுநேரத்திற்குள் அவர்கள் போர் ஆரம்பிக்கப்போகிறார்கள் என்றான். இதரவிஷயங்களைச் சந்தன்சிங் தன்வாயினல் கூறமுடியவில்லை. அவன் கண்கள் கண்ணீரைச் சொரிந்தன. அவன் அதை அலட்சியமாய் துடைத்துக்கொண்டான்.

தேவிஸிம்மனின் மனைவி சட்டென்று 'இருநூற்றைம்பது ராஜபுத்திரர்கள் ஆயிரம் முஸல்மான்களுடன் போரிடப்பயப்படுகின்றனரா?' என்று கேட்டாள்.

சந்தனஸிம்மன் கம்பீரமான 'குரலில் இல்லை அம்மா. வானவர்களும் தானவர்களும் வந்தாலும் ராஜபுத்திரர்கள் போரிடப்பயப்பட மாட்டார்கள். இந்த மனிதர்களிடமா பயப்படப்போகிறார்கள்? ராடௌளர் வீரர்கள்யாவரும் போரிடத்தயார். ஆனல் போருக்குமுன் ராஜபுத்திர ஸ்திரீகளின் கண்யத்

ளைதக் காப்பாற்ற வேண்டியது அவசியத்திலும் அவசியமாக இருக்கிறது,' என்றான்,

தாய்கம்பீரமான ஒரு சிரிப்புச் சிரித்துவிட்டு 'மகனே இதைச்சொல்லத்தானா பயப்படுகிறாய்? ராஜபுத்திரர்கள் வீரமரணத்தை அறிந்தவர்கள், அவ்வாறே ராஜபுத்திரஸ்த்ரீகளும் அறிவார்கள். நாங்களும் எங்கள் மானத்தைக் காத்துக்கொள்ளத் தயாராக இருக்கிறோம்,' என்றாள்.

அதன்பின் சந்தனஸிம்மனின் தாய் இதர ராஜ புத்திர ஸ்ரீகளை அழைத்து, சந்தோஷத்துடன், 'சகோதரிகளே! இன்றையதினம் நமக்கு ஒரு பெரும் நன்னாள்! இன்று நாம் நமது உயிரை அக்கினியில் ஆகுதி செய்து சதிகளாகப் போகிறோம். தங்கள் தங்கள் பதிகளுக்கு நாம் சௌபாக்கியவதிகளாவோம். ராஜ புத்திர ஸ்ரீகளுக்கு இதைவிட மேலான பாக்கியம் வேறென்னகிடைக்கப் போகிறது? ராஜபுத்திரர்கள் யுத்தம் செய்வதில் எவ்வளவு சமர்த்தர்களோ அவ்வளவு தங்கள் ஸ்திரிகளின் கௌரவத்தைக் காப்பதிலும் சமர்த்தர்கள் என்பதை மொகலாயர்கள் கண்கூடாகக் காண்பார்கள். ராஜபுத்திர ஸ்திரிகள் மானத்தைக் காக்க உயிரைத் திரணமாக மதிப்பதையும் காண்பார்கள்!' என்றாள்.

விடியற்காலத்தில் லேசான உதய வெளிச்சத்தில் ஸ்திரிகள் எல்லோரும் ஸ்நானங்களை செய்துமுடித்து தேவதைகளுக்குப் பூஜைசெய்து, பிறகு பட்டுபுடவை, ஆபரணங்கள் முதலியவைகளணிந்து தலையில் நிறையப் புஷ்பமும் நெற்றியில் குங்குமமும் அணிந்து அரண்மனை வாசலில்வந்து ஒன்றுகூடி நின்றனர். சிறுமிமுதல் கிழவிமார்வரை கோட்டைக்குள்

இருந்த பெண்மணிகள் எல்லோரும் வந்துவிட்டனர். எல்லோரும் ஆனந்தமாகப் பகவானின் திருநாமத்தைப் பாடினர். அதன்பின் க்ஷத்திரியர்களின் புராதன தர்மப்படி எல்லா ஸ்திரீகளும் சிதையில் சென்றமர்ந்தனர். அக்கினிதேவன் சிறிது நேரத்திற்குள் எல்லோரையும் பஸ்மம் செய்தான். ராஜபுத்திர ஸ்திரீகள் தோல்வியையும், அவமானத்தையும், தர்ம நாசத்தையும், தவிர்க்க முடியாதபொழுது இம் மாதிரிச் செய்து தங்கள் கண்யத்தைக் காப்பாற்றிக் கொண்டு ஸதிகளானார்கள்.

அந்தச் சிதையின் நாற்புறமும் இருநூற்றைம்பது ராடௌர் வீரர்கள் மௌனமாக நின்றிருந்தனர். சிதை ஜ்வாலைவிட்டெரிவதை எல்லோரும் கண்டார்கள். எல்லோரும் தங்கள் வஜ்ர ஹிருதயங்களில் கைவைத்துத் தாய், சகோதரி, மாட்டுப் பெண்கள், மனைவிமார், மகள் முதலியவர்கள் தீயில் எரிவதைக் கண்ணால் கண்டார்கள்! அந்த ராடௌர்களுக்கு அதன்பிறகு கூட உயிரின்மேல் மோகம் இருக்குமா? உலக ஆசை இருக்குமா? எல்லோரும் உலகப் பற்றையே உதறி எறிந்து உன்மத்த நிலை கொண்டனர். விடியற்காலம் புனிதமான ஜலத்தில் ஸ்நானம் செய்து நித்திய நியமானுசாரம் இஷ்ட தேவதையை வணங்கிச் சிந்தையற்றுக் கவசமணிந்து, அதன்மேல் சிவப்புவர்ண ஆடையணிந்தார்கள். சிரசில் யுத்த காலப் பாகையான வெள்ளைப் பாகையணிந்து அதன் மேல் துளசிபத்திரம் வைத்துக் கழுத்தில் ஸாளக்ராமம் அணிந்து, ஆயுதபாணிகளாகி, ஒருவருக்கொருவர் பரஸ்பரம் ஆலிங்கனம் செய்து கொண்டார்கள். மித்திரன் மித்திரனையும், சகோதரன் சகோதரனை

யும் தந்தை மகனையும் மார்புடனணைத்துக்கொண்டு உயிரைத் தியாகம்செய்யுமுன் தங்கள் மனத் துயரத்தைத் தீர்த்துக்கொண்டார்கள்.

பொழுது புலர்ந்தது. சிறிது நேரத்திற்கெல்லாம் கோட்டையின் கதவு தடதடவென்ற சத்தத்துடன் திறந்தது. முஸல்மான்கள் வெகு வேகமாக உள்ளே நுழைந்தனர். கதவின் பின்புறமிருந்து ராஜபுத்திரர்கள் அந்தச் சேனையில் புகுந்து வெட்டலாயினர். இருவரிடையேயும் நடந்த கோர யுத்தத்தைப் பற்றி இங்கு எழுதுவதென்பது முடியாத காரியம். ராஜபுத்திரர்கள் சிறிது நேரத்திற்குள் முஸல்மான்களை பிரமையடையச் செய்தனர். கடைசியில் எல்லோரும் வீர சுவர்க்கம் புகுந்தனர். ஜன சூனியமான பீமகட் கோட்டை முஸல்மான்கள் வசமாயிற்று.

இந்த யுத்தத்தில் முஸல்மான்கள் தப்பித்து விட்டனர். ஆயினும் அந்த இருநூறு ராடௌர் வீரர்களின் வீரத்தை முகம்மதியர்களால் மறக்க முடியவில்லை.

அந்த யுத்தம் நடந்து எத்தனையோ வருஷங்கள் ஆகிவிட்டன. ஆயினும் வயதானவர்கள் இன்னும் தங்கள் குழந்தைகளுக்கு அந்த பீமகட் வெற்றியையும் ராடௌர்களின் வீரத்தையும் கதை கதையாய்ச் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள்.

# XXV

## வீரத்தில் கோழைத்தனம்

பில்களின் குகையில் மகாராணி குலஷூமாவைச் சந்தித்த அன்று மகாராணு திடீரென்று மொகல் சேனையைத்தாக்கி அதை ஒழிக்க முயன்ருர். ஆனல் அவர்களுடைய எண்ணிக்கை அதிகமாக இருந்தது. காலையிலிருந்து நடு இரவுவரை ராணு யுக்தியின் மேல் யுக்தியாகச் செய்து போரை நடத்திக்கொண்டிருந்தார் ; எனினும் எடுத்தகாரியம் கைகூடவில்லை. கடைசியில் பயனற்றுத் தன் சேனையுடன், சபந்தக் கோட்டைக்குத் திரும்பினுர். மொகலாய சேனை பீமசந்திரனின் இருப்பிடத்தை நோக்கித் திரும்பியது. மகாராணி இனி அந்த இடத்தில் இருப்பது சரியல்லவென்றெண்ணி தன் குழந்தைகளேயும் குலஷூமாவையும் அழைத்துக்கொண்டு தபஸ்வினியால் காட்டப்பட்ட இடத்திற்குச் சென்ருள். பீமசந்திரன் வீட்டில் ராஜ குடும்பத்தைக் காணுமல் மொகலாய சேனை சென்று விட்டது. அப்பொழுது மகாராணி சுரங்கவழியாக வெளிப்பட்டு வெளியே வந்து சபந்தக் கோட்டைக்கு தன் கணவன் இருக்குமிடம் வந்தாள்.

சபந்தக் கோட்டையைக் காப்பாற்றுவதும் கடினமாகிவிட்டது. சேனைக்கு உணவுப் பொருள் நாளுக்குநாள் சரியாகக் கிடைக்க முடியவில்லை, சைனியபலமும் நாளுக்குநாள் குறைந்துகொண்டே வந்தது. ஒருநாள் சாயங்காலம் ஆலோசனை செய்

வதற்காகக் கோட்டையிலுள்ள வீரர்களை எல்லாம் ஒன்று கூட்டினார் ராணா.

நாற்புறமும் முக்கியமான வீரர்கள் சூழ ராணா அமர்ந்திருந்தார். ஆனால் போருக்கு முன் கமலமீர் சபைக்கு வந்திருந்த வீரர்களில் பலரை இன்று இந்தக் கூட்டத்தில் காணமுடியவில்லை. தைலவாராவின் ஜாலா குலாதிபனைக் காணோம். பிஜ்லியின் பம்வார் குலபதி இல்லை. இன்னும் பல மாபெரும் வீரர்கள் போருக்கு இரையானார்கள்.

பிரதாபஸிம்மன் தன்னைச் சுற்றி நாற்புறமும் பார்த்தார். மகன் அமரஸிம்மன் தந்தையருகே அமர்ந்திருந்தான். அவன் மலையிலும் கானிலும் வசித்தே போர்த்தொழில் பயின்றான். தன் தந்தையைப்போல் வீரமும், ஆபத்தை மனம் தளராமல் சகிக்கும் தன்மையும் பெற்றிருந்தான்.

ஆலோசனை ஆரம்பமாயிற்று, வேலைக்காரர்கள் போஜன சாமான்களைக் கொண்டுவந்தனர். எல்லோர் முன்னிலையிலும் சாதாரண போஜனம்தான் பரிமாறப்பட்டது. எல்லோரும் ஒன்றாக போஜனம் செய்ய அமர்ந்தனர். அப்பொழுது அது ஒரு அபூர்வக் காட்சியாக விளங்கியது. மேவார் உன்னதமாக இருந்த தினத்தில் ராஜ சபை எந்த ரீதியில் இருந்ததோ அப்படியே அப்பொழுதும் விளங்கியது. அதில் எவ்விதக் குறைபாடும் இல்லை.

சபையில் எல்லோரிலும், தீரவீர முள்ளவர்களுக்கும், கௌரவிக்கத் தகுந்தவர்களுக்கும்; ராணா தன் இலையிலிருந்து ஒவ்வொரு பிடி சாதத்தைக் கொடுப்பது சம்பிரதாயம். அதற்கு "தோனா" என்று பெயர். ஆனால் அன்று பிரதாபஸிம்மன்

யாருக்குக் கொடுப்பார்? அதை நிர்ணயம்செய்ய நாற்புறமும் திரும்பினர். ராணுவின் அருகே அவர் மகன் அமரஸிம்மன் அமர்ந்திருந்தான். அவன் அந்தச் சிறுவயதிலேயே அரும்பெரும் சாகசம் காட்டி மாபெரும் வீரனுக விளங்கினன். பிரதாபஸிம்மன் மகனையழைத்து 'அமர்ஸிங் இந்தப் பயங்கரமான ஆபத்துக்காலத்தில் நீ வீரத்துடன் போர் பயிற்சி பெற்று வருகிருய். கூட வீரர் செயலும் புரிந்து வருகிருய். இன்று என் போஜனத்தில் பங்கு பெற்றுக் கொள்ளும் வீரன் யாரும் இங்கே இல்லை' என்று சொன்னர். பிறகு சற்றுப் பொறுத்து, துர்ஜயஸிம்மன், தேஜ்ஸிம்மன் இருவரும் சற்று தள்ளி அமர்ந்திருப்பதைக்கண்டு, 'சந்தாவத், ராடௌர் வீரர்களே, உங்கள் வீரத்தைப் போற்றுகிறேன். நீங்கள் தன்யர்கள்! உங்கள் ராஜ பக்தி போற்றத்தக்கது! நீங்கள் இருவரும் எனக்காக உயிரைத் தியாகம் செய்யத் தயாராக இருக்கிறீர்கள்! வீரச் செயல்களும் புரிந்து வருகிறீர்கள். ஆபத்தில் ராஜ குடும்பத்திற்கு ஆசிரயமளித்தீர்கள்! நீங்கள் இருவரும் இரண்டு சகோதரர்களைப்போல ஒன்றுசேர்ந்து போரில் சத்துருக்களை வீழ்த்தினீர்கள். நீங்கள் ஒப்புவமையற்ற வீரர்கள். ஆபத்தில் எனக்கு உதவும் உண்மை நண்பர்கள், ஆனல் இன்று என்முன்னே போஜனத்தைப் பங்குகொள்ளக்கூடிய வீரன் யாருமே இல்லை' என்ருர்.

எதிரே வயதானவரும் மாபெரும் வீரருமான தேவிஸிம்மன் அமர்ந்திருந்தார். ராணு அவரை அழைத்து 'தேவிஸிங் இந்தக்கொடுமையான யுத்தத்தில் நீர் சகலத்தையும் இழந்தீர். உம்முடைய வீரத்

நிற்கும் சஞ்சலமற்ற தேச பக்திக்கும் நான் என்ன வெகுமதியளிக்கப் போகிறேன்? இந்தப் பிரசண்ட யுத்தத்தில் நீர் உம்முடைய கோட்டை, மனைவி, வீரப் புதல்வன், இதர உற்றூர் உறவினர் எல்லோரையும் இழந்தீர். ஆயினும் கையில் வாளேந்தி என்னுடன் காட்டிலும் மலையிலும் சுற்றியலைகிறீர். இன்றுவரை நீர் சகித்திருக்கும் கஷ்டங்களுக்கு ஓர் எண்ணிக்கை ஏது? பிரதாபஸிம்மன் கடினத்திலும் கடினமான விபத்துக்களைச் சகிக்க அப்பியாசம் செய்திருக்கிறான். ஆனால் உன் போன்ற ராஜ பக்திகொண்ட வீரனைக் கண்டு பிரதாபஸிம்மனின் வஜ்ர இதயமும் நெக்கு விட்டு உருகுகிறது. வீர வம்ச பூஷணமே! உம் முடைய வீரத்திற்கு மனித சக்தியால் வெகுமதி யளிக்க முடியுமா? இன்று நீர் என் போஜனத்தில் பங்கெடுத்துக் கொண்டு எனக்கு அனுக்கிரஹம் செய்யும்' என்றார்.

மகா ராணா இதயமுருகிக் கூறிய வார்த்தை களைக் கேட்டு விருத்தவீரரான தேவிஸிம்மனால் சட்டென்று யாதொரு பதிலும் கூற முடியவில்லை. அவர் கண்களில் கண்ணீர் பொங்கியது. கண்களைத் துடைத்துக் கொண்டு நடுங்கும் குரலுடன் 'மகா ராணா, என்னுடைய இந்த தைரியமற்ற தன்மைக்கு மன்னித்து கொள்ளுங்கள். என் விருத்தாப்பியத்தின் காரணமாக ஏற்பட்ட இந்தக் கோழைத்தனத்தை மன்னிப்பீராக. என்னால் தடுக்க முடியாமற் போய் விட்ட கண்ணீர்ப் பெருக்கை மன்னியுங்கள். இந்த வயோதிக காலத்தில் கோட்டையையும் என் கை வாளையும் என் மகன் சந்தன் ஸிம்மனிடம் கொடுத்துவிட்டுச் சிந்தையற்று ஈச்வரனை பஜித்துக்

கொண்டிருக்கலாம் என்றிருந்தேன். ஆனுல் கடவுள் சித்தம் வேருக இருந்தது. மனத்திலுள்ளது மனத்திலேயே இருந்துவிட்டது. இனி அதை எண்ணுவதில் என்ன லாபம்? என் மகன் எதிரிமுன் நின்று போர் புரிந்தான். தன் உயிருள்ளவரை சத்துருக்களைக் கோட்டைக்குள் விடவில்லை. ராடௌர் வம்சத்தைக் களங்கத்திலின்றும் காப்பாற்றியதற்காக நான் கடவுளுக்கு என் இதய பூர்வமான வந்தனையைச் செலுத்துகிறேன். இந்தக் கிழவன் உயிருடன் உள்ள வரை ராணு வுடன்கூட இருப்பான்' என்ருர்.

இதன்மேல் வேறுபேச்சு வார்த்தை ஒன்றும் நடைபெறவில்லை. எல்லோர் முகத்திலும் வருத்தம் தேங்கியது. கண்களில் கண்ணீர்பெருகியது. எல்லோரும் மௌனமாக போஜனம் செய்யலானுர்கள். ராணு எழுந்து தன் மனைவியும் குழந்தைகளும் இருந்த இடத்திற்குச் சென்ருர்.

இரவு ஒரே அந்தகாரமாக இருந்தது. ஒருமலைக் குகையினருகில் நெருப்பு எரிந்துகொண்டிருந்தது. ராணுவின் சிறுகுழந்தைகள் அதைச்சுற்றி விளையாடிக் கொண்டிருந்தன. ஒன்று களைத்துக் கற்பாறைமேல் தூங்கிக்கொண்டிருந்தது. ராணியும் குலகுமாரியும் ரொட்டி தட்டிக் கொண்டிருந்தனர். குழந்தைகள் தூங்கிஎழுந்தவுடன் சாப்பாடு கேட்கும். பிரதாபஸிம்மன் தூரத்தில் நிற்று சற்று நேரம் அந்தக்காட்சியைக் கண்டார். அன்று அவர் மனம் சிந்தனையில் மூழ்கியது.

கோட்டைகள் ஒவ்வொன்ருக சத்துருவசமாயின. சேனைகளின் எண்ணிக்கை நாளுக்குநாள் குறைந்து வந்தது. பிரதாஸிம்மனிடம் தனம் இல்லை; சாப்பா

டில்லை; ராஜ்யமில்லை; ராஜதானி இல்லை. அந்த சந்தர்ப்பத்தில் கற்பாறைகளைத் தவிர கால் வைக்க வேறு இடம் இல்லை! அவருடைய கவலை நிறைந்த உள்ளத்தில் புத்திர புத்திரிகளுக்கு இடமளிக்கும் அவகாசம்கூட இல்லை. பிரதாபஸிம்மன் அந்தக் கவலைகளை எல்லாம் மனதில் ஏற்பதில்லை. அவை களால் அவர் இதயம் அதைரியமடைவதும் இல்லை. ஆனால் அன்று ஏன் அவர் உள்ளத்தில் கவலை தோன்றியது?

பிரதாபஸிம்மன் யோசிக்க ஆரம்பித்தது அது தான் முதல்தடவை. அன்றுவரை சகிக்கமுடியாத பல கஷ்டங்களையும் துக்கங்களையும் சகித்திருக்கிறார். ஆயினும் அவர் உள்ளத்தில் ஊடுருவிப் பாயும்படி யான அம்மாதிரி துக்கம் உண்டானதே கிடையாது. சிலசமயம் ராணி தன் குழந்தைகளுக்கு சமையல் செய்து சாப்பாடுபோட ஆயத்தம்செய்து கொண் டிருக்கும்போது எதிரிகள்வந்து விடுவார்கள். சாப் பாட்டை அப்படியே போட்டுவிட்டு ஓடவேண்டி வரும். பிறகு வேற்றிடம் சென்று ஏதாவது தயா ரித்துக் குழந்தைகளுக்குக் கொடுப்பது வழக்கம். அப் படிக் கொடுக்கும்போது எதிரிகள் வருகிறார்கள் என்ற செய்தி எட்டும். கைரொட்டி கையிலேயே இருக்க பசியோடு அழும் குழந்தையைத் தூக்கிக் கொண்டு அங்கிருந்து மீண்டும் ஓடுவதுண்டு! மேவாரின் ராணிக்கு பயமற்று இருக்க ஓர் இடம் கூட இல்லை. பிறகு அவள் பீல்களின் ஆதரவில் சென்று அவர்கள் குகையில்வசித்து, பீல்கள் கொடுக்கும் ஆகாரத்தால் குழந்தைகளைக் காத்து வந்தாள். பிரதாப ஸிம்மனின் சுதந்திர விரதம்

பூர்த்தியாகவேண்டி இந்த கஷ்டங்களை யெல்லாம் துச்சமாக எண்ணித்தன் வீரஇதயத்தில் பயத்திற்கு இடமளிக்கவே இல்லை.

ஒருசமயம் மேவார் ராணி மலைமேல் பாறையில் கணவனுடன் தூங்கிக்கொண்டிருந்தாள். திடீரென்று மேகம் திரண்டு மழை பொழிந்தது. எல்லோரும் நனைந்தார்கள். ஈரத் துணியுடன் எல்லோரும் இரவைக் கழிக்க நேரிட்டது. ராணி குழந்தையை மடியில் அணைத்துக்கொண்டு இரவு பூராவும் நின்றுகொண்டிருந்தாள். மழைத் தண்ணீர் ஓடி வந்து, இருக்கும் சாமான்களை அடித்துச் சென்றது. இவைகளை எல்லாம் கூட ராணு கஷ்டமாக மதிக்க வில்லை. அவர் வீர இதயம் கலங்கவில்லை.

ஒருசமயம் அரச குடும்பம் நாள் பூராவும் சாப்பாடின்றி சத்துருக்களின் பயத்தினால் வனம் வனமாகச் சுற்றி யலையவேண்டி வந்தது. மாலை நேரம் எங்கோ ஒரு மலைக் குகை கிடைத்தது. மனித சஞ்சாரமற்ற அந்தப் பர்வதத்தில் ஆகாரத்திற்கு என்ன கிடைக்கும்? புல்லரிசி மாவு கொஞ்சம் கிடைத்தது. அதை ராணி தன் கையினாலே ரொட்டி யாகத் தட்டி சிறு குழந்தைகளுக்குக் கொடுத்தாள். குழந்தை அதை ஒடித்து வாயில் போட்டுக் கொள்ளும் சமயம், திடீரென்று ஒரு காட்டுப் பூனை அந்தக் குகையினின்றும் குதித்துவந்து குழந்தை கையிலிருந்த ரொட்டியைப் பறித்துக்கொண்டோடி விட்டது. குழந்தை இரவு முழுதும் பசியால் அழுது விட்டுத் தாயின் மடியில் தூங்கியது. பிரதாப ஸிம்மன் அதையும் பொருட்படுத்தவில்லை. அதிலும் அவர் சித்தம் கலக்கமடையவில்லை.

ஆனால் அன்று அந்த வீர உள்ளம் அதைரிய மடைந்தது. அவர் முகத்தில் வருத்தத்தின் சின்னங்கள் தோன்றின.

மகாராணா வருவதைப் பார்த்து ராணி ரொட்டி செய்யும் வேலையைக் குலஸுமாவிடம் விட்டுவிட்டுத் தான் கணவன்முன் வர எழுந்தாள். கணவனின் கண்களில் கண்ணீரைக் கண்டு அவள் இதயம் நடுங்கியது. அவள் ஆச்சரியமடைந்து, விநயமாக, 'நான் காண்பது என்ன? இன்று மகாராணா ஏன் இவ்வளவு துக்க மடைகிறார்? மகாராணாவின் இந்தக் கலக்கத்தைக்கண்டு மொகலாயர்கள் அவர் யுத்தத்தில் பயந்துவிட்டார், இனி அவரால் ஆபத்தைச் சகிக்க முடியாதென்றல்லவா எண்ணிவிடுவார்கள்' என்றாள்.

'பிரதாபஸிம்மன் யுத்தத்தில் பயப்படாமல் ஆபத்தைப் பொருட்படுத்தாமல் இருப்பதை ஈசன் அறிவார்'. என்றார் ராணா.

'பின்னென்ன இந்தக்குழந்தைகளின் கஷ்டத்தைக்கண்டு தாங்கள் கலக்கமடைந்து விட்டீர்களா? மேவாருக்காகத் தாங்கள் கஷ்டத்தைச் சகிக்கும் போது நாங்கள் சகிக்கமுடியாதா?'

'கடவுள்கிருபையால் என்குழந்தைகள் சௌக்கியமாக இருக்கின்றன. நீயும் சுகமாக இருக்கிறாய்! நான் எனக்காக ஒன்றும் யோசிக்கவில்லை. கடவுள் நம்மை இதுவரை பெரும் விபத்துக்களினின்றும் காத்தார். இந்த அசுர யுத்தம் எத்தனையோ வாலிப வீர மக்களை விழுங்கிவிட்டது. நம் மகன் அமரஸிம்மனைப்போன்ற பல வீர புத்திரர்கள் மாண்டனர். பதிவிரதைகளான ஸ்திரிகள் உயிரிழந்தார்கள். இந்

தப் பயங்கரப் போர் பல வீடுகளை சூனியமாக்கிவிட்டது. அவர்களுக்கு உலகமே வெறும் சூனியமாகி விட்டது!'

'கடவுள் அவர்களுக்குச் சாந்தி யளிக்கட்டும்! மனிதர்களுக்கு இந்தச் சோகம் பொறுக்கமுடியாததுதான்!'

'எனக்குத் தொண்டுசெய்தே நண்பர் தேவி ஸிம்மனின் தலை நரைத்துவிட்டது. ராடௌர் வீரர்களில் அவருடன் ஒப்பிட்டுச் சொல்ல வேறு யாரும் இல்லை. முஸல்மான்கள் அவருடைய கோட்டையைப் பிடித்துக்கொண்டனர். அவர் வீட்டிலிருந்த ஸ்திரீகளெல்லோரும் சதியானார்கள். அவருடைய ஒரே புதல்வன் முஸல்மான்களுடன் போர்புரிந்து மாண்டான். ராணாவின் சத்தியப் போருக்காகவும் தேசத்தைக் காக்கவுமே தேவிஸிம்மன் இப்பொழுது உயிர் வாழ்கிறார்' என்றார் ராணா.

அதைக் கேட்டதும் ராணியின் கண்களில் கண்ணீர் பெருகியது. அவள் அழுதுகொண்டே 'தாங்கள் என்ன சொன்னீர்கள்? தேவி ஸிம்மனின் குடும்பத்தார் எல்லோரும் இவ்வுலகினின்றும் மறைந்தனரா? தேவி ஸிம்மன் தம் அருமைப் புதல்வனையும் இழந்தாரோ? ஆஹா! தெய்வமே! தேவி ஸிம்மனை நீ பெரிதும் வஞ்சித்தாய்! புத்திர சோகத்தைவிடக் கடினமான சோகம் உன்சிருஷ்டியில் வேறென்ன இருக்கிறது? அந்த விருத்தருக்கு உலகில் வேறு சோகம் ஒன்றுமில்லையா? விதியின் செயலை அறிய முடியவில்லையே!' என்று கதறினாள்.

'அவருடைய வீரபுத்திரன் மாண்டான். குடும்பம் போய்விட்டது. தனம்போய்விட்டது. கோட்டை

எதிரிவசமாய்விட்டது. வம்சம் நாசமாயிற்று. ஆயினும் இன்று அந்தவிருத்தன் தைரியத்துடன் என்னிடம் தம்மகன் போரில் வீரம்காட்டி இறந்ததற்குக் கடவுளுக்கு வந்தனை செலுத்துவதாகக் கூறினர் ஆஹா ! இம்மாதிரி அரசனின் தர்மத்தைக் கடைப்பிடித்தவர்யார் ? இதற்கு வெகுமதிதான் என்ன? வீர சிரேஷ்டர்களை பலியிட்டு மேவாரைக் காத்தும் பலன் என்ன ?' என்ருர் ராணு.

ராணி கண்ணீர் வழியும் கண்களுடன் குழந்தைகளுக்கு போஜனமளிக்க உட்கார்ந்தாள். பிரதாப ஸிம்மன் கவலையில் மூழ்கினர். அவர் தம்மனத்தை எவ்வளவோ தேற்றியும் அதற்குச் சாந்திகிடைக்கவில்லை. அவர் வெகுநேரம் கழித்து, ராஜ்யம் கிடைப்பதற்காக இம்மாதிரி நண்பர்களைப்பலியிட்டு, அவர்கள் குடும்பங்களை நாசம் செய்து அவர்களை துன்பத்தில் ஆழ்த்தவேண்டும் என்ருல், ராணு அந்தராஜ்யத்தையே விரும்பவில்லை. நான் ராஜ்யத்தின் பெயரைக்கூட எடுக்கமாட்டேன்! என்று சொல்லிக்கொண்டார்.

மறுநாள் மகாராணு அக்பரிடம் சமாதானம் செய்துகொள்ளக் கடிதம் அனுப்பினர்.

## XXVI

## களங்கத்தின் மத்தியில் புனிதம்

ஒரு நாள் மாலை பிரதாபஸிம்மன் மீண்டும் வீரர்களை ஒன்று கூட்டினர். ராடௌர், பௌஹான், பம்வார், ஜாலா, சந்தாவத், ஸங்காவத், ஜகாவத் முதலிய க்ஷத்திரிய வீரர்கள் ஒன்று கூடினர்கள். இவர்கள் சிறுவயது முதற்கொண்டே யுத்தத்தைத் தவிர வேறென்றையும் அறியாதவர்கள். அநேக யுத்தங்களில் தங்கள் வீரத்தைக்காட்டித் தமது வம்சத்தின் கௌரவத்தை வெளிப்படுத்தியவர்கள். ஆனால் அன்றைய சபையில் எல்லோரும் மௌனமாக உட்கார்ந்திருந்தனர்.

பிரதாபஸிம்மன் அக்பருக்கு எழுதிய கடிதத்தைப்பற்றிச் சர்ச்சை நடந்தது. அக்பர் ராஜிசெய்து கொள்வதைக் கட்டாயம் ஒப்புக்கொள்வார். ஆனால் ஸிஸோதியர் அக்பர் ஆதிக்கத்தை ஒப்புக்கொண்டு ராஜிசெய்து கொள்வார்களா? பிரதாபஸிம்மன் இதைத்தான் அவர்களிடம் கேட்டார். அந்த க்ஷத்திரியமண்டலத்தில் இதற்குப்பதிலுரைக்கக் கூடியவர்கள் யாவரும் இல்லை. சபைமுழுதும் நிசப்தமாக இருந்தது.

எத்தனை நாட்கள்வரை சமாளிக்கமுடியுமோ யுத்தம் நடந்தது. ஆனால் இப்பொழுது மேவார் பிரதேசத்தில் ஓர் இடம்கூட, ஒரு கோட்டைகூட தற்காப்பு செய்துகொள்ளக்கூடிய வசதியுடனில்லை. சத்துருக்களின் கணக்கற்றசேனையை மேவாரின்மேல் மேகம் போலக் கவிந்து கொண்டிருந்தது. எல்லாக்

கோட்டைகளையும் எதிரிகள் கைப்பற்றிவிட்டனர். நாற்புறமும் வந்து சூழ்ந்து எங்கு ராஜபுத்திரர்கள் இருக்கிறார்கள் என்றுதெரிந்ததோ அங்கேவந்துவிடு கிறார்கள். தப்பித்துக்கொள்ள யுத்தம் ஒன்றுதான் ? ஆனால் பிரதாபஸிம்மன் இனி எப்படியுத்தம் செய்ய முடியும் ? மேவாரில் சேனை இல்லை. சேனையிருந்தா லும் அவைகளுக்கு உணவுப்பொருள் ஒன்றும்இல்லை. பொக்கிஷத்தில் திரவியம் இல்லை; தங்கி இருக்க சிறந்த கோட்டைகூட ஒன்றும் இல்லை. இப்பொ ழுது இருக்கஇடம் இல்லை. ஒரே இடம் சடாந்தக் கோட்டை இருந்தது. இனி அங்கிருந்தால் ராணா கட்டாயம் கைதியாக நேரிடும். வீரர்கள் கைதியாக யோசனைகூற முடியாது. அம்பர், மார்வார் ராஜாக் களைப்போல முஸல்மான்களின் ஆதிக்கத்தை ஒப்புக் கொள்ள யோசனை கூறவும் முடியாது. ஆனால் டில்லி ஆதிக்கத்தை ஒப்புக்கொண்டு ராஜிசெய்து கொள்வதைத்தவிர வேறுவழி என்ன இருக்கிறது?

சுதந்திரத்திற்காக இதுவரை கானிலும் மலையி லும் அலைந்து போர்புரிந்து ராஜபுத்ர ரத்தத்தினால் மேவாரைச் சிவப்பாக்கி வீடுவாசல் அரண்மனை யாவற்றையும் விட்டு, நோக்கம் நிறைவேறுவதற் காக நாட்களை எண்ணிக்கொண்டு விபத்துக்களையும் துக்கத்தை சகித்துக் கொண்டிருக்கும் பிரதாப் சுதந் திரத்தை விட்டுவிடுவாரோ ? மானஸிம்மன்போன்ற எத்தனையோ அரசர்கள் மிலேச்சர்களைச் சரண மடைந்து தங்களைப் பாக்கியசாலியாகக்கருது கின்ற னர் ! அவர்கள்முன் தலைகுனிந்து, மகாராணா களங்க மற்ற தம் வம்சத்திற்குக் களங்கத்தைத்தேடுவாரா ? இவ்வளவு நாட்களுக்குப்பின் பப்பாராவல் வம்சம் முஸல்மான்களுக்கு அடிமையாகப் போகிறதா ?

'ராஜபுத்திர வீரர்களே இப்போழுது செய்ய வேண்டுவதென்ன ? ஆதிக்கத்தை ஒப்புக்கொள் வதைத் தவிர வேறுவழி என்ன இருக்கிறது?' தரையி லிருந்த வீர சுதந்திரர்கள் யாவரும் மௌனமாக இருந்தனர்.

இன்று அடிமைத்தனத்தை ஒப்புக்கொள்வதால் நாளை சுதந்திரமடைவது நடவாமற்போகாது. கேளுங்கள், அக்பர் அதிபராக்கிரமசாலி; புத்திமான் ஆனுல் அக்பருக்குப்பின் அவருடைய சிம்மாதனத் துக்கு வருபவர்கள் இப்படியே பலவான்களாக இருப் பார்களா என்ன? அப்படி இல்லாமலிருந்தாலும் இருக்கலாம். அந்த நிலைமையில் மேவார் மீண்டும் சுதந்திரமடையும். ஆனுல் இந்த சமயம் தயங்கினுல் ஸிஸோதியா வம்சம் ஒரேயடியாய் அழிந்துபோய் விடும். பிறகு உலகில் அதனுடைய பெயர்கூட இருக் காது! சிற் சில பெயருடைய மனத்தில் இம்மாதிரி எண்ணங்கள் உதித்தன.

எல்லோரும் யோசித்துக் கொண்டிருக்கும் போதே தூதன் ஒருவன் ஒரு கடிதத்தைக்கொண்டு வந்து ராணுவின் முன்வைத்தான். ராணுபார்த்தார். பீகானீர் ராஜாவின் தம்பியான பிருதிவிராஜன் கடி தம் எழுதி இருந்தான். கடிதத்தில் வேறென்று மில்லை; கவிதைதான் இருந்தது! அந்த சமயம் ராஜ்வாடில் பிருதிவிராஜனுக்குச் சமானமான கவி கள் ஒருவரும் கிடையாது.

பீகானீர் டில்லி ஆதிகத்தின்கீழ் இருந்தது. பிருதிவிராஜன் டில்லியிலேயே தான் வசித்துவந்தான் ஆயினும் பிரதாபஸிம்மனின் வீரத்தைக்கேட்டு சந்

தோஷமடைந்து வந்தான். மேவாரின் சுதந்திரப் போரை எண்ணி அவன் தன் அவமானத்தைமறந்து விட்டான். அவன் மனத்திற்குள் பிரதாபஸிம்மனைப் பூஜித்துவந்தான். அந்த சமயம் ஹிந்து முஸல்மான் யாவரும் மேவாரின் போக்கை மரியாதையாக கவனித்துவந்தார்கள். எல்லோரும் அதன் வீரத்தையும் உத்தேசத்தையும் மனத்திற்குள் புகழ்ந்தனர்.

பிரதாபஸிம்மனின் சமாதான சம்பந்தமான கடிதத்தைக்கண்டு அக்பர்ஷா அதிக சந்தோஷமடைந்தான். பிரதாப ஸிம்மனைப்போன்ற கொடிய சத்துரு அவனுக்குப் பாரதநாட்டில் யாருமே கிடையாது. அந்தப்பிரதாபஸிம்மன் இன்று தோல்வியடைந்து சமாதானம் செய்துகொள்ளக் கடிதம் அனுப்பி இருந்தார். இதைவிட ஆனந்தப்படக் கூடிய விஷயம் வேறு என்ன இருக்கமுடியும்? இப்படி அநேக விதமான விஷயங்களை எண்ணி அக்பரின் மனம் ஆனந்தத்தால் பொங்கியது. நற்செய்தியை யொட்டி டில்லியில் தடபுடலாக உற்சவங்கள் நடந்தன. அந்த மாதிரி உற்சவம் நடைப்பதைக்கண்டு பிருதிவிராஜனுக்குக் கோபம் வந்துவிட்டது. அவன் பாதுஷாவிடம் சென்று, இந்தக்கடிதம் பிரதாப ஸிம்மன் எழுதியதல்ல. பிரதாபஸிம்மனின் விரோதிகள் யாரோ அவருடைய கௌரவத்திற்குக் குந்தகம் விளைவிக்க இத்தக் கடிதத்தை சிருஷ்டித்திருக்கிறார்கள். இதைத்தாங்கள் சூதென்று அறியுங்கள், ஜஹாம்பனாஹ்! நான்பிரதாப ஸிம்மனை நன்றாக அறிவேன். அவர் தம் ராஜ்யத்தை அடையப் பிறருடைய ஆதிக்கத்தை ஒப்புக்கொள்ளவேமாட்டார். அவர் தம் கௌரவத்தை காப்பதில் சற்றும் பின் வாங்கக் கூடியவரல்லர்' என்றான்.

பிறகு பிருதிவிராஜன் மர்மமான அர்த்தங்கள் கொண்ட கவிதைகள் நிறைந்த கடிதமொன்றைப் பிரதாபஸிம்மனுக்கு எழுதினன். அதே கடிதம்தான் அன்று சபையின்முன் பிரதாபஸிம்மனுக்குக் கிடைத்தது. அவர் கவனத்துடன் பிருதிவிராஜன் கவிதையைப் படிக்கலானர். கவிதையின் கருத்து:—

'யார் உண்மையான ஹிந்துவோ அவனிடம் தான் ஹிந்துக்களின் ஹிந்துத்துவம் சரண்புகுந்திருக்கிறது,' தன்னசை நிறைவேறுமென்று ஹிந்து ஜாதி முழுவதும் ஒரு ராணவிடம் நம்பிக்கை வைத்திருக்கிறது. பிரதாபஸிம்மன் ஹிந்துக்களின் ஆசையை நிர்மூலம் செய்துவிடுவாரா?

ராஜஸ்தானத்தில் பிரதாபஸிம்மனின் சிரம் தான் நிமிர்ந்து நிற்கிறது. பிரதாபஸிம்மன் தலை குனிந்தால் பாரத பூமி சமாதானமாகிவிடும். பாரத நாட்டில் ராஜ புத்திர கௌரவம் தொலைந்தேவிட்டதென்று வைத்துக்கொள்ளலாம். நமது சேனை தைரியத்தை இழந்துவிட்டது! ஸ்திரிகள் தர்மத்தைப் புறக்கணித்துவிட்டார்கள்! விலைமதிக்க ஒண்ணாத நமது ஜாதி தர்மத்திற்கும் அக்பர் விலை கூறுகிறவராகிவிட்டார்.

'சுகத்திற்காக எந்த ராஜபுத்திரன் தன் மரியாதையை விற்பான்? எத்தனை ராஜபுத்திரர்கள் விற்றிருக்கின்றனர்? சித்தௌரும் அந்த வியாபாரிகள் கூட்டத்தில் சேர்ந்து விடுமா? பிரதாபஸிம்மன் தம் சம்பத்துக்களை எல்லாம் இழந்துவிட்டார். ஆயினும் அவரிடம் ஒரு விலைமதிக்கவொண்ணாத ரத்னம் மிஞ்சி இருக்கிறது!

'வம்சத்தின்—நாட்டின் கௌரவத்தை விற்று

இன்றுவரை யாரும் எந்தப் பெருமையையும் அடைந்துவிடவில்லை. ஹம்மீர தேவனின் வம்சத்தவர்கள் இந்தக் களங்கத்திலின்றும்—அவமானத்திலின்றும் இதுவரை தப்பிவந்திருக்கிருர்கள்!

'எல்லோரும் ஆச்சரியமடைந்து, பிரதாபஸிம்மன் ரகசியமாக எப்படி இவ்வளவு உதவியைப் பெறுகிருர்? என்று கேட்கின்றனர். அவருடைய வீரமும் அவருடைய வாளும்தான் அவருக்குச் சகாயம்! அவை இரண்டின் உதவியைக்கொண்டுதான் அவர் க்ஷத்திரிய தர்மத்தை காக்கிருர். உலகில் அமரனுக வசிக்க யாரும் வருவதில்லை. நமது தர்மத்தை விலை கொடுத்து வாங்குகிறவர்களும் ஒருநாள் இந்த உலகினின்றும் சென்றுவிடுவார்கள். க்ஷத்திரிய தர்மத்தின் கௌரவத்தை பிரதாபஸிம்மன் தன் கையில் வைத்துக்கொண்டிருக்கிருர். எல்லோரும் அவரிடம் நம்பிக்கை கொண்டிருக்கிருர்கள்.

'கடைசி வேண்டுகோள் இதுதான்; க்ஷத்திரிய வம்சத்தின் புனிதம், வீழ்ச்சியடையப் பார்க்கவேண்டாம். அது மீண்டும் ஜாஜ்வல்யமாய் பிரகாசிக்கட்டும்'.

பிரதாபஸிம்மன் ஒருமுறையல்ல, மூன்று முறை கவிதையைப் படித்தார். கடைசியில் அவர், 'வீரகணங்களே! நாற்புறமும் களங்கத்தின் வெள்ளம் பெருகும்போது இந்தப் பவித்திரமான பிரதாபஸிம்மனின் க்ஷத்திரியத்துவம் எப்படி அதில் மூழ்காமல் இருக்கமுடியும்? ஆகையால் மேவாரில் நமக்கு இடமில்லாவிட்டால் பாலை வனத்தில் இடமிருக்கும். வேறு அன்னிய தேசத்தில் சென்று ஆசிரய மேற்போம். அன்னியரிடம் அடிமைப் படவேண்டாம்.

ஆனால் ஸிஸோதியா வம்சம் களங்கமடைய நாங்கள் பார்க்கமாட்டோம்' என்று கர்ஜித்தார்.

## XXVII

## தேவிர் யுத்தம்.

சுதந்திரத்தைக் காக்க வேறு வழி ஒன்றும் இல்லை. பிரதாபஸிம்மன் தேசத்தியாகம் செய்யத்தயாரானார். ஸிஸோதிய வம்சம் இருப்பதற்கு மேவாரில் இடமில்லை. ஆகவே அவர் சிந்து நதிக்கரை சென்று புதிய ராஜ்யத்தை ஸ்தாபிக்க எண்ணினார். ஆனால் அன்னியர்களான முஸல்மான்கள் ஆதிக்கத்தை ஒப்புக்கொள்ள விரும்பவில்லை.

பிரதாஸிம்மனும் மேவாரிலுள்ள முக்கியமான க்ஷத்திரிய வீரர்களும் குடும்பங்களுடனும் சைனியங்களுடனும் மேவாரிலிருந்து புறப்பட்டார்கள். மேவாரை விட்டு எல்லோரும் அரவலி மலைக்கு வந்து சேர்ந்தனர். மணல் பிரதேசத்திலுள்ள ஓரிடத்திற்கு வந்து இளைப்பாறினர். எதிரே மாலைக்கதிரவனொளியில் பாலைவனத்தின் மணற்பரப்பு ஜாஜ்வல்யமாகப் பிரகாசித்தது. பின்புறம் அரவலி மலையும் மேவாரும் தங்கள் வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டிருந்தன. வீரர்கள் அந்தப்பக்கம் பார்த்துத் துக்கமடைந்தனர். சூரியன் அஸ்தமனமானான். இரவு முழுதும் அங்கேயே இளைப்பாறி மறுநாள் காலையில் மேற்கொண்டு செல்ல எண்ணினர். தேசம் அவர்கள் கண் பார்வையினின்றும் மறைந்துவிடும். அந்த மலைத் தொடர் பிறகு தென்படாது. ஸிஸோதியா வம்சம் பரம்பரையாக இருந்துவந்த இடம், ஸமரஸிம்மன்,

ஸங்கிராமஸிம்மன் போன்றவர்கள்—விழித்தெழுந்ததும் வணங்கவேண்டிய மன்னர்கள்—ஆண்ட தேசம், இனி அவர்கள் வம்சத்தவர்களின் கண் பார்வையினின்றும் மறைந்துவிடும். மேவாரின் ஒவ்வொரு மலையும், ஒவ்வொரு கோட்டையும், ஒவ்வொரு மலைக் கணவாயும், இதர இடங்களும் அந்த வீரர்களின் கண்முன் நடமிடலாயின. பிரதாபஸிம்மனும் அவன் முன்னோர்களும் சுதந்தரத்திற்காக போர் புரிந்த மலைகள், சமவெளிகள், ரத்தம் பெருக்கிய இடங்கள் யாவும் அரும் காட்சிகளாகி வீரரின் இதயத்தில் சித்திரம்போல் பதியலாயின. எல்லோரும் மௌனமாக இருந்தனர். சோகத்தால் எல்லோர் உள்ளங்களும் குமுறிக் கொண்டிருந்தன. எல்லோரும் கீர்த்திமிக்க அந்த அரவலி மலைத்தொடரை நோக்கிக்கொண்டு நின்றனர். ஒவ்வொரு கூடாரத்திலும் ராஜபுத்திரஸ்திரீகள் தங்கள் குழந்தைகளை இடுப்பில் வைத்துக்கொண்டு அரவலிமலையையும் மேவாரையும் காட்டிக்கொண்டிருந்தனர்.

'ஸிஸோதியா வம்சம் வசிக்க மேவாரில் இனி இடமில்லை.' பிரதாபஸிம்மன் மிகுந்த வருத்தத்துடன் இந்த வார்த்தைகளைக் கூறினார். அவருடைய வார்த்தைகளைக் கேட்டு ராஜபுத்திர மண்டலம் மௌனம் சாதித்தது. ஆனால் அந்த மௌனத்திலிருந்து அமிர்தத்தினுமினிய ஒரு மதுரமான குரல் எழுந்தது.

'இப்பொழுதும் மேவாரில் ஸிஸோதியா வம்சம் இருக்க இடமிருக்கிறது. இன்னும் போரிட உபாயங்கள் நிறைய இருக்கின்றன!' என்றது அந்தக் குரல்.

எல்லோரும் ஆச்சரியத்துடன் அந்தப் பக்கம்

பார்த்தனர். அந்த அமிர்தமயமான வார்த்தைகளைச் சொன்னவர் ராஜமந்திரி பாமாஷாஹ். அவர் வம்சம் பரம்பரையாக மேவாரில் மந்திரிப்பதவி வகித்துவந்தது. பாமாஷாஹ் சிலகாலமாக ராணாவுடன் இல்லை. பிரதாபஸிம்மன் யுத்தத்தில் இறங்கியதும் பாமாஷாஹ் யுத்தச் செலவிற்குப் பொருள் தேடிக்கொண்டிருந்தார். திடீரென்று ஒருநாள், 'பிரதாபஸிம்மனும் இதர ஸிஸோதியா ராஜபுத்திரர்களும் மேவாரை விட்டுவிட்டு அரவலி மலையைக் கடந்து பாலைவனத்தை நோக்கிச் சென்றுகொண்டிருக்கின்றனர்' என்று கேள்விப்பட்டார். அப்பொழுது வயோதிகரான அவர் அதிவேகமாக அவர்களைத் தேடிப் புறப்பட்டார். அன்று அவரும் பிரதாபஸிம்மனின் கூடாரத்திற்கு வந்து சேர்ந்தார். சபைக்கு வந்ததும் நடுங்கும் குரலில், 'மேவாரில் இன்னும் ஸிஸோதியா வம்சத்திற்கு இடமிருக்கிறது. யுத்தம் செய்ய இன்னும் பல உபாயங்கள் இருக்கின்றன!' என்று கூறினர்.

பிரதாபஸிம்மன் ஆச்சரியமடைந்தார். அவர் ஒரு புது நம்பிக்கையும் உற்சாகமும் அடைந்து, 'திவான் சாகேப், தங்கள் வாக்கு ஒருபொழுதும் வீண் போகாது. ஆனால் யுத்தத்திற்கு வேறு உபாயம் என்ன இருக்கிறது? தாங்கள் தெரிவியுங்கள்' என்றார்.

விருத்தரான மந்திரி கைகுவித்து விநயத்துடன், 'இந்த தாஸன் வெகுநாட்களாக மந்திரி வேலைபார்த்து வருகிறேன். என் முன்னோர்கள் வம்ச பரம்பரையாக மந்திரிப் பதவியிலிருந்து மேவாரின் ராஜ்ய சம்பந்தமான காரியங்களைச் செய்து வந்தனர். அந்தப் பதவி

யினுல் பரம்பரையாகப் பணம் சேர்க்கப்பட்டிருக் கிறது. அது இன்றளவும் இருக்கிறது. அந்த தனத் தினுல் ஐம்பதினுயிரம் சேனையைப் பன்னிரண்டு வருஷகாலம் வரை போஷிக்க முடியும். உத்திர வானுல் அடியேன் அந்த தனத்தை ஸ்ரீ சரணத்தில் அர்ப்பணம் செய்யச் சித்தமாக இருக்கிறேன்' என்ருர்.

ஆபத்துக்காலத்தில் நம்பிக்கையுள்ள அந்த ஊழி யரின் கபடமற்ற ராஜ பக்தியை நோக்கிப் பிரதாப ஸிம்மனின் கண்களில் கண்ணிர் வந்துவிட்டது. அவர் அதைத் துடைத்துக்கொண்டு, 'தங்களுடைய பக்தியினுல் நான் பெரிதும் சந்தோஷமானேன். ஆனுல் ராஜாவான நான் ஒருதரம் கொடுத்த தனத்தை மீண்டும் எப்படி ஏற்றுக்கொள்ள முடி யும்? பிரதாபஸிம்மனிடம் இன்று ஒன்றுமில்லே. ஆயினும் அவன் தன்னே அண்டியிருந்தவர்களின் தனத்தை ஏற்றுக்கொள்ள முடியாதவனுக இருக் கிருன்' என்ருர்.

'மகாராணு! அடியேன் பிரபுவிற்குக் கொடுக்க வில்லே. மேவாரை ரக்ஷிக்கத்தான் கொடுக்கிறேன், ஜன்ம பூமிக்காக மேவாரின் மக்கள் வேறு செய்யக் கூடிய உதவிதான் என்ன இருக்கிறது? ஸிஸோதி யர்களின், உடல் பொருள் ஆவி யாவும் மேவாருக் குத்தான். மகாராணு இதை அறியாதவரல்லர். மேவாருக்காகத் தாங்கள் எல்லோரும் ரத்தத்தைக் கொடுக்கும்போது, கேவலம் இந்த பொருளேயாவது கொடுப்பதில் நான் பின்னடைவேனு?' என்ருர் மந்திரி.

'தங்கள் யுக்தி அபாரமானது. தங்கள் உதாரத்

துவமும் தேச பக்தியும் மகத்தானது. தங்கள் வார்த்தையைச் சிரமேற் கொள்ளுகிறேன். தாங்கள் கொடுக்கும் தனத்தைத் தேசப் பாதுகாப்புக்காக ஏற்றுக்கொள்கிறேன். அந்தத் தனத்தினுல் இன்னெரு தடவை முயற்சி செய்கிறேன். பார்க்கிறேன்! மேவார் உத்தாரணமாகிறதா இல்லையா என்பதை?' என்ருர் ராணு.

பிரதாபஸிம்மன் பிறகு தம் ராஜபுத்திர மண்டலத்தை அழைத்துக்கொண்டு அரவலி மலையைக் கடந்து மேவார் திரும்பி வந்தார். அந்தத் தனத்தினுல் மீண்டும் மேவாரை உத்தாரணம் செய்ய முனைந்தார்.

அந்த முயற்சியின் பலன் சரித்திரங்களில் எழுதப்பட்டிருக்கிறது. தேவீர் யுத்த க்ஷேத்திரத்தில் பிரதாபஸிம்மனின் பெயர் இன்றும் பதிந்திருக்கிறது. ஷஹபாஜ்கான் தன் சைனியத்துடன் தேவீரில் கூடாரம் போட்டிருந்தான். பிரதாபஸிம்மன் தேசத்தை விட்டுப் போய்விட்டார் என்று எண்ணி சிந்தையற்று நிம்மதியாக இருந்தான். திடீரென்று புயலைப்போல் பிரதாபஸிம்மனின் சேனை தேவீரை நாற்புறமும் வந்து சூழ்ந்துகொண்டது. தேவீர் ரண பூமியில் ஷஹபாஜ்கான் சேனையுடன் மடிந்தான்.

புயல் வெகு வேகமாக வீசியது. அமாயத் மலைக் கோட்டை கைவசமாயிற்று. அங்கிருந்து கோட்டை அதிகாரியான முஸல்மான் கொல்லப்பட்டான். புயல் மீண்டும் பயங்கர ரூபம் கொண்டு எழுந்தது. கமலமீர் கோட்டை மீண்டும் ராணுவின் வசமாயிற்று, அந்தக் கோட்டைக் காவலனுன அப்துல்லா சேனையுடன் அதமானுன்.

புயலின் வேகத்தில், சித்தெளர், ஆஜ்மேர், மண்டல்கட், இவைகளைத் தவிர மேவார் பிரதேசங்கள் பூராவும் மகாராணுவின் கைக்கு வந்துவிட்டன. பயந்து ஓடிய முஸல்மான் வீரர்கள் டில்லிக்குச் சென்றுர்கள். அங்கே அக்பர் பாதுஷாவிடம் பத்து வருஷ காலமாக நாம் மேவாரில் அடைந்த வெற்றிகளைப் பிரதாபஸிம்மன் ஒரே வருஷத்தில் அடைந்துவிட்டார்' என்று செய்தியை அறிவித்தனர்.

பிரதாபஸிம்மன் மேவாரைக்கைப்பற்றித் தம் பிரதான சத்துருவான மானஸிம்மனின் அம்பர் பிரதேசத்தை ஆக்கிரமித்தார். அந்த தேசத்தை நாசம் செய்து, மல்லபுரம் என்று வாணிபத்திற்கு பெயர் போன ஊரைக் கொள்ளைகொண்டார்.

சரித்திர விஷயத்தைப்பற்றி விசேஷமாக எழுதிக் கொண்டுபோகாமல் இப்பொழுது இந்த நவீனம் சம்பந்தப்பட்ட விஷயத்தை வர்ணிப்போம். ராஜபுத்திரர்கள் மீண்டும் சூரியமஹலை ஆக்கிரமித்தனர். அந்தக்கோட்டையை ஆக்கிரமணம் செய்யும்போது துர்ஜயஸிம்மனும் 'தேஜ்ஸிம்மனும் இருசகோதரர்கள்போல் பரஸ்பரம் ஒருவருடன் ஒருவர் சேர்ந்து சத்துருவுடன் போரிட்டனர். சந்தாவத்களும் ராடௌர்களும் தங்களது வீரத்தைக்காட்டித் துருக்கச்சேனையை அதிவீரத்துடன் எதிர்த்தனர். அவர்கள் வீரத்தின் முன்பு முஸல்மான்கள் நிற்க முடியவில்லை. பின் வாங்கினுர்கள்.

எதிரி தளத்தில் ஒருபுறம் தேஜ்ஸிம்மனும் மற்றொருபுறம் துர்ஜயஸிம்மனும் புகுந்தனர். இருவரும் முதலில் கோட்டைக்குள் நுழையவேண்டுமென்று அதிக பராக்கிரமத்துடன் சத்துரு சேனையைப்

பிளந்துமுன்னேறினர். அகஸ்மாத்தாகத் தேஜஸிம் மனே கோட்டையில் முதலில் பிரவேசித்தான். சிறிது நேரத்திற்கெல்லாம் சந்தாவத்தார்களும் எதிரிகளை வாட்களால் விரட்டிக் கோட்டைக்குள் வந்தார்கள்.

அப்பொழுது தேஜஸிம்மன் தன்பழைய சத்துருவான துர்ஜயஸிம்மனைப் பார்த்து கோட்டை அதிபரே! நாங்கள் தங்கள் அனுமதியின்றியே தங்கள் கோட்டைக்குள் முதலில் பிரவேசித்து விட்டோம். எங்களுடைய இந்தத் தவறை மன்னியுங்கள். நாங்கள் மகாராணுவின் காரியத்திலேயே கண்ணுக இப்படிச்செய்தோம் இப்பொழுது இதை உங்கள் ஆதிக்கத்தில் ஏற்றுக்கொள்ளுங்கள். எங்களுக்கு உத்தரவு கொடுங்கள். நாங்கள் கோட்டையினின் றும் வெளியேறுகிறோம் என்றான்.

தேஜஸிம்மனின் வார்த்தைகள் துர்ஜயஸிம்மனின் இதயத்தைப் பிளந்தன. அவன் துக்கத்தினுலும் லஜ்ஜையாலும் மெய் நலிந்து 'ராடௌர் தேஜஸிங்! அகஸ்மாத்தாகக் கோட்டையில் நீதான் பிரவேசித்தாய். அதுசரி, நீ உன் ராடௌர் களுடன் கோட்டையை ரக்ஷிப்பாயாக. நான் என் சேனையுடன் வெளியே செல்லுகிறேன். நீ கோட்டைக் கதவை மூடிக்கொள். சந்தாவத்களின் வாட்களில் சக்தியிருந்தால் அவர்கள் போராடிக் கோட்டையைக் கைப்பற்றிக் கொள்வார்கள்' என்றான்.

தேஜஸிம்மன் கம்பீரமாக, 'நாங்கள் மகாராணுவின் காரியத்திற்காக உங்கள் கோட்டைக்குள் வந்தோம். இந்தச்சமயத்தில் நாங்கள் கோட்டையைக் கைப்பற்றிக் கொண்டால் அது துரோகமாகும். ராடௌர்கள் நம்பிக்கை மோசம் செய்ய அறியா

கள். இன்னும் அன்னியனுன வைரிகளுடன் போர் முடியவில்லே. அன்னியனுடைய யுத்தம் முடிந்ததும் ராடௌர்கள் சூரியமஹலேக் கைப்பற்றிக் கொள்வதில் தாமதம் செய்யமாட்டார்கள்' என்ருன்.

தேஜ்ஸிம்மன் தனது ராடௌர் சேனேயுடன் மெள்ளக்கோட்டையை விட்டு வெளியேசென்ருன். துர்ஜயஸிம்மனின் கண்கள் கோபத்தால் சிவந்தன. ரத்தவர்ணம் ஏறிய கண்களால் தேஜ்ஸிம்மனே பார்த்துக் கொண்டே நின்ருன்.

இந்தச்சம்பவம் நடந்த சில தினங்களுக்குப் பிறகு பீமகட்கோட்டை கைவசமாயிற்று. ஆனல் விருத்தரானதேவி ஸிம்மன் கோட்டைக்குள் நுழைந்து என்ன கண்டார்? ஒன்றுமில்லே, அவருடைய குடும்பத்தாரெல்லாம் சிதையில் குதித்து அக்னியினுல் பஸ்பமாகி விட்டார்கள். தேவிஸிம்மன் அந்த யுத்தம் நடந்த இடத்தில் சிறிதுநேரம் நின்றுகொண்டிருந்தார். மனத்திற்குள் என்ன நினேத்துக்கொண்டாரோ, யார் கண்டனர்? காலே நேரம் சூரியனின் இளங்கதிர் அவர் முகத்தில் வீசியது. காலேயின் மென்காற்று அவர் வெள்ளிச்சிகையை அசைத்துச் சென்றது. காலம் ரமணீயமாக இருந்தது. ஆனல் இந்த துக்கமயமான உலகில் புத்திரசோகத்தைவிட துக்கம் வேறென்ன இருக்கிறது? தேவிஸிம்மன் மேலான வீரர், தீரர் ஆயினும் மனிதர் தானே!

தேஜ் ஸிம்மன் மெள்ள அவரருகில் வந்து, 'தாங்கள் என் தந்தையின் நெடுநாளேய நண்பர். நான் தங்களே எவ்வாறு தேற்றுவேன்? நான் தங்களுக்கு ஆறுதல் கூறத்தகுந்தவனல்ல. நான் தங்களிடம் ஒரே ஒரு வார்த்தை கேட்கிறேன். ராஜபுத்திர

வீரப்புதல்வன் ராணாவிற்காக எதிரியின்முன் நின்று யுத்தம் செய்து வீரசுவர்க்கம் புகுந்தானென்றால் ராஜபுத்திரத் தந்தை அதற்காக வருந்தலாமா?' என்றான்.

தேவி ஸிம்மன் ஒரு நீண்ட பெருமூச்சுவிட்டு, 'ராஜபுத்திரர்களுடைய, தனம், மானம், வாழ்க்கை, பந்து மித்திரர்கள், ஜாதி, சமயம் யாவும் ராணாவிற்குத்தான். ராணாவின் காரியத்தில் மகன் சந்தன் தன் உயிரை நீத்தான். அதைப்பற்றியும் யோசனை இல்லை. யுத்தத்தில் விருத்தனை விடுத்துக் குழந்தையை ஏன் மரணம் சூழ்ந்தது என்பதுதான் யோசனை! கிழவன் உயிருடன் இருக்கக் குழந்தை சென்றுவிட்டான். இதைத்தான் யோசிக்கிறேன். மகனே சந்தன், நீ ஏன் இந்த வயோதிகத் தந்தையையும் அழைத்துச் செல்லவில்லை?' என்றார்.

அந்த விருத்தரின் முகத்தில் சிறிதுநேரம் வரை துக்கத்தின் சாயை தென்பட்டது. சோகம் அவர் இதயத்தைத் துண்டு துண்டாக்கியது. கண்கள் கண்ணீரைப் பெருக்கின.

தேஜ்ஸிம்மன் பார்த்தான். தேவி ஸிம்மன் சாதாரண துக்கத்தால் கலங்குபவரல்ல. தேஜ்ஸிம்மன் அந்த துக்கத்திற்கும் மருந்தை அறிவான். அவன் தேவி ஸிம்மனின் வலது கையை எடுத்துத் தன் சிரமேல் வைத்துக்கொண்டு, 'தாங்கள் என் தர்மத்தின் தந்தை! தாங்கள் ஒரு புத்திரனை இழந்தீர்கள். ஆனால் இன்னொரு புத்திரன் ஜீவித்திருக்கிறான். தந்தையிடம் தேஜ் ஸிம்மன் ஆசீர்வாதம் அளிக்குமாறு வேண்டுகிறான். தந்தை புத்திரனுக்கு ஆசீர்வாதம் அளிப்பார்!' என்றான்.

'ஜகதீசுவரன் உன்னைச் சௌக்கியமாக வைக்கட்டும்! உன்னைத் தந்தையின் சிம்மாதனத்தி லமர்த்தட்டும்!'

'தேவிஸிம்மனின் சகாயமில்லாமல் தேஜ் ஸிம்மனுக்குத் தந்தையின் கோட்டை எப்படிக் கிடைக்கும்? ராடௌளர் வீரரே, தாங்கள்தான் தந்தையைச் சூரியமஹல் ராஜ சிம்மாதனத்திலமர்த்திப் பார்த்தீர்கள்! இன்று மகனையும் உட்காரவைத்துப் பார்க்க உதவி புரியமாட்டீர்களா?

தேவிஸிம்மன் மெதுவாகக் கண்களைத் துடைத்துக் கொண்டார். துக்கம் அவர் மனத்தினின்றும் அகன்றது. அவர் இதயத்தில் மீண்டும் வீர மதம் பரவியது. அவர் வேகமாக வாளை உருவி, 'தேவிஸிம்மனின் வாழ்க்கை லட்சியம் இன்னென்று இருக்கிறது! தேவிஸிம்மனுக்கு தன் பிரதிக்ஞை ஞாபகமிருக்கிறது' என்ருர்.

## XXVIII

## நிர்மல ஆகாயத்தில் கருமேகம்

மாலை நேரம், தேஜ் ஸிம்மன் பீல்களின் தலைவன் பீமசந்திரனைக் காணச் சென்றுகொண்டிருந்தான். அப்பொழுது தடாகத்தின் கரையில் அந்தப் பீல் கன்னிகையைக் கண்டான். அவள் அப்பொழுதும் கலகலப்பாகவே தான் இருந்தாள். அவள் சிரித்துக் கொண்டே தேஜ்ஸிம்மன் அருகில் வந்து பாடினுள்.

மதுர இளந்தென்றல் தவழ் மலர் வனமேசென்றேன்-அங்கே
கண்டதென்ன-கேட்டதென்ன கடுகியோடிவந்தேன்!

"என்ன கண்டாய், எதைக் கேட்டாய் சொல லேன்!" என்றான் தேஜ்ஸிம்மன்.

"இதைக்கேள் சொல்லுகிறேன்!"

இதழ்விரித்தே இன்ப நகை செய்யும்அந்த மலராள்—தன்
இன்பமணம் தனைவீசி இசைவண்டை யழைத்தாள் ;

"இதுதான் பார்த்தாயா? இன்னும் ஏதாவது உண்டா?"

"ஆமாம், இன்னும் இருக்கிறது!"

மதுரமிசை வண்டுபின்னர் மலர்த்தேனை உண்டான்
மகிழ்ந்தமலர் சொன்னாள், நீஎன்னுடையோனாய்!

தேஜ்ஸிம்மன் சிரித்துக்கொண்டே, "நீ ரொம் பப் பொல்லாதவள். உன் பாட்டின் பொருளைத் தெரிந்துகொண்டேன். சரி, சொல், அந்தப் புஷ்பத் தின் பெயர் என்ன?" என்றான்.

"ஏன் எனக்கு அந்தப் புஷ்பத்தின் பெயர் தெரி யாதா? குஸுமம்!' என்று கூறிவிட்டு அவள் மீண் டும் பாடலானாள்.

மதுர இதழ்த் தேனுண்டு, மதிமயங்கி வண்டு
மதுவெறியில் தடுமாறும் மயக்கம் மிகக் கொண்டு
மலர்ப்பெண்ணாள் கண்டிதனை மனமகிழ்ச்சி கொள்வாள்
மதிவண்டே, மதிவண்டே, பரிதாபம் என்பாள்!
மதுர இளந் தென்றல் தவழ் மலர்வனமே சென்றேன்
கண்டதென்ன, கேட்டதென்ன, கடுகியோடி வந்தேன்!

தேஜஸிம்மனின் முகம் தொங்கியது. அவன் கோபத்துடன் சிறுமியின் கைகளைப் பற்றிக்கொண்டு, "நீ ஆண் பிள்ளையாக இருந்தால், நீ பாடிய இந்தப் பாட்டுக்கு என்ன தண்டனை கிடைக்கும் தெரியுமா?" என்றான்.

'நான் என்ன தப்புச் செய்தேன்? என்னை விடு. இனிமேல் நான் பாடவில்லை. இந்தப் பாட்டைக் கேட்டு நீ கோபிப்பாய் என்று எனக்கெப்படித் தெரியும்?' என்றாள் சிறுமி.

'நீ பெரிய கைக்காரி! நீ என்ன கருத்தோடு இந்தப் பாட்டைப் பாடினாய்? நீ குஸுமாவைப் போய் நிந்தனை செய்தால் உனக்கு என் கையினாலேயே தண்டனை கிடைக்கும்.'

'நான் குஸுமாவைப்பற்றி ஒன்றும் அறியேன். அவள் யாரென்றுகூட நான் அறியேன். நான் ஓர் ஏழைப் பீலின் மகள். காட்டில் அலைகிறேன்; காட்டு மலர்களைக் கொய்கிறேன்; அதைப்பற்றிப் பாட்டுப் பாடுகிறேன். வேறு பூவைப்பற்றி எனக்கு என்ன தெரியும்? என்னை விடு' என்றாள் சிறுமி.

சிறுமி உண்மையில் சிறுமிதானா? அவள் உண்மையில் இயற்கைப் பூவைப்பற்றித்தான் பாடினாளா? தேஜ் ஸிம்மனால் ஒன்றும் நிச்சயம் செய்ய முடியவில்லை. அவன் மெள்ள நெற்றியில் துளிர்த்த வியர்வையைத் துடைத்துக்கொண்டு, 'நான் வீணாக இவள்மேல் கோபித்தேன் என்றெண்ணிச் சிறுமியின் கைகளை விட்டு, 'இல்லை, இல்லை; இனி நான் கோபிக்கமாட்டேன்: நீ இன்னும் ஒரு பாட்டுப்பாடு' என்றான்.

சிறுமி இந்தத்தடவை சிரித்துக்கொண்டே

"புதுமையான சேதி சொல்வேன் கேட்டுமகிழ்வாயா?
மதுரமுறும் நறுமலரை மகிழ்ந்து மணப்பாயா?"

என்று பாடினாள்.

'யாருடன் கலியாணம்' என்றான் தேஜ்.

'புஷ்பத்தை யார் மணப்பார்கள். வண்டுதான்! வேறு யார்?'

'உன் புத்தியே புத்தி! குஸுமகுமாரியாரை மணக்கப்போகிருள். இதைப்பற்றி நீ கேள்விப்பட்டாயா ?' என்ருன் தேஜ்.

'நான் ஒன்றும் கேள்விப்படவில்லை. நீ கேள்விப்பட்டிருந்தால் சொல்லு.'

குஸுமகுமாரி துர்ஜயஸிம்மனை மணப்பதாக முடிவாகிவிட்டது. ஆனல் பெண்ணிற்கு இது பிடிக்கவில்லை. அவள் அந்த மணத்தைவிட மரணமே மேல் என்று கருதுகிருள்.'

'நான் இதைக் கேள்விப்படவில்லையே!'

'பின்னே என்ன கேள்விப்பட்டாய்?'

'அந்தச் சம்மந்தம் ஸ்திரமாகிவிட்டதாக நான் இன்னும் கேள்விப்படவில்லையே!'

'பின்னே என்ன கேள்விப்பட்டாய்?'

'துர்ஜய ஸிம்மனுக்கு மணம் செய்ய ஒரு பெண்ணை நிச்சயித்திருந்தார்கள். அதற்குள் முஸல்மான்கள் சூரியமஹலை ஆக்கிரமித்துக் கோட்டையைத் தங்கள் வசப்படுத்திக் கொண்டனர்.—மேலும்—'

'மேலும் என்ன?'

'ஒன்றுமில்லை.'

'சொல். சொல்லாவிட்டால், அடிப்பேன்!'

'அந்தப்பெண் கோட்டையிலிருந்து ஓடுமுன் வரனுக்குக் காதல் வெகுமதியாக ஒரு மோதிரத்தைக் கொடுத்தாள்!'

இதைக் கேட்டு தேஜ்ஸிம்மனின் கண்கள் கோபத்தால் தீப்பொறியைக் கக்கின. ஆனல் அவன் கோபத்தை அடக்கிக்கொண்டு, நீ காட்டில் வசிப்பவள்; நாகரீகமற்ற பீல்ஜாதிப் பெண். உன்னிடம் கோபித்து என்னசெய்வது? எதிரே நில்லாதே போ!

தேஜ்ஸிம்மன் சிறுமியைத் தூக்கித் தடாகத்து தண்ணீரில் எறிந்தான்.

சிறுமி கல கலவென்று சிரித்துக்கொண்டே நீந்தித் தடாகத்தின் மறுகரை போய்ச் சேர்ந்தாள். அவள் அங்கே ஓர் உயரமான பாறைமேல் நின்றுக் கொண்டு உரத்த குரலில் பாடினாள்:

மீண்டும் ஒரு சேதிசொல்வேன் நின்று நீயும் கேட்பாய்!
குஸுமாவை மணப்பவர் யார் கூறுவேன் யான் கேளாய்!
உள்ளத்தைப் பறிகொடுத்தாள் அவனே அவள் மணப்பாள்
உண்மையை நீ கேட்டபின்னர் உள்ளமுடைந் தழுவாய்!

தேஜ்ஸிங் எழுந்து நின்றான். அந்தப் பெண்ணின் பாட்டினால் அவன் உள்ளத்தில் ஒரு போராட்டம் எழுந்தது. அதன் காரணம் பல இடங்களில் குஸும குமாரியை தேஜ்ஸிம்மன் மணக்கப்போவதாக ஜனங்கள் பேசிக்கொள்வதை அவனும் கேள்விப் பட்டிருந்தான். கணையாழி கொடுத்ததாக இந்தப் பீல்பெண் சொன்னாள். இதுவரை அதை நம்பவும் இல்லை. குஸுமகுமாரியின் சத்தியத்தில் துளிக் கூட அவனுக்கு அவநம்பிக்கை இல்லை. யுத்த காலத்தில் குஸும குமாரிடம் கேட்க அவனுக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. அதன் காரணமாகத்தான் பீல் பெண் சொன்னதும் அவனுக்குக் குஸுமாவின்மேல் உள்ள சந்தேகம் அதிகரித்தது.

இருளில் அந்த மலை வழியில் நடக்கலானான். பீல் பெண்ணின் நையாண்டிப் பாட்டு அவன் காதுகளில் ஒலித்துக்கொண் டிருப்பதைப்போல் தோன்றியது. அவன் மனம் நிலைகொள்ளவில்லை. சிறுமி பொய் ஏன் சொல்லப்போகிறாள் —இதையேதான் எண்ணியது அவன் மனம்.

ஆனால் குஸுமா உண்மையில் துர்ஜய ஸிம்ம னைக் காதலிக்கிறாளா? அவள் உண்மையில் துர்ஜய ஸிம்மனுக்கு மோதிரம் கொடுத்தாளா? அவள் தேஜ் ஸிம்மனை மறந்துவிட்டாளா? தேஜ் ஸிம்மனின் உள் ளம் பதறியது.

பதறும் உள்ளத்தில் குஸுமாவின் மலரைப் பழிக்கும் எழில்முகம் ஞாபகத்திற்கு வந்தது. அவன் மனத்திற்குள் குஸுமாவின் ரூபலாவண்யத்தைச் சித்திரம் வரையலானான். குஸுமாவின் காதல் அவன் மனத்தை இழுத்தது. அவனுடைய சந்தேகம் எல்லாம் அகன்றுவிட்டது. அவன் தன் மனத்தைத் தைரியப்படுத்திக் கொள்ளலானான். குஸுமா ஒரு பொழுதும் சத்தியத்தை அச்ட்டை செய்யமாட்டாள் 'தேஜ் ஸிங்! நீயேன் வீணாக சந்தேகப்படுகிறாய்?' என்றது மனம்.

பிறகு அவன் மனத்தில் விதவிதமான யோசனை கள் எழுந்தன. மீண்டும் உள்ளம் நடுங்கியது.

மேகம் எப்படி மெள்ளக் கிளம்பிப் பிறகு விரி ந்து கோரமான கருமைகொண்டு, உலகை அந்தகார சமுத்திரத்தில் மூழ்கவைக்கிறதோ, அதேபோலச் சந்தேகம் என்னும் மேகம் மெள்ள மெள்ளத் தனது ரூபத்தை கோரமாக்கிக்கொண்டு தேஜ்ஸிம்மனின் நிர்மலமான ஹிருதய ஆகாயத்தை மூடிக்கொண் டது. அந்த கோர மேகக்கூட்டம் அவன் உள்ளத்தி லிருந்த அறிவுப் பிரகாசத்தையும் மங்கச்செய்தது.

## XXIX

## சத்தியபரிபாலனம்

முந்தைய அத்தியாயத்தில் குஸுமகுமாரி சாரணனை சந்தித்தாளல்லவா, அவளைப்பற்றி மேற்கொண்டு அறியவேண்டாமா?

குஸுமகுமாரி ராஜபுத்திரநங்கை. குஸுமாவின் தந்தையுடன் திலகஸிம்மனுக்கு ரொம்ப நேசம் உண்டு. அவள் தந்தையை அவன் பெரிதும் மதித்து வந்தான். திலகஸிம்மன் தன் மகனுக்குக் குஸுமாவை விவாகம் செய்துகொள்ள விரும்பினன். அகஸ்மாத்தாகத் திலகஸிம்மனின் பத்துவயதுப் பையனும் ஏழு வயதுள்ள அந்தச்சிறுமியும் சந்தித்தனர். இருவரும் மனத்திற்குள் ஒருவரை ஒருவர் ஸ்வீகரித்துக்கொண்டனர். பிறகு அவர்களுடைய தாய் தந்தையர்கள் விவாக விஷயத்தை நிச்சயம் செய்தனர். விவாகத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் நடந்தன. விவாக தினமும் நெருங்கியது அந்த சமயம் டில்லி பாதுஷா, அக்பர், சித்தெளர் நகரை ஆக்கிரமித்தார். அதைக்காப்பதற்காகக் குஸுமாவின் தந்தையும் திலகஸிம்மனும் போரில் மாபெரும் வீரம் காட்டினர். கடைசியில் இருவரும் அதேபோரில் மடிந்தனர். தந்தையின் மரணத்திற்குச் சிலநாட்களிக்குப் பிறகு தேஜ்சிம்மன் தன் பிதுரார்ஜிதக் கோட்டையில் இருக்கமுடியாமல் பீல்களை ஆசிரயித்தான்.

பத்துவயதுச் சிறுவனும் ஏழுவயதுச் சிறுமியும் காதலின் மர்மத்தை என்ன அறிவார்கள்? ஆனல் ராஜபுத்திரர்கள் பாலிய !காலத்திலிருந்தே சத்தி

யத்தை காக்கக் கற்றுக்கொண் டிருந்தனர். அதே காரணம்தான் ராஜபுத்திர பெண் தன் சத்தியத்தை மறக்கவில்லை. ஒருநாள் பார்த்த பாலகனின் உருவத்தை அவள் நாளடைவில் மறந்துவிட்டாள். ஆனால் ஏழுவயதில் தான் செய்த சத்தியத்தை அவள் ஆயுளுள்ளவரை மறக்கமாட்டாள்.

திலகஸிம்மனின் வம்சத்தைக் குறைவாக்க வேண்டி, துர்ஜயஸிம்மன் தேஜ் ஸிம்மனுக்கு வாக்களித்த பெண்ணை பலாத்காரமாக மணக்க விரும்பினான். தந்தை இறந்ததும் குஸுமகுமாரி ஆதரவற்றவளானாள். ஏதோ இருந்தவர்கள் துர்ஜயஸிம்மன் பக்கம் சேர்ந்தவர்களாயும் அவனை அண்டியவர்களாயும் இருந்தனர். அவர்களும் துர்ஜயஸிம்மனுக்குக் குஸுமாவை மணம் செய்து கொடுக்க இசைந்தனர். அந்தப் பெண் வெட்கத்தை உதறி எறிந்து துர்ஜய சிம்மனுக்கு பதிலளிக்கும் முறையில் 'என் கணவன் போர்க்களத்தில் வீரகதி யடைந்தார். நான் கைம்பெண்! எப்படி விவாகம் செய்துக்கொள்ள முடியும்? ராஜபுத்திரப் பெண்கள் ஒருதடவை தான் விவாகம் செய்துகொள்வார்கள்' என்று சொல்லியனுப்பினாள்.

யௌவனத்தின் வருகை மனித வாழ்க்கையில் மாறுதல்களைச் செய்து விடுகிறது. சுபாவத்தில்கூட மாறுதல் ஏற்படுகிறது. வாலிப காலத்தின் ஆரம்பத்தில் சிறிய கிலேசமும், சிந்தையும், சோகமும்கூட நமது இதயத்தை கடினமாக்கி விடுகிறது. பிரதிக்ஞை திடமாகிறது. வருத்தத்தையும் கவலையையும் விட மனதிற்கு மேலான உபாத்தியாயர் வேறு யார்? அதற்குச் சமானமான மனோவைத்தியன்

யார்? கவலை உள்ளத்தில் வடுவை உண்டாக்கி விடுகிறது. அந்த வடுவினால் நாம் அதைரியமடைகிறோம், அழுகிறோம், கூச்சலிடுகிறோம். ஆயினும் கவலை தன் காரியத்தைச் செய்துகொண்டேதான் இருக்கிறது. அடிக்குப்பின் அடியாக சகித்து நமது மனம் திடமடைந்து விடுகிறது.

சிறு வயதில் கவலைக்குமேல் கவலையாக, ஆபத்திற்குப் பின் ஆபத்தாக அனுபவித்ததின் காரணமாக மென்மையான இதயமுள்ள பெண்ணின் உள்ளம்கூட இரும்பாகிவிட்டது. வேண்டியவர்களுடைய யோசனைகள், பயமுறுத்தல்கள், தோழிமார்களின் வேண்டுகோள், துர்ஜய ஸிம்மனின் அனுப்பிய தூதிகைகளின் வற்புறுத்தல், இவைகள் ஒன்றும் அந்தப் பெண்ணின் மனோதிடத்தை அசைக்க முடியவில்லை. அவளுடைய பாலிய காலப் பிரதிக்ஞை இன்னும் திடமடைந்தது. துர்ஜயஸிம்மனை மணக்கவேண்டுமென்று மற்றவர்கள் தூண்டத்தூண்ட அவள் அன்பு தன் பால்ய நண்பன்மேல் அதிகரிக்கலாயிற்று. அந்த வீர புருஷனின் பெயரை ஜபம் செய்யலானாள். தன் பந்துக்களின் கடும்சொற்களைச் சகிக்கப் பழகிக்கொண்டாள். தன் பிரதிக்ஞையைத் தன் மனத்திற்குள் மறைத்து வைக்கக் கற்றுக்கொண்டாள். தன் மனக்கஷ்டங்களை சொல்லிக்கொள்ள அவளுக்குச் சுற்றத்தார் இருந்தும் அவள் யாரிடமும் ஒன்றும் சொல்லவில்லை. தனியாகத் தான் இருந்தாள். தனியாக அமர்ந்து யோசிப்பாள். தனியாக மலர் கொய்து, தன் இதய பாவத்தைத் தன் இருதயத்தினிடமே சொல்வாள்.

குஸுமகுமாரி யாரிடமும் நட்புக்கொள்ளவிரும்

பவில்லை. பிறரிடம் இன்சொல் கேட்கவும் விரும்ப வில்லை, பிறருடைய கூடார்த்த வார்த்தைகளும் முகச்சுளிப்பும் அவள் உள்ளத்தை அசைக்கமுடிய வில்லை. அந்த வாலிப ராஜபுத்திர நங்கை கைம்பெண் வேஷமணிந்து தன்பாலிய காலப் பிரதிக்ஞையைக் கடைபிடித்து வரலானாள். இருள் எவ்வளவுக்கெவ் வளவு அந்தகாரமாக இருக்கிறதோ, விளக்கும் அவ் வளவுக்கவ்வளவு பிரகாசமாகத் தெரிகிறது. அம் மாதிரியே விரோதிகளின் மத்தியில் தாய்தந்தை யற்ற சிறுமியின் பிரதிக்ஞையும் திடமாக ஆகிவந் தது.

துர்ஜயஸிம்மன் விதவிதமான ஆசைகாட்டி அந்த ராஜபுத்திரப் பெண்ணின் சத்தியத்தைப் பங் கம் செய்ய முயற்சித்தான். தூதிகைகள் துர்ஜயஸிம் மனைப்பற்றிப் பிரமாதமாகப் புகழ்ந்து பேசினார் கள். அவனுடைய கணக்கற்ற ஐசுவரியத்தைப் போற் றினர். ஆனால் குஸுமகுமாரி பேசாமல் எல்லாவற் றையும்கேட்டுவிட்டுக் கடைசியில், ‘நான் கைம் பெண்! நீங்கள் ஏன் அனாதைக்கைம்பெண்ணை இப் படி இம்சிக்கிறீர்கள்?, என்பாள்.

குஸும குமாரியின் உறவினர். இதைக்கேட் டுக் கோபமடைவார்கள். நல்லது கெட்டது எதா வது சொல்வார்கள். ஆறுதல் தேறுதல் கூறுவார் கள், கடைசியில், ‘எப்படியானாலும் பெண்ணுக்கு வயதாகுமுன் விவாகம் ஆகிவிடவேண்டும், பெண் வெகுநாள்வரை கன்னியாக இருந்தால் குலத்திற்குக் களங்கம்’ என்று கூறுவார்கள்.

குஸுமா யாவற்றையும் கேட்டுவிட்டு, “நான் விதவை! ராஜபுத்திர விதவைகள் இரண்டாம்

முறை கலியாணம்செய்து வம்சத்திற்குக் களங்க முண்டாக்கவிரும்புவ தில்லை'' என்பாள்.

குஸுமா எந்த விதத்திலும் மணம்செய்து கொள்ள ஒருப்படாதபோது தூர்ஜயஸிம்மன் அவ ளுக்கு வேண்டியவர்களுடன் சேர்ந்து சூழ்ச்சிசெய்து அவளைச் சூரிய மஹலுக்கு வரவழைத்தான்.

குஸுமா தூர்ஜயஸிம்மனின் துரபிப்பிராயத்தை உணர்ந்து, 'சந்தாவத் வீரரே, தாங்கள் வெகு பிர தாபி என்று கேள்விப்பட்டிருக்கிறேன். எதை விரும்புகிறீர்களோ அதைச் செய்யமுடியும். ஆனால் தாங்கள் தீண்டுமுன் குஸுமா தற்கொலை செய்து கொண்டுவிடுவாள். தாங்கள் அதைக்கூடத் தடுக்க முடியுமா? தங்கள் கையினால்முன்பு ஒரு கைம்பெண் இறந்ததாகக் கேள்விப்படுகிறேன். திலகஸிம்மனின் விதவை மனைவியைக்கொன்றவர் தாங்கள் தாம். இன்னும் ஒரு ஸ்திரீ ஹத்தியின் பாவத்தைத் தங்கள் தலைமேல் சுமத்திக் கொள்ள விரும்புகிறீர்களா?' என்று சொல்லியனுப்பி விட்டாள்.

# XXX

## மேகம் கர்ஜிக்கிறது

இம்மாதிரி ஆபத்துக்களை எதிர்த்து நின்று குஸுமகுமாரி பல வருஷங்களைக் கழித்தாள். திடீ ரென்று ஒருநாள் நடு இரவு ஒரு சாரணன் கனவைப் போல் அவளுக்குக் காட்சிதந்து, சிறுவயதில் பழ கிய அந்தநண்பன் அவள் இதயத்தில் வசிக்கும் அந்த ராடௌர் வீரன், இன்னும் உயிருடன் இருக்கிறான்.

அவன் நாட்டை உத்தாரணம் செய்ய அன்னிய சத்துருக்களிடம் போரிட்டுக் கொண்டிருக்கிறான். பாலிய வயதில்தான் செய்தபிரதிக்ஞையை அவன் காப்பான்' என்று கூறினான்.

குஸுமாவின் இதயத்தில் சாரணனின்வார்த்தைகள் மாறிமாறி எதிரொலித்தன. கைம்பெண் விரதம் பூண்ட அவள் உள்ளத்தில் மீண்டும் ஒருபுதுப்பூரிப்பு உதயமாயிற்று. காய்ந்துபோன அவள் ஆசைக் கொடி மீண்டும் தளிர்க்க ஆரம்பித்தது. காலை இளங்காற்றின் ஸ்பரிசத்தால் மலரும் மொட்டைப் போல் சாரணனின் வார்த்தையால் குஸுமாவின் மனம் மலரலாயிற்று.

பாலிய காலத்திலிருந்து தான் ஜபம் செய்யும் பரிசயமற்ற அவ்வீரன் உயிருடன் இருக்கிறான். அவன் தன் அடையாளமாக மோதிரத்தைக் கொடுத்துத் தன்சத்தியத்தின் ஞாபகத்தை மெய்ப்படுத்தினான். குஸுமாவுக்கு அதைவிடச் சந்தோஷப்படக் கூடிய விஷயம் வேறென்ன இருக்கிறது? அவள் பாலியகால விஷயத்தை நினைவெல்லைக்குள் கொண்டு வரமுயற்சித்தாள். தன் பாலியநண்பனின் முகத்தை நினைவுபடுத்திக்கொண்டாள். மனத்திற்குள் அந்த ராடௌர் வீரனின் வாலிப சௌந்தரியத்தையும், வீரத்தையும், கற்பனை செய்யலானாள். முன்புதான் சிறுவயதில் கண்ட உருவத்தை ஞாபகப்படுத்திக் கொள்ளலானாள். ஆழ்ந்துயோசித்தபின் அந்த உருவத்தின் பிரதிபிம்மம் சிறிது அவள் இதயக்கண்ணாடியில் தோன்றி மறைந்தது. சிற்சில சமயம் ராடௌர் வீரன் நிலவில் அவள் கைபற்றிநிற்பதைப்போல் அவளுக்குத் தோன்றும் அவள் வெட்கத்தால் கண்களை

மூடிக்கொண்டாள். அந்த வீரனின் சூடான பெரு மூச்சு, அவளுடைய மலர்க்கரத்தைப் ஸ்பரிசித்த அவனுடைய உதடுகள் எல்லாம் ஒரு கனவுபோல் தோன்றின. அவள் மெள்ளக் கண் விழித்தாள். அதேசாரணன் எதிரே நின்றிருந்தான்.

குஸுமா நம்பிக்கைமோசம் செய்பவளல்ல. அவள் சாரணன் மூலம் புஷ்பம் கொடுத்தனுப்பித் தன் சத்தியத்தின் நம்பிக்கையைக் காட்டினுள். அவள் அதை ஒருபோதும் பங்கம் செய்யமாட்டாள்.

குஸுமாவின்மனத்தில் குகையில் வசிக்கும் அந்த ராடௌர் வீரனின் ஞாபகத்தைத் தவிர வேறென்றும் இல்லை. கற்பனையின் விசித்திரம்தான் என்ன? அதைமாயாவினி என்ருல் அதுமிகையாகாது! பார்க்காத ஒரு இடத்தைப்பற்றிய வர்ணனைகளைக் கேட்கிறோம்.கற்பனுசக்தியால் அந்த இடங்களை உள்ளத்தில் ஒருபடமாகத்தீட்டிக் கொள்கிறோம். பார்க்காத ஒரு புருஷனைப்பற்றி அவனுடைய சரித்திரம் தைக் கேட்டே இதயத்தில் ஒரு கற்பனைச் சித்திரம் ஏற்படுகிறது. ஜனங்கள் குணங்களைக் கொண்டே ரூபத்தைக் கற்பனைசெய்து கொள்கிறார்கள்.

குஸுமா தன் பாலியகாலத்தோழனை எண்ணும் போதெல்லாம் அந்தச்சாரணனின் முககாந்தி அவள் உள்ளத்தில் மின்னலாயிற்று. தேஜ்ஸிம்மனின் அசாதாரண வீரத்தைப்பற்றிக் கேட்கும் போது, அவனுடைய விசாலமான மார்பும் நீண்ட புஜங்களும் அவள் கற்பனையில் தோன்றின. அவள் தேஜ்ஸிம்மனின் குரலைக் கற்பனைசெய்யும்போது, சாரணனின் வீணையைப்பழிக்கும் குரல் ஞாபகத்திற்கு வந்தது. சத்தியபரிபாலனத்திற்காகக் குஸுமா உலகையே

தியாகம் செய்துவிட்டு உட்கார்ந்திருந்தாள். ஆனால் அந்தமாயாவினியான கற்பனை ஏன் அவள் யோசனையைத் தடுக்கிறதோ தெரியவில்லை, உள்ளத்தின் கடவுளை தியானம் செய்யும்போது சாரணதேவனை ஏன் கற்பனை செய்து கொள்கிருள்? கற்பனையோடு கூடவே குஸுமாவின் மனமும் ஏன் அந்தச் சாரனின் சுதந்தரபிம்பத்தின் பக்கம் ஓடுகிறது? பாவம் குஸுமா இதையெல்லாம் எப்படி அறிவாள்?

சாதகபட்சி எப்படி மேகத்தைப் பார்த்துப் பார்த்துச் சலிப்படைவதில்லையோ, அதேபோல் குஸுமாவும் அந்த மலைவழியைப் பார்த்துப் பார்த்துச் சலிப்படையாமல் அந்த நவீன சாரணனின் வருகையை எதிர்நோக்கிக் கொண்டிருந்தாள். அவள் நந்தவனத்தில் நிலவில் உலாவுவாள். இரவு முழுதும் தூங்காமல் விழித்திருப்பாள். நாளுக்குப்பின் நாளாக ளாகக் கழியலாயின. பல மாதங்கள் சென்றன. சந்திரிகையின் ஒளியில் அந்த உருவம் மீண்டும் தோன்றவில்லை. நிசப்த இரவில் உள்ளத்தை உருக்கும் அந்தக் கீதம் மீண்டும் கேட்கவில்லை.

ஆகாயத்தில் கருமேகத்துடன் மின்னல் எப்படி விளையாடுகிறதோ, அப்படிப்போல குஸுமாவின் மனத்தில் நிராசையுடன் நம்பிக்கையும் விளையாடலாயிற்று. ஆனால் குஸுமாவின் சிந்தனைகள் யாருக்கும் தெரியவராது அந்தக் குமாரியின் நிர்மலமான வாடிய முகத் தோற்றத்திலிருந்து எந்த பாவமும் வெளிப்படவில்லை.

திடீரென்று முஸல்மான்கள் சூரியமஹாலை ஆக்கிரமித்தனர். நடுநிசியில் பரிசயமற்ற ஒரு பீல் வீரன் துணையினால் குஸும குமாரி வேறு இடம் போய்ச்

சேர்ந்தாள். அதன்பின் அவள் ராஜ குடும்பத்துடன் அலையலானாள். பீமசந்திரன் குகையிலிருந்து ராஜ குடும்பத்துடன் பல இடம் சுற்றிச் சபந்தக் கோட்டையில் வசிக்கலானாள். அந்த சமயம் யுத்தம் அமைதியடைந்தது. ஆயினும் மகாராணா ராஜ மாளிகையை விடுத்துப் பர்ணசாலையிலேயே வசித்து தவசியைப்போல் காலம் கழித்தார். மகாராணியும் அவளுடைய குழந்தைகளும் அவர் கூடவே வசித்து வந்தனர். குழந்தைகள் அந்தக் குடிசையின் நாற்புறமும் ஓடி விளையாடும். சித்தௌரை வெற்றி கொள்ளும்வரை பிரதாபஸிம்மன் அரண்மனைக்குள் காலெடுத்தும் வைக்கமாட்டார். பிரதாபஸிம்மன் தம் வாழ்நாளில் சித்தௌரை வெற்றிகொள்ள முடியவில்லை. ஆகவே பிரதாபஸிம்மன் குடிசையி லேயே தம் உயிரை நீத்தார் என்று சரித்திரம் கூறுகிறது.

பர்ணசாலைக்கருகில் ஒரு சிறு நதி இருந்தது. ஜலம் கொண்டுவரக் குஸுமகுமாரி அடிக்கடி அங்கு செல்வது வழக்கம். அன்று இரவும் தண்ணீர் கொண்டுவர நதிக்குச் சென்றாள். குடத்தைக் கீழே வைத்துவிட்டுக் கார்மேகத்தால் கவிந்திருக்கும் வானை நோக்கினாள். பிறகு மனத்திற்குள் ஏதோ யோசிக்கலானாள். அவள் என்ன யோசித்தாளென்பதை நாம் எப்படி அறிவோம்?

மேகம் கர்ஜித்தெழுந்தது. குஸுமகுமாரியின் இதயமும் நடுநடுங்கியது. ஏன் நடுங்கியது? எதனால்? யார் சொல்லமுடியும்?

# XXXI

## மின்னல் வெட்டு.

திடீரென்று தூரத்தில் யாரோ பாடும் குரல் கேட்டது. அந்தச்சப்தம் குஸுமாவின் உள்ளத்தைக் கலக்கியது. அந்தச் சத்தத்தால் வெகு நாட்களாக மறந்திருந்த விஷயங்கள் மீண்டும் புதுமை கொண்டன. மடிந்துபோன ஆசைக்கொடி தலை நிமிர்ந்தது. அவள் இதயத்தில் ஆனந்த அலைகள் புரண்டன. குஸுமகுமாரி கேட்டுப் புளகித்த அந்தக் கீதத்தைப் பற்றி இங்கே விவரிப்பது அனுவசியமாகும். பாட்டின் பொருள் இதுதான்.

மழைக்காலத்தில் வானில் இந்திர தனுசு தோன்றுகிறது. பார்ப்பதற்கு அது எவ்வளவு அழகாக இருக்கிறது? சுகமாக இருக்கிறது! அதன் சோபை எவ்வளவு சௌந்தரியமாக இருக்கிறது? அந்த க்ஷண நேர வானவில்லை நம்புங்கள்! ஆனால் சபல சித்தமுள்ள ஸ்திரிகளின் வார்த்தையை நம்பாதீர்கள்!

கொடிய கருநாகத்தின் படத்தைப் பார்க்கும்போது நன்றாக இருக்கிறது. உயிரைக் கொள்ளை கொள்ளும் அந்த சர்ப்பத்தை நம்புங்கள்! ஆனால் அழகிய வேஷதாரிணியான மங்கையரை நம்பாதீர்கள்!

'உலகில் அநித்தியமானதை நித்தியம் என்றெண்ணுங்கள்! நீர்மேல் எழுத்தை நம்புங்கள். ஆனால் நாரியரின் வாக்குறுதியை நம்பாதீர்கள்!'

சாரணனின் அந்தக் கடுமொழிகள் நிறைந்த

கீதத்தைக் கேட்டுக் குஸுமகுமாரி திடுக்கிட்டாள். சாரணன் மெள்ள மெள்ளக் குஸுமாவின் அருகே வந்து, 'இந்தப்பாட்டு உனக்குப் பிடிக்கிறதா?' என்று கேட்டான்.

குஸுமா திடுக்கிட்டு நின்றுவிட்டாள். வெகு நேரம் பொறுத்து, 'இந்தப் பாடலின் அர்த்தம் எனக்கு விளங்கவில்லையே! அன்று தினம் தாங்கள் இம்மாதிரிப் பாட்டைப் பாடவில்லையே?' என்றாள்.

குஸுமாவின் சோகம் நிறைந்த வார்த்தைகளைக் கேட்டு கல்லும் கரைந்துவிடும். ஆனால் சாரணன் மனம் சற்றுக்கூட இளகவில்லை. அவன், 'இந்தப் பாட்டு நான் இசைத்ததல்ல. நான் கேள்விப்பட்டபடி பாடினேன்!' என்றான்.

'தங்களுக்கு இந்தப் பாட்டைக் கற்பித்தவர் சௌக்கியமாகத்தானே இருக்கிறார்?'

'இல்லை, அவர் இப்பொழுதெல்லாம் ஏதேதோ துர்ச்சொப்பனங்களைக் கண்டுகொண் டிருக்கிறார். சதா பெரும் யோசனையிலாழ்ந்திருக்கிறார். அவர் தமது அடையாளமாக உன்னிடம் கொடுத்த மோதிரத்தை ஒரு முறை பார்க்க விரும்புகிறார்!'

இந்தத்தடவை குஸுமா உண்மையாகவே பயந்துவிட்டாள். அவள் சாரணன் கொடுத்த மோதிரத்தைத் தன் உயிருக்குயிராகத் தான் காப்பாற்றி வைத்துக் கொண்டிருந்தாள். அடிக்கடி அதை விரலில் அணிந்து அழகு பார்த்துக்கொள்வாள். ஆனால் அவள் பீமசந்திரன் குகைக்குக் கொண்டுவரப்பட்ட அன்று மோதிரத்தைக் காணவில்லை. பலதடவை தேடியும் கிடைக்கவில்லை. அது எங்கே, எப்படி மறைந்ததென்றும் தெரியவில்லை.

சாரணன் நடுங்கும் குரலில், 'அந்த மோதிரம் எங்கே ?' என்று கேட்டான்.

குஸுமா மௌனமாக இருந்தாள். பயத்தால் அவள் ஒருபதிலும் சொல்லமுடியவில்லை.

இந்தத் தடவை சாரணன் கோபத்துடன், மோதிரம் எங்கே?' என்றான்.

குஸுமா நடுக்கத்துடன் நாத்தடுமாற, 'என் குற்றத்தை—என் அஜாக்கிரதையை மன்னித்துக் கொள்ளுங்கள். தாங்கள் அவரிடம் இதைக் கூற வேண்டாம்......' என்றாள்.

சாரணன் கோபத்துடன் இடை மறித்து 'மோதிரம் எங்கே ?' என்று கேட்டான் மறுபடியும்.

குஸுமா இந்தத்தடவை விவரமாக, 'நான் மோதிரத்தை இழந்துவிட்டேன், பெரிய அபராதத்தைச் செய்துவிட்டேன் !' என்றாள்.

'நீ உண்மையில் அபாக்கியவதி! நீ அந்த மோதிரத்தைமாத்திரம் இழக்கவில்லை. அத்துடன் தேஜ்ஸிம்மனின் காதலையும் இழந்துவிட்டாய் !'

மாறுவேஷம் புனைந்த தேஜ் ஸிம்மன் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அவள் கண்முன்னின்றும் மறைந்துவிட்டான்.

# XXXII

## தந்தையின் கோட்டைக்குள் பிரவேசம்.

தேஜ்ஸிம்மன் நடு இரவில் பீமகட் திரும்பி வந்தான்.

அவன் தனக்குள் 'நான் நம்பிக்கையற்ற ஒரு ஸ்திரீயின் வலையில் இவ்வளவுநாள் சிக்கி இருந்தேன். நான் அந்த சிக்கலிலிருந்து விடுபட்டது நல்லதாயிற்று. இன்றே நான் என் வேலைக்குச் செல்லுகிறேன்' என்று சொல்லிக்கொண்டான்.

தேஜ்ஸிம்மன் தன் சேனை கூடியிருக்குமிடம் சென்றான். அவன் வருவதைக்கண்டு எல்லோரும் ஜாக்கிரதை யடைந்தனர். அவன் உரத்த குரலில் 'நண்பர்களே! எதிரியிடம் பழி தீர்த்துக்கொள்ள இதுதான் சமயம். இப்பொழுதே என்னுடன் புறப்பட்டு வாருங்கள்' என்றான்.

தேஜ்ஸிம்மனின் வார்த்தையைக் கேட்ட வீரர்கள் சந்திரனொளியில் அவனுடைய புருவங்கள் விரிந்து நிற்பதைக் கண்டனர். அவர்களுக்கு உடனே திலகஸிம்மனின் வீரம் ஞாபகத்திற்கு வந்தது. அவர்கள் பேசாமல் சூரியமஹலை நோக்கி விரைந்தனர்.

தேஜ்ஸிம்மனின் சேனை மலைகளையும் வனங்களையும் கடந்து சூரியமஹலின் முன் வந்து சேர்ந்தது. தூரத்தில் கோட்டை மாசுபடிந்தாற்போல் தோன்றியது. விடிய இன்னும் சற்றுநேரம்தான் இருந்தது. எங்கும் நிசப்தம். சூரியமஹலில் ஒரு சந்தடியும் இல்லை. தேஜ்ஸிம்மன் சற்று நின்று தன் தந்தையின் கோட்டையைப் பார்த்தான். பிறகு மனத்திற்குள், 'தந்தையே, எனக்கு ஆசிர்வாத மளியுங்கள்.

பதினெட்டு வருஷ வனவாஸத்திற்குப் பிறகு தங்கள் மகன் கோட்டைக்குள் நுழைகிறுன்!' என்று சொல்லிக்கொண்டான்.

சேனைகள் சூரியமஹாலுக்கருகே வந்து சேர்ந்தன. சிலர் அந்த நிசப்த இரவிலேயே சத்துருவை ஆக்கிரமணம் செய்யவேண்டுமென்று யோசனை கூறினர். தேஜ்ஸிம்மன் முகம் சுளித்து, 'தந்தையின் கோட்டையில் மகன் திருடனைப்போல் நுழைய விரும்பவில்லை. தேஜ்ஸிம்மன் ராடௌர் வீரன்! ராடௌர்கள் தூங்கிக்கொண்டிருக்கும் சத்துருவை ஆக்கிரமிக்கமாட்டார்கள். அஜாக்கிரதையாக இருக்கும் சத்துருவுடன் போர்புரியவும் மாட்டார்கள்' என்றுன்.

தேஜ்ஸிம்மனின் உத்தரவுப்படி போர் முரசு அதிர்ந்தது. அதன் சத்தம் மலைகளெங்கும் எதிரொலித்தது. தேஜ்ஸிம்மன் வீரத்துடன் 'திலகஸிம்மனின் மகன் கோட்டைக்குள் பிரவேசிப்பான்! சாமர்த்தியமுள்ளவர்கள் தடுக்கலாம்' என்று கர்ஜித்தான்.

தேஜ்ஸிம்மனின் வீரமொழிகளையும் யுத்த முரசொலியையும் கேட்ட ஜனங்கள், 'இன்று தேஜ்ஸிம்மனின் வேகத்தைத் தடுப்பதென்பது மனித சக்திக்குப் புறம்பானது என்றனர். கோட்டைக் காவலர்கள் இதைக் கேட்டனர். கீழே பார்வையைச் செலுத்தினர். கூட்டம் கூட்டமாய்ச் சேனை வந்து குவிந்துக் கொண்டிருந்தது. இன்னும் மலை மீதேறி வந்து கொண்டிருந்தது.

காவலர்கள் ஓடி துர்ஜயஸிம்மனுக்குச் சேதி யறிவித்தனர். அவன் உறங்கிக்கொண்டிருந்தான். இங்

தச் செய்தியைக் கேட்டதும் எழுந்து கோட்டைமீது வந்து நின்றான். சிறிதுநேரம் பொறுத்துச் சில தினங்களுக்குமுன் ராடௌர்கள் பிரதிக்ஞை செய்தது, அவன் ஞாபகத்திற்கு வந்தது. அதை நிறைவேற்ற அவர்கள் வந்திருக்கிறார்கள் என்பதையும் உணர்ந்தான். அவன் கோபத்துடன் 'திலகஸிம்மனின் மகனே, நானும் வெகுநாளாக இந்தத் தருணத்தைத்தான் எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன். இன்று என் உள்ளம் சாந்தமடையும் இன்றையதினம் ஒன்று நீ! இல்லை நான்! இரண்டு சிங்கங்கள் ஒரு காட்டில் இருக்கமுடியாது' என்றான்.

துர்ஜயஸிம்மனின் உத்தரவுப்படி இருநூறு வீரர்கள் ஆயுதபாணிகளாகக் கோட்டையிலிருந்து வெளிப்பட்டனர். பாக்கி வீரர்களெல்லோரும் கோட்டைக்குள்ளேயே இருந்தனர். கோட்டையின் நாற்புறமும் தீப்பந்தங்கள் எரிந்தன. வானளாவும் கோட்டையின் வெளிச்சம் நாற்புறமும் வீசியது. அதன் ஒளி வானை வெளிச்சமாக்கியது.

துர்ஜயஸிம்மனின் சைனியத்தைக் கண்டு தேஜ்ஸிம்மன் மேகம்போல் கர்ஜித்தெழுந்து, தன் வீரரைப் போரிடும்படி ஆக்ஞாபித்தான். அவன் இன்று எல்லோருக்கும் முன் வாளேந்திச் சத்துரு சேனையில் குதித்தான்.

கீழிருந்து வரும் பெரும் சேனையை மேலிருந்தே தடுக்கும்படியான இடம் ஒன்றிருந்தது. ஆனால் தேஜ் ஸிம்மன் மேலே செல்வதை யாரும் தடுக்க முடியவில்லை. ராடௌர் வீரர்களின் அசாதாரணமான தைரியத்தையும் வீரத்தையும் கண்டு கோட்டையிலுள்ள வீரர்கள் ஆச்சரியமடைந்துபோயினர்.

சிறிது நேரத்திற்குள் இருநூறு சந்தாவத் வீரர்களும் பெரும் காற்றில் அகப்பட்ட துரும்புபோல் சின்னாபின்னமாயினர். எத்தனையோபேர் மாண்டனர்; எத்தனையோபேர் மலையினின்று உருண்டனர். மீதி இருந்தவர்கள் புறங்காட்டி ஓடினர். கும்பல் கும்பலாகக் குவிந்துகிடக்கும் மனித உடலை மிதித்துக்கொண்டு ராடௌர்கள் முன்னேறினார்கள். துர்ஜயஸிம்மன் மேலே இருந்து இவைகளை எல்லாம் பார்த்தான். அவன் பேசாமல் சேனையுடன் கோட்டைமேல் வந்து நின்றான். கோபத்தினால் அவன் உதடுகள் துடித்தன. கண்களில் தீப்பொறி பறந்தது. அவன் உரத்த குரலில், 'திலகஸிம்மனின் மகன் தந்தையைப்போல் போர்புரியக் கற்றிருக்கிறான். அதனால் என்ன ஆகிவிட்டது? துர்ஜயஸிம்மனும் யுத்தம்செய்யப் பயந்தவனல்ல. தேஜ்ஸிங்! வா! இன்று உனக்குப் போரின் சுவை என்னவென்பதைக் காட்டுகிறேன்! துர்ஜயஸிம்மனின் புஜத்தில் எவ்வளவு பலம் இருக்கிறதென்பதை நீ இன்று அறிந்துகொள்வாய்!' என்றான்.

சிறிது நேரத்திற்குள் தேஜ்ஸிம்மனின் சேனை அதிவேகமாகக் கோட்டை வாயிலை அணுகியது. அப்பொழுதுதான் போர் பயங்கர உருவம் கொண்டது. ராடௌர் வீரர்கள் சுவரைக் கடந்து உள்ளே போக முயற்சித்தனர். ஆனால் சந்தாவத் வீரர்கள் ஈட்டியினால் தடுத்துவிட்டனர். ஆனால் ரெடௌர்களை எவ்வளவு நேரம் தடுக்கமுடியும்? பல ராடௌர் வீரர்கள் கோட்டைமேல் ஏறிவிட்டனர். இதைக்கண்டு சந்தாவத் வீரர்கள் கீழே குதித்து, தேஜ்ஸிம்மனின் சேனையில் புகுந்து வெட்டலாயி

னர். இருதரப்பிலும் கோர யுத்தம் நிகழ்ந்தது. போர் வெறியில் மூழ்கி ஒவ்வொருவரும் தன்னை மறந்து போரிட்டனர். செம்மலையிலிருந்து மழைப் பெருக்கினுல் ஓடும் தண்ணீர்போல் உதிரம் நதியாகப் பெருகியது. வீரர்களின் தலைகள் உருண்டன. காயமடைந்த வீரர்கள் ஒருபுறம் அலறினர். ஆயினும் சத்துருக்களை வெட்டுவதில் இருதரப்பாரும் சளைக்கவில்லை. இருவரிடையேயும் நடந்த யுத்தம் நூற்றுக்கணக்கான வருஷங்களாக அவர்களிடையே புகைந்துகொண்டிருந்த வைரபாவம் ஜ்வாலைவிட்டெழுந்ததைப்போல் இருந்தது. கோட்டையருகில் இருந்த ஜனங்கள் அந்த கோர யுத்தத்தின் நெருப்பைக்கண்டு திடுக்கிட்டனர். அன்றுதினம் தன் தந்தையின் கோட்டையில் பிரவேசிக்காமல் தேஜஸிம்மன் திரும்பமாட்டான் என்பதை எல்லோரும் நிச்சயம் செய்துகொண்டனர்.

கோட்டையருகில் போர் அலை புரண்டது, யுத்தத்தின் கோர இரைச்சல் வானளாவியது. தேஜஸிம்மன் அந்த யுத்தத்தைக்கண்டு பிரமையடையாமல் கோட்டைக் கதவை உடைக்கலானுன். கதவு பலம் பொருந்தியதாயினும் இன்று அது நிலைத்து நிற்றமுடியாது. தேஜ்ஸிம்மன் தன்கையில் கோடாலி ஏந்தி அதை உடைக்கலானுன். அந்தக் கோடாரியின் அடியினுல் சந்தாவத் வீரர்களின் உள்ளம் நடுங்கியது. சிறிதுநேரத்திற்குள் கதவு உடைபட்டது. ராடௌளர்கள் கர்ஜித்தனர்.

கோட்டைக் கதவு திறந்ததும் இருதரப்பாரிடையேயும் ஒரு கோர யுத்தம் ஆரம்பமாயிற்று. அந்த வாசல் தகர்க்கப்பட்டுவிட்டதால் இனிக்

கோட்டையைக் காப்பது அசாத்தியம் என்று துர்ஜய ஸிம்மன் எண்ணினான். ஆகையால் அவன் வாசலில் வந்து எதிரிகளை உள்ளே நுழையாமல் தடுக்கலானான். கோட்டைக்குள் இருந்த வீரர்கள் எல்லோரும் வந்து ஒன்று கூடினார்கள். தேஜ் ஸிம்மன் முன் வந்து உள்ளே செல்லும் வழியைத் தடங்கலறச் செய்யலானான். இதர ராடௌளர்களும் கூட நின்று எதிர்த்தனர்.

சிறிதுநேரத்திற்குப் பிறகு இரு சமுத்திரங்கள் ஒன்றோடொன்று மோதியதைப்போல் இருந்தது. இரு தளங்களும் முனைந்து போரிட்டன. வாசலின் இருபுறத்திலும் சேனைகள் உருண்டன. பிணக் குவியலின்மேல் நின்று சந்தாவத்துகளும் ராடௌளர்களும் போரிட்டனர். துர்ஜயஸிம்மனும் அன்று உண்மையிலேயே மாபெரும் வீரன் என்ற பெயர் தாங்கி நின்றான். அவன் உடலெல்லாம் ரத்த வெள்ளமாக இருந்தது. கண்கள் நெருப்புக் கனல் போல் ஜ்வலித்தது, தேஜ்ஸிம்மனைப்பற்றி என்ன சொல்வது? ஓர் அமானுஷிகச் சக்தி போரிடுவது போல் இருந்தது. மனித சக்தியால் அன்று அவன் வேகத்தைத் தடுக்க முடியவில்லை, அவன் அகண்டமான சத்துரு சேனையை வெட்டி வீழ்த்திக்கொண்டே கோட்டைக்குள் பிரவேசித்தான். அவனுடைய வாளின்முன் சத்துரு சைனியம் பிரமித்துவிட்டது.

ராடௌளர்களின் கோலாகலம் வானத்தை எட்டியது. பதினெட்டு வருஷங்களுக்குப் பிறகு ராடௌளர்கள் சூரியமஹலில் பிரவேசித்தனர்.

# XXXII

## சோக சாந்தி

கோட்டைக்கதவு உடைப்பட்டதும், ராடௌர்கள் கோலாகலம் செய்துகொண்டு கோட்டைக்குள் பிரவேசிக்கும்போது, துர்ஜயஸிம்மன் கம்பீரமாக நின்று சிலநிமிஷங்கள் யோசித்தான். பிறகு ரத்தத்துடன் கலந்த தன் நெற்றிவேர்வையைத் துடைத்துக்கொண்டு இரு தளங்களும் போரிடுவதைப் பார்த்தான்.

தேஜ்ஸிம்மனின் வீரத்தைக்கண்டு சந்தோஷமடைந்து ராடௌர் வீரர்களே, உங்கள் போர் திறமையைக் கண்டு சந்தோஷமடைந்தேன். தேஜ்சிங் நீ உன் தந்தைக்குச் சமானமான வீரன்தான்! என்று கூறிப் பிறகு சந்தாவத் வீரர்களை அழைத்து, 'பாருங்கள். ஜாக்கிரதையாக போரிடுங்கள். நமது கோட்டை என்னவோ போய்விட்டது. ஆனால் மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்! ராஜ புத்திரர்களின் கௌரவத்தைக் காப்பாற்றுங்கள்! சந்தாவத்வம்சத்தின் மரியாதையைக் காப்பாற்றுங்கள்!" என்றான்.

இதைக்கேட்டு சந்தாவத் வீரர்கள் மேகம்போல் கர்ஜித்தெழுந்தனர். அந்தக் கர்ஜனையில் மண்ணும் விண்ணும் நடுநடுங்கின. இன்னும் ராடௌர்களுக்கு வெற்றி சந்தேகம்தான் சந்தாவத்கள் போரிட்டு மாளுவார்கள்; ஆனால் போரில் தோல்வியை ஒப்புக்கொள்ள மாட்டார்கள்!

சந்தாவத்கள் தங்கள் உயிரின் மேலிருந்த

மோகத்தைவிட்டு அதிவேகமாக ராடௌர்களின் மேல் பாய்ந்தனர். ராடௌர்கள் இந்தத்தடவை பெருவாரியாக காயமடைந்ததால் அதிகம் முன்னேற முடியவில்லை. சந்தாவத் சேனையின் கோபத்தின்முன் ராடௌர்கள் எதிர்த்து நிற்கமுடியாமல் சற்றுப் பின்வாங்கினார்கள்,

தன் சைனியம் பின்வாங்குவதைக் கண்ட தேஜ் ஸிம்மன் கோபத்தினால் கர்ஜித்து வாளைச் சுழற்ற லானான். அவனுடைய சிம்மநாதத்தால் கோட்டை அதிர்ந்தது. ஆனால் மரணத்தை எதிர் நோக்கிநிற் கும் சந்தாவத் வீரர்களின் உள்ளம் கலங்க வில்லை.

தேஜ்ஸிம்மனால் உற்சாகமளிக்கப்பட்டு, ராடௌர் வீரர்கள் ராக்ஷஸர்கள்போல் போரிட லானார்கள். சந்தாவத்துக்களுக்கும் ராடௌர் களுக்கும் கைகலந்த போர் நடந்தது. சிறிய அளவு சந்தாவத்சேனைமுன் ராடௌர்கள் நிற்க முடிய வில்லை. அவர்கள் மீண்டும் பின்வாங்கினார்கள்.

ராடௌர் சேனை பின்வாங்குவதைக் கண்ட தேவிஸிம்மன் கர்ஜித்து, 'திலகஸிம்மனின் கோட்டை யில் இன்று அவன் மகன் பிரவேசிப்பான்! தன் தந் தையின் சிம்மாதனத்தில் அமர்வான்! நீங்கள் ஏன் பின்வாங்குகிறீர்கள்?' என்றுகூறி ராடௌர் தேவி ஸிம்மன் வாளேந்தி சத்துரு சைனியத்தில் குதித் தார். அவர் சத்துரு சைனியத்தில் குதித்ததைக் கண்ட ராடௌர் சைனியம் அவரைக்காக்க முன் னேறியது. தேவிஸிம்மனின் அசாதாரணமான வீரத்தைக்கண்டு ராடௌர் சேனை புதியஉற்சாகம் கொண்டது. பார்த்துக் கொண்டிருக்கும்போதே அவர்கள் சந்தாவத்களை வெட்டி வீழ்த்தினார்கள்.

ரத்தத்தால் நனைந்த தேவிஸிம்மன் தேஜ்ஸிம்ம னின் கையைப்பற்றி, 'தேஜ்சிங் என் சங்கல்பம் பூர்த்தியாகி விட்டது. எனக்குவிடை கொடு நீ உன் தந்தையைப்போல் கீர்த்தியடைவாய். நான் உனக்கு வேறு என்ன ஆசிர்வாதமளிக்கப் போகிறேன்' என்றார்.

தேவிஸிம்மனின் உயிரற்ற சரீரம் பூமியில் சாய்ந்தது. துர்ஜயஸிம்மனின் வேகமான ஈட்டி அவர் இதயத்தில் பதிந்து விட்டது.

யுத்தம் பூர்த்தியடைந்தது. ஒவ்வொருவராகச் சகல சந்தாவத்களும் கொல்லப்பட்டனர். துர்ஜய ஸிம்மனும் அவனுடைய சில கூட்டாளிகளும் தான் உயிரோடிருந்தனர். துர்ஜயஸிம்மனின் வாள் ஒடிந் தது. அவன் உடலெல்லாம் ரத்தத்தால் நனைந்தது. கண்கள் கோபத்தால் ஜ்வலித்தன.

சந்தாவத்கள் இன்னமும் போரிடத்தயார். அவர்களுடைய போர்த்தாகம் இன்னும் தணிய வில்லை. அவர்கள் உயிருள்ளவரை அதுஅவர்களுக்கு மறக்காது.

தேஜ்ஸிம்மன் முதலிலேயே தோல்வியடைந்த துர்ஜயஸிம்மனை யாரும் கொல்லக் கூடாதென்று கட்டளை இட்டிருந்தான். இந்த சமயம் ராடௌர் கள் துர்ஜயஸிம்மனைக் கொல்லத் துடித்துக்கொண் டிருப்பதைக் கண்டு, 'துர்ஜயஸிம்மன்மேல் ஆயுதம் பிரயோகிப்பவர்கள் என் சத்துருவாகக் கருதப் படுவார்கள் என்றான்' தேஜ்ஸிம்மன்.

ராடௌர்கள் எல்லோரும் தயங்கி மௌனமாக நின்றனர். அந்த நிசப்தத்தின் மத்தியில் ஒரு விருத் தன் நடுங்கும் குரலில் எஜமானனின் கட்டளையை

தலைமேல் தாங்க வேண்டியதுதான், ஆனால் கொழுந்து விட்டெரியும் தீயைப்போல் புத்திரசோகம் என் இருதயத்தை இன்னும் தகித்துக்கொண் டிருக்கிறது. இவன்தான் என்புத்திரனைக் கொன்றவன்!' என்றான்.

துக்கம் மேலிட்ட கிழக்கோகுலதாஸ், தன் மகனைக் கொன்ற துர்ஜயஸிம்மனிடம் பழிதீர்த்துக் கொள்ள, அவன் மார்பில் கட்டாரியைப் பாய்ச்சினன். துர்ஜயஸிம்மனும் தன் உடைந்த வாளினால் கோகுலதாஸின் தலையை ஒரு வீச்சு வீசினன். இரு உயிரற்ற சரீரங்கள் கீழே வீழ்ந்தன. பலவருஷங்களுக்குப்பின் கோகுலதாஸின் புத்திர சோகம் சாந்தியடைந்தது.

## XXXIV

## காணமற் போன மோதிரம்

சாயங்காலம் குஸுமா அதே நதிக்குத் தண்ணீர் எடுக்கச் சென்றுகொண்டிருந்தாள். அவள் பல கஷ்டங்களையும் துக்கங்களையும் சகித்தாள். ஆயினும் அன்றுவரை அவள் கண்ணீர் விட்டதை யாரும் கண்டதே இல்லை. யாரிடமும் தன் கஷ்டத்தைப் பற்றி எதுவும் பேசுவதும் இல்லை. அந்த வாலிப வயதில் அவள் ஒரே ஒருநாள் இன்பக் கனவு கண்டாள். இப்பொழுது அந்தக் கனவின் ஞாபகமும் போய் விட்டது. அவள் வாழ்க்கையின் நம்பிக்கையும் மறைந்தது. உலகம் அவள் முன் இருளாகத் தோன்றியது. அவள் உள்ளம் நிராசையால் அமுங்கிக் கிடந்தது. அவள் யாருடைய அனுதாபத்தையும் எதிர்பார்க்கவில்லை.

தன் மனத்திற்குள் ஏதோ யோசனை செய்து கொண்டே நதிக்கரைக்கு வந்தாள் குலஸுமா. ஒரு முறை பின்புறம் திரும்பிப் பார்த்தாள். பின்னல் ஒரு பீல் கன்னிகை வந்துக் கொண்டிருந்தாள். குலஸுமா அவளை நோக்கி, 'பீல் பாலா, உன் தந்தை மகாராணிக்கு ஆபத்துக் காலத்தில் ஆசிரயமளித்தார். அதை மகா ராணி ஒரு நாளும் மறக்க மாட்டார்கள். நீ என்ன மகாராணியைப் பார்க்க வந்தாயா?' என்று கேட்டாள்.

'இல்லை அம்மா, நான் இந்த நதிக்கரையிலுள்ள ஒரு சம்பங்கிப் புஷ்பமொன்றைப் பறித்துப் போக வந்தேன். நீ ஒரு மலர் தருவாயா?' என்ருள் பீல் கன்னிகை.

'கொடுக்காமலென்ன? எத்தனை வேண்டுமாளுலும் எடுத்துக்கொள்!'

'உன் முகம் ஏன் இப்படி வாடி இருக்கிறது?'

இல்லையே! என் முகம் வருத்தமாகவா இருக்கிறது?

'நான் எல்லாவற்றையும் அறிவேன்!'

'எதை அறிவாய்?'

'உன் முகம் ஏன் வெளுத்திருக்கிறது என்பதை நான் அறிவேன்.'

'அப்படியாளுல் அதைச் சொல்லேன்!'

'உன் பொருள் ஏதோ காணமல் போய் விட்டது அல்லவா?'

'என்ன பொருள்?'

'ஏதோ தங்க நகை! ஹாரம், கடகம் அல்லது மோதிரம்!'

மோதிரம் என்ற பெயரைக் கேட்டதும்

குஸுமா நடுங்கினுள். அவள் மெள்ள மெள்ள, ஆமாம் சகோதரி, என்னுடைய மோதிரம் ஒன்று காணுமல் போய் விட்டது. அத்துடன் கூட விலை மதிக்க வொண்ணுத என் ரத்தினம் ஒன்றும் போய் விட்டது!' என்ருள்.

'அதற்காகவா இவ்வளவு வருந்துகிருய்? ஒன்று போனுல் மற்ருென்று கிடைக்கிறது!' என்ருள் பீல் பெண்.

'மோதிரம் கிடைக்கும். ஆனுல் இழந்த ரத்தினம் இந்த ஜன்மத்தில் மீண்டும் கிடைக்காது!'

'என்ன ரத்தினம் குஸுமா, அது? முத்து மாலையா, இல்லை, அதைவிட மதிப்பில் உயர்ந்ததா? இதயத்தில் அணியும் ரத்தினமா?'

'ஆமாம், அது இதயத்தில் அணியும் ஆபரணம் தான். முத்து மாலையைவிட விலை யுயர்ந்ததுதான்.'

'பின்னே என்ன செய்யப்போகிருய்?'

'செய்வதென்ன? இந்த ஜன்மத்தில் பல துக்கங்களைச் சகித்தேன். இதையும் சகிக்க வேண்டியது தான்.'

பீல் பெண் மிக்க கவனத்துடன் குஸுமாவின் முகத்தைப் பார்த்தாள். அவள் கண்களில் கண்ணீர் பெருகி வருவதைக் கண்டாள். அவள் திரும்பிச் சம்பங்கிப் புஷ்பத்தைப் பார்ப்பதைப் போல் தன் கண்களையும் துடைத்துக் கொண்டாள்.

பீல் பெண் வெகு நேரம் வரை மௌனமாக ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டிருந்து விட்டுக் குஸுமாவை நோக்கி, 'சகோதரி, எனக்கு அந்தச் சம்பங்கிப் பூவைப் பறித்துக் கொடு, நான் அதற்குப் பதில் இழந்து போன உன்னுடைய ரத்தினத்தைத்

திருப்பித் தருகிறேன். நான் இராப் பகல் கானிலும் மலையிலும் அலைந்து கொண்டிருக்கிறேன். அந்த ரத்தினம் என்னிடம் அகப்படும் என்ருல் அதில் நீ ஆச்சரியப்பட மாட்டாய்' என்ருள்.

பீல் கன்னிகையின் வார்த்தைகளைக் கேட்டு குஸுமா பதிலொன்றும் கூறவில்லை. அவள் மெள்ள புஷ்பத்தைப் பறித்துப் பீல் பெண்ணிடம் கொடுத்தாள். பீல் பெண் கம்பீரமாக, 'குஸும குமாரி, நாளைய தினம் உன் ரத்தினம் உனக்குக் கிடைத்து விடும்' என்ருள்.

மறு நாள் குஸும குமாரிக்கு அந்த விலையிலா ரத்தினம் கிடைத்து விட்டது. சூரிய மஹல் அதிபனை தேஜ்ஸிம்மன் கண்ணீர் உதிரும் கண்களுடன் குஸுமாவின் முகத்தைப் பார்த்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டிருந்தான். குஸுமாவின் கைகளுடன் தன் கைகளைக் கோர்த்துக் கண்ணீரால் அவளை நனைத்தான்.

குஸுமா ஆச்சரியுடன் அவன் பக்கம் பார்த்தாள். சூரியமஹல் அதிபன் வேறு யாருமல்ல; அந்தத் திவ்விய மூர்த்தி, சங்கீத வித்தியா விசாரத சாரணதேவன் தான். குஸுமா ஆனந்தத்தால் மூர்ச்சையானுள். தேஜ்ஸிம்மன் அவள் உடலைத் தன் மார்புட னணைத்து அவளை மூர்ச்சை தெளிவித்தான்.

தடபுடலாகக் குஸும குமாரிக்கும் தேஜ்ஸிம்மனுக்கும் விவாகம் நடந்தது. மகா ராணு விவாகத்திற்கு வந்திருந்தார். மகா ராணி குஸுமாவைத் தழுவிக்கொண்டு, தன் கையினுல் தன் கழுத்திலிருந்த முத்து மாலையை அவளுக்கு அணிவித்தாள்.

மகா ராணுவே வந்திருக்கும் விவாகத்திற்கு மற்ற ராடௌளர்களும், பெரிய மனிதர்களும் வந்திருந்தனர், என்று கூறவேண்டுமா? அல்லது அந்த விவாக வைபவத்தைப் பற்றி வர்ணிக்கத்தான் வேண்டுமா? தேஜ்ஸிம்மன் எல்லோரையும் தக்கபடி உபசரித்தான். எல்லோரும் சந்தோஷமாகத் தத் தம் வீடு சென்றனர்.

வாசகர்களே, சூரியமஹல் அந்தப் புரத்திற்குச் செல்லுங்கள். நாமும் புதுத் தம்பதிகளைக் கண்டு மனம் திருப்தி யடையலாம்.

குஸும குமாரியும் தேஜ்ஸிம்மனும் ரத்தின மிழைத்த சிம்மாதனத் தமர்ந்திருந்தனர். இருவர் உள்ளத்திலும் அன்று வர்ணிக்க முடியாத ஆனந்தத்தின் அலைகள் புரண்டு கொண்டிருந்தன. விசேஷமாகக் குஸுமாவின் நிலைமை விசித்திரமாக இருந்தது. அந்த எதிர்பாராத சந்திப்பின் போது, முதல் சுகத்தின் ஆனந்தத்தில் குஸும குமாரியின் உள்ளம் படபட வென்றடித்துக் கொண்டது. அவள் தன்னைச் சமாளித்துக் கொள்ள முயன்ருள். ஆயினும் ஏன் அவள் உடல் இப்படி நடுங்கியது. தேஜ்ஸிம்மனுக்காக அவள் இரவு பகல் துடித்து, விதவைக் கோலம் பூண்டு பல கஷ்டங்களைச் சகித்தாள் ஆனல் இன்று அவனை எதிரிட்டுப் பார்க்க முடியாமல் குஸுமா ஏன் இப்படி சங்கோசமடைகிருள். அதை குஸுமா அறிவாள்; இன்றேல் அவள் காதலன் தேஜ்ஸிம்மன் அறிவான். பிறர் அறிய அதிகாரம் கிடையாது.

தேஜ்ஸிம்மன் குஸுமாவின் வெட்கத்தைக் கண்டு அவளைத் தன் மார்புட னணைத்து மாறி மாறி

அவளுடைய அமிருத மயமான இதழ்களில் முத்த மிட்டு 'குஸுமா, ஒரு நாள் நான் உன்னிடம் உசித மற்ற சந்தேகம் கொண்டேன். அந்தக் குற்றத்தை மன்னிப்பாயா?' என்றான்.

குஸுமா கண்களில் கண்ணீர் பெருகத் தழு தழுத்த குரலில், 'நாதா, நீங்கள் இந்தத் தாஸியை தோஷ மடைந்தவளென்று என்றைக்கு எண்ணு கிறீர்களோ அன்று குஸுமா ஜீவித்திருக்க மாட் டாள். நான் அடைந்த கஷ்டம் என் அஜாக்கிரதை யின் பயன். தாங்கள் கொடுத்த பிரியமான மோதி ரத்தை நான் கைதவறி விட்டு விட்டேனே, அது தவறல்லவா? என்றாள்.

தேஜஸிம்மன் மீண்டும் அவள் கன்னங்களில் முத்தமிட்டுச் சிரித்துக்கொண்டே 'குஸுமா நீ சற்றும் மனம் வருந்தாதே. உன்மீது யாதொரு குற்றமும் இல்லை. அந்த மோதிரத்தை நீ இழக்க வில்லை'' என்றான்.

'நான் இழக்கவில்லையா? பின்யார் இழந்தார் கள்? அந்த மோதிரத்தை நான் ஒரு முறை கண் டால் என்மார்புட னணைத்துக்கொள்வேன். பிறகு மோதிரத்தை இழந்த துக்கம், என்மனதில் இருக் காது.'

'கடவுள் உன்மனோரதத்தைப் பூர்த்தி செய்யட் டும்!' என்று சொல்லி தேஜஸிம்மன் மோதிரத்தை எடுத்துக் குஸுமாவின் கையில் கொடுத்தான். மோதிரத்தைக்கண்டு குஸுமா ஆச்சரியமடைந்து போனாள். அவள் கண்களில் ஆனந்தக்கண்ணீர் பெருகியது. அவள் அந்த மோதிரத்தை மாறி மாறி முத்தமிட்டு மார்புடனணைத்துக் கொண்டாள்

பிறகு கண்ணீர் வடியும் கண்களுடன் கணவனைப் பார்த்தாள். அவளால் ஒன்றும் பேச முடியவில்லை.

தேஜ்ஸிம்மன் அவள் கண்ணீரைத் துடைத்து ஒரு கடிதத்தை எடுத்து அவளிடம் கொடுத்தான். குஸுமா கடிதத்தைப் படித்தாள். அது பீல்கன்னிகை அனுப்பிய கடிதம். கடிதத்தின் சாரம் வருமாறு:— 'தேஜ்சிங்,

உன் மோதிரம் ஒரு நாள் எங்கோ காணமல் போய்விட்டது. மோதிரத்தைத் தேடிக் கண்டு பிடிப்பவர்களுக்கு, "மோதிரம் இனும்" என்று நீ சொன்னது ஞாபக மிருக்கலாம். நீ குஸுமகுமாரியையும் மகாராணியையும் ஒரு நாள் எங்கள் வீட்டிற்கு அழைத்து வந்தாய். மோதிரத்தைத் தன் மார்பின்மீது வைத்துக் குஸுமா தூங்கிக் கொண்டிருந்தாள். நான் பேசாமல் அதை எடுத்துக் கொண்டேன்.

'குஸுமாவின் கையிலும் ஐந்து விரல்கள் இருக்கின்றன. என் கையிலும் ஐந்து விரல்கள் இருக்கின்றன. குஸுமா மோதிரத்தை அணிந்துகொள்ள முடியுமானல் நான் ஏன் அணிந்து கொள்ளமுடியாது? பீல்களைப் படைத்த கடவுள்தான் ராஜபுத்திரர்களையும் படைத்திருக்கிருன். இருவரும் மனிதர்கள் தாம். குஸுமா அடைவதை பீல்பெண்ணும் ஏன் அடைய முடியாது?

ஆனல் நான் சிறுமி, நான் தவறு செய்து விட்டேன் தேஜ்ஸிம்மன் நந்தவனத்துமலரை விரும்புகிருன்; வனமலரை விரும்பவில்லை. அன்று நந்தவனத்தில் மலருக்குப் பதிலாகக் குஸுமாவுக்கு மோதிரத்தைக் கொடுத்து விட்டாய் போலிருக்கிறது.

நான் வனமலரைக் கொடுத்தேன். எனக்கு நீ ஒன்றும் தரவில்லை. என் போன்ற சிறு பெண் நீ எந்தக் காரியத்தைச்செய்கிருள் என்பதை எப்படி அறிய முடியும்?

'இன்றுமாலை நான் குஸுமாவைக் காணச்சென்றிருந்தேன். அவளிடம் இரண்டு நந்தவனத்து மலர்கள் கேட்க மனம் விரும்பியது. மோதிரத்துடன் ரத்தினமும் போய்விட்டதென்று குஸுமா வருந்திஞள். நான் மோதிரத்தை எடுத்தேன். ஆஞல் ரத்தினத்தை நான் கண்ணுல்கூடப் பார்க்கவில்லை.

'குஸுமா சொன்ஞள்: "மோதிரத்தைவிட ரத்தினம் உயர்ந்தது. மோதிரம் கிடைக்கும், ரத்தினம் கிடைக்காது.'

அந்த ரத்தினம் இப்பொழுது கிடைத்துவிடும். இந்த மோதிரத்தை வைத்துக்கொண்டு நான் என்ன செய்யப்போகிறேன். யாருக்கு இந்தக் கடிதத்தை அனுப்புகிறேஞே, அவரிடமே மோதிரத்தையும் அனுப்புகிறேன். குஸுமாவின் பொருளை அவளிடமே திருப்பிக் கொடுத்துவிடவும். முடியுமாஞல் மோதிரத்துடன் ரத்தினத்தையும் கொடுப்பதாகக் கூறினேன். ஆஞல் எவ்வளவு தேடியும் ரத்தினம் கிடைக்க வில்லை. உனக்கு எங்கேயாவது அந்த ரத்தினம் கிடைக்குமாஞல் அதைக் குஸுமாவிடம் சேர்த்துவிடு. அதற்காக அவள் வருந்திக் கொண்டிருக்கிருள்.'

குஸுமா இரண்டு மூன்று தடவை கடிதத்தைப்படித்தாள். அவள் கண்கள் கலங்கின. பிறகு என்ன நினைத்துக் கொண்டாளோ சிரித்துக் கொண்டே, 'பேதைப்பெண் அழகான மோதி

ரத்தைக் கண்டு எடுத்துக்கொண்டு போய்விட்டாள்,' என்றாள். இருவரும் இரவை ஆனந்தமாய்க் கழிக்கலானார்கள்.

பீல்பெண் தன்தந்தை வீட்டில் இருந்தாள். ஆனால் அவளுக்கு வீட்டு வேலை ஒன்றும் செய்யத் தெரியாது. அவள் காட்டையும் மலையையும் சுற்றித் தடாகத்தருகில் அமர்ந்து பாடுவாள். கிராமத்தின் இதர பீல்ஸ்திரிகள் அவளை ஏசுவார்கள். அவளுடைய இந்தச்சுபாவத்தைக் கண்டு அவளை யாரும் மணம் செய்துகொள்ள வில்லை.

சிற்சிலசமயம் நடுநிசியில் நிர்ஜனமான மலையில் யாரோ ஒரு ஸ்திரிபாடும் சத்தம் வெகுநேரம் கேட்கும். சிலசமயம் பின்னிரவில் தடாகத்தருகே ஒரு ஸ்திரீயின் சாயையைக் காண்பர் சிலர். ஜனங்கள், 'இதை ஒரு தேவதை' என்று பேசிக்கொண்டனர்.

## XXXV

## ராஜபுத்திர ஆதிக்கத்தின் அஸ்தமனம்

கி. பி. 1597-ம் வருஷம் பிரதாபஸிம்மன் இவ்வுலக வாழ்வை நீத்தார். அவர் மரணமடைந்த பின், அக்பர்ஷா எட்டுவருஷம்வரை டில்லியில் பாதுஷாவாக இருந்தார். ஆனால் பிறகு அவர் மேவாரை வெற்றி கொள்ள முயற்சிக்கவே இல்லை.

ஜஹாங்கிர் பாதுஷாவாகி டில்லி சிம்மாதனத்திலமர்ந்தபிறகு மேவாரை ஜயிக்க முயற்சித்தான். பிரதாபஸிம்மனின் பதினேழு மக்களில் மூத்தவ

ஞன அமரஸிம்மன், பிரதாபஸிம்மனுக்குப் பிறகு மேவாரின்ராணு வானுன். இறக்கும் தருவாயில் பிரதாபஸிம்மன் தம் புத்திரன் அமரஸிம்மனிடம் தாய் நாட்டைக் காக்க டில்லி அதிபனுடன் போர் செய்யக் கட்டளையிட்டுச் சென்ருர். அமரஸிம்மன் தந்தையின் ஆக்ஞைப்படி நடப்பதாகப் பிரதிக்ஞை செய்து, முடிந்தவரை அதைக்காப்பாற்றியும் வந்தார். ஜஹாங்கீரின் அளவற்ற சைனியத்துடன் பதினறு வருஷகாலம் போர்புரிந்தார். பலதடவை மொகலாய சேனையைப் புறங்கண்டு, தேசத்தைக் காத்தார். ஜஹாங்கீர் பிரதாப ஸிம்மனுடைய சகோதரன் சாகரஸிம்மனுக்கு அரசு கொடுத்து, அவனை சித்தெளர் அனுப்பினுன். அவன் தன் அண்ணன் மகன் தேசத்தைக் காக்கப் போரிடுவதையும், தான் முஸல்மான்களுக்கு அடிமையாகிச் சித்தெளரைக் காக்க வந்திருப்பதையும் கண்டு வெட்கினுன். இந்தத்துக்கத்தைக் சகிக்கமுடியாமல், சித்தெளர் கோட்டையை அமரஸிம்மனிடம் கொடுத்து விட்டு, ஜஹாங்கீரிடம் சென்ருன். அங்கே சென்று அவமானத்தாலும் துக்கத்தாலும், தற்கொலை செய்து கொண்டான்.

அவ்வளவு நாள்வரை சித்தெளரைக் காக்க முடிந்தது. ஆனுல் முஸல்மான்களுடன் போரிடுவது கடினமாகி விட்டது. ஒவ்வொரு போரிலும் அமரஸிம்மனுடைய பொருளும் சேனையும் நஷ்டமடைந்து கொண்டே வந்தன. வெற்றி ஏற்பட்டாலும் அடைந்த நஷ்டத்தை ஈடுசெய்யமுடியவில்லை. அமரஸிம்மனின் முயற்சியில் எவ்விதப்பிழையும் ஏற்படவில்லை. கடைசியில் செயலற்று கி. பி. 1613-வருஷம்

மொகலாய பாதுஷாவின் ஆதிக்கத்தை ஒப்புக் கொண்டார், ராணு.

ஷாஹஜாதா சுல்தான்குர்ரத்திடம் அமர்ஸிம் மன் ஆதிக்கத்தை ஒப்புக்கொண்டார். பிறகு தம் மகன் கருணஸிம்மனைச் சுல்தானுடன் ஆஜ்மீரில் ஜஹாங்கிரின் கூடாரத்துக்கு அனுப்பினுர்.

சுல்தான் குர்ரம் (பிற்காலத்தில் இவன் ஷாஜஹான் என்ற பெயருடன் டில்லி சிம்மாதனம் ஏறினுன்.) மிக்க மரியாதையுடன் கருண ஸிம்மனைத் தன்னுடன் ஆஜ்மீர் அழைத்துச் சென்றுன். அவ்வளவு நாட்களுக்குப்பிறகு மேவாரை வெற்றி கொண்டதால் ஜஹாங்கிர் மிக்க சந்தோஷமடைந்தான். யுவராஜன் கருண ஸிம்மனின் சரணுகதியைக் கண்டு அவன் கோபம் மறைந்தது. அவன் மரியாதையுடன் கருண ஸிம்மனுக்குத் தன் சிம்மாதனத்தின் வலது புறம் ஆசன மளித்தான். பலவிதமான விளையாட்டுச் சாமான்களையும் விலையுயர்ந்த வெகுமதிகளையும் கொடுத்து அவனைத் தன் பேகம் நூர்ஜஹானிடம் அனுப்பினுன்.

நூர்ஜஹானின் பெயர் பிரசித்திபெற்றது. அவள் அழகி, புத்திசாலி அவள் தன் ரூபலாவணியத்தாலும் சாமர்த்தியத்தாலும் பாதுஷாவை தன்னிஷ்டப்படி ஆட்டிவைத்துக்கொண்டிருந்தாள். ஜஹாங்கீர் பெயரளவில்தான் பாதுஷாவாக இருந்தான். ராஜ்ய நிர்வாகம் பூராவும் நூர்ஜஹானிடம்தான் இருந்தது.

நூர்ஜஹான் யுவராஜன் கருண ஸிம்மனை அன்புடன் உட்காரவைத்து, இன்சொல் கூறித் தன் சார்பாக, விலையுயர்ந்த வெகுமதிகளைக் கொடுத்து

தன் சந்தோஷத்தை வெளியிட்டாள். நூர்ஜஹானும் ஜஹாங்கீரும் யுவ ராஜனுக்குப் பூர்த்தியான மரியாதையும் செய்தார்கள். ஆனால் அவ்வளவு உயர்ந்த மரியாதைகளைப் பெற்றும் பிரதாபஸிம்மனின் பேரனுடைய முகம் மலரவில்லை. பிரதாப ஸிம்மன் தம் தேசத்திற்குச் சுதந்திர அரசனாக இருந்தார். ஆனால் அவருடைய புத்திரனும் பேரனும் தங்கள் சுதேசத்திற்கு ஜாகீர்தாரர்களானார்கள். அதை நினைந்து கருணா ஸிம்மனின் முகம் சுண்டியது.

பாதுஷா கருணா ஸிம்மனை நன்றாக உபசரித்து விதவிதமான வெகுமதி கொடுத்து அனுப்பினான். பாதுஷா ஜஹாங்கீர் தன் தினக் குறிப்பில் கருணா ஸிம்மனுக்குப் பன்னிரண்டு லட்ச ரூபாய் மதிப்புள்ள பொருள்கள், இருநூறு குதிரைகள், ஐந்து யானைகள் வெகுமதி கொடுத்ததாக எழுதியிருக்கிறான். சுல்தான் குர்ரம் வேறு வெகுமதிகளைத் தன் சார்பாக அளித்தான்.

பாதுஷாவிடம் விடைபெற்றுக் கருணா ஸிம்மன் தன் தேசம் சென்றான். அவனுடைய மனத்தைத் திருப்திசெய்ய நடந்த விதவிதமான கொண்டாட்டங்கள் அன்றோடு முடிவடைந்தன. இரவு ஜஹாங்கிர் நூர்ஜஹானிடம் வந்தபொழுது, அவன் சிரித்துக்கொண்டே, 'கருணா ஸிம்மன் பாதுஷாவின் சபையைப் பார்த்ததில்லை. ஆகையால் எப்பொழுதும் தலைகுனிந்து உட்கார்ந்திருந்தான்' என்றான்.

நூர்ஜஹான் ஒரு மதுரச் சிரிப்புச் சிரித்துவிட்டு, அன்புப் பார்வையுடன் பாதுஷாவை நோக்கி, 'பயம் இருக்கலாம், ஆனால் நான் வேறுவிதமாக எண்ணினேன். பல வருஷங்களாக இடைவிடாத சண்டை

யினுல் மேவார் நமது வசமாகி இருக்கிறது. ஆனுல் ஸிஸோதியர்கள் வெகுகாலம் சுதந்திரர்களாக இருந்ததால் இப்பொழுதும் ஆதினத்தை ஒப்புக்கொண்டதைக் காட்டும் வகை யறியமாட்டார்கள். சுதந்திரத்தை யிழந்த துக்கம் இன்னும் அவர்கள் உள்ளத்தைவிட்டகலவில்லை. அதன் காரணமாகத்தான் கருணை ஸிம்மன் வெட்கத்தால் தலை நிமிர்ந்து உட்காரவில்லை என்று தோன்றுகிறது' என்ருள்.

நூர்ஜஹான் சொன்னது சரிதான். அமர ஸிம்மன் பிரதாப ஸிம்மனின் மகன்தானே, அவரால் அடிமைத்தனத்தைச் சகிக்கமுடியவில்லை. சுல்தான் குர்ரம் பாதுஷாவின் உத்தரவைக் கொண்டுவந்த போது அதை வாங்கிக்கொள்ள மறுத்துவிட்டார். ஷாஹஜாதா மான்ஸிம்மனுக்கு மருமகனுகவேண்டும். அவனுடைய தாய் ராஜபுத்திர நங்கை. அவன் ராஜபுத்திரர்களுக்கு உசிதமான மரியாதை செய்யத் தெரிந்தவன். அவன் அமர ஸிம்மனுக்கு, 'நாங்கள் மகா ராணுவிடம் மித்திரபாவம் தான் வைத்துக் கொள்ள விரும்புகிருேமே தவிர வேருென்றுமில்லை. ராணு ராஜதானியை விட்டு வெளியே வந்து பாதுஷாவின் இந்த உத்திரவை ஏற்றுக்கொள்ளட்டும். நாங்கள் இதே நிமிஷம் மேவாரிலிருந்து முகம்மதிய சேனை முழுதையும் அகற்றிவிடுகிருேம்' என்று சொல்லியனுப்பினுன்.

தோல்வியடைந்த அரசனை யாரும் இம்மாதிரி மரியாதை செய்வதில்லை. ஆயினும் தான் பாதுஷாவின் ஆக்கினைக் குட்பட்டு ராஜ்ய மாளவேண்டும் என்பதை எண்ணி அமர ஸிம்மன் உத்தரவைப் பெற ஷாஹஜாதாவிடம் போகவே இல்லை.

அமர ஸிம்மன் தன் முக்கியமான யோத்தாக களை சபைக்கழைத்தான். சௌஹான், ராடௌர், ஜாலா, பம்வார், ஸிஸோதியா முதலிய சகல வீரர் களும் வந்திருந்தனர். தேஜ் ஸிம்மனும் வந்திருந் தான். அந்த சமயம் அவன் வயது ஐம்பதிற்குமேல் ஆகிவிட்டது. ஆயினும் சரீரம் முன்போல் திட மாகவே இருந்தது. அவனுடன் அவன் மகன் கஜ பதி ஸிம்மனும் வந்திருந்தான்.

காவலன் வந்து கோட்டை வாசலில் சுல்தான் குர்ரம் வந்திருப்பதாகவும் ராணுவுக்கு உத்திரவைக் கொடுத்து டில்லி செல்ல விரும்புவதாகவும் தெரி வித்தான்.

சபையிலிருந்த யாவரும் மௌனம் சாதித்தனர். மகா ராணு அமரஸிம்மன் எல்லா ரஜபுத்திர யோத தாக்கள் முன்பும் கருண ஸிம்மனுக்கு முடிசூட் டினன்.

'அமர ஸிம்மன் தந்தையிடம் செய்த பிரதிக் ஞையை தன்னால் முடிந்தவரை இவ்வளவு நாள்வரை காப்பாற்றினேன். இப்பொழுது பாதுஷாவின் ஆதிக் கத்தை ஒப்புக்கொண்டு இந்த அரசை ஆள விரும்ப வில்லை. இன்றைய தினத்திலிருந்து என் மகனை இவன் அரசனுகிறன். நீதியுடன் ராஜ்ய பரிபால னம் செய்வான். நான் வயோதிகனுகிவிட்டேன். ஆகையால் நான் இன்றையிலிருந்து வானப் பிரஸ்த ஆசிரமத்தைக் கைக்கொள்ளுகிறேன்' என்றார்.

அமரஸிம்மன் கி. பி. 1616ல் தம் ராஜதானி யான உதயபூரைத் துறந்து, நசௌகி என்று பெய ருள்ள இடத்தில் குடிசை போட்டுக்கொண்டு அதில் வசிக்கலானர். வானப்பிரஸ்தம் வாங்கிக்கொண்ட

பிறகு அவர் ஐந்து வருஷ காலந்தான் ஜீவித்திருந்தார். அவர் ஜீவ தசையிலிருந்தவரை ராஜ்யத்திற்குள் காலெடுத்தும் வைக்கவில்லை. ராஜ்ய சம்பந்தமான எந்தக் காரியத்திலும் தலையிடவும் இல்லை.

அமர ஸிம்மன் வரையில்தான் ராஜபுத்திரர்களின் சுதந்திர ராஜ்யம் இருந்தது. அதன்பின் சுதந்திர ஆதிக்கம் இல்லை. ஆகையால் அமர ஸிம்மனுடன் ராஜபுத்திர ஆதிக்கம் அஸ்தமனமாயிற்று.

முற்றிற்று.